P. R. C. SERIES. 81.

# கட்டபொம்மன்

## வீர வரலாறு.

[நாடக உருவில்]



ஆக்கியோன் :

**செ. அமலன்**

கடலூர் பழைய நகர்.





திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீ வாணி விலாச அச்சகத்தின்

வெளியீடு.



விலை ரூ. 2-8-0.

P. R. C. SERIES. 81.

# கட்டபொம்மன்

## வீர வரலாறு.

[நாடக உருவில்]



ஆக்கியோன்:

**செ. அமலன்**

கடலூர் பழைய நகர்.





திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீ வாணி விலாச அச்சகத்தின்

வெளியீடு.



விலை ரூ. 2-8-0.

# கட்டபொம்மன்

## வீர வரலாறு

[நாடக உருவில்]



ஸ்ரீ வாணி விலாச அச்சகம்,
திருப்பாதிரிப்புலியூர்.

---



---

# நூன் முகம்.

**கலை** என்றால் என்ன? இயற்கை வரம், கல்வித் தேர்ச்சி, கேள்வி ஞானம், அனுபவ அறிவு இவற்றினால் பக்குவமாகப் பண்பட்ட ஒருவனது திரிகரணங்களினின்றும் வெளிப் போந்து, மக்களின் ஐம்புலன்களுக்குப் பயன் படக் கூடியதும், பகுத்தறிவுக்குப் பலன் பயக்கக் கூடியதுமான பல்வேறு செயற்கரிய சாதனைகளின் பிரதிபலிப்பே கலையாம். கலை பல திறப் பட்டவை. அவற்றுள் ஒன்று எழுத்துக் கலை.

கலைத் துறையிற் பணி யாற்ற வேண்டும் என்பது எனது நெடு நாளைய அவா. எனது இடையறா முயற்சியின் பயனாகக் கலைவானில் **'தியாகத் தீ'** என்னும் தீப் பிழம்பினைத் திகழ விட்டேன் முதன் முதலாக. அந் நூலில் வீண் வார்த்தைக் கோர்வைகளைத் தவிர்த்து, சொல் நயம், பொருட் பொலிவு, கருத்துச் செறிவு, கொள்கைப் பொதிவு ஆகியவற்றிற்கே முதலிடம் தந்தேன். அதற்குப் பாராட்டுரை பகர்ந்து மகிழ்ந்தனர் பலர். எனினும் இழிச் சொல்லும் இயம்பப் புகுந்தனர் ஒரு சிலர். இரட்டுற மொழிந்தனர் இன்னுமோர் சாரார். அழுக்கா றுற்றனர் பிறிதொரு சிலர். வரையறை யின்றி வசை பாடியோரும் உளர்.

இனி, கருத்து வேற்றுமை பல விருப்பினும் கலையமுதைச் சுவைக்க முன் வந்தோர் கணக் கற்றோர். அதன் பலன்......? என் முதல் முயற்சி முழு வெற்றியாக அமைந்தது. திராவிடத்தில்

மட்டு மின்றி பிற நாடுகளிலும் அவ்வேடு பெரி தும் வரவேற்கப் பெற்றது. அந்நூல் அங்ஙனம் வெற்றிப் பண்ணிசைக்கப் பக்க கருவியா யிருந் தது, நமது கன்னித் தமிழகத்தின் கட்டிளங் காளை, திரை வானின் ஒப்பற்ற ஒளிப் பிழம்பு, **கலைஞர் மு. கருணாநிதி** அவர்கள் மன முவந்து வழங்கி யுள்ள மதிப்புரைதா னென்றால், அது மிகை படக் கூறிய தாகாது. கலைஞர் அவர் களுக்கு யான் என்றும் கடப்பா டுடையேன்.

நிற்க. எனது எழுது கோலின் சலனத்தை அடுத்து பயன் படுத்திக் கொள்ள முற்பட்டார் **வாணி விலாச அச்சகத்தின் அதிபர் உயர்திரு. பொ. இராமலிங்கம் அவர்கள்.** அன்னியன் தமிழன்னையைப் பிணைத்த அடிமைத் தளையை அறுத் தெறிய ஆவேசமாய் அறப் போர் புரிந்து, இறுதியில் தியாகத் தீயில் வெந்து பட்ட தீரன் செக வீர பாண்டிய **கட்டபொம்மன் வீர வரலாற்றை** நல்ல முறையில் நாடகமாக அமைத்துத் தரப் பணித்தார். அன்னாரது அன்புக் கட்டளைக் கிணங்க, மிக மிகக் குறுகிய கால அளவில் இந்நூலை இயற்றி யுள்ளேன். இதன் சிறப்பினைப் பற்றி யான் ஏதும் எடுத் துரைக்கப் புக வில்லை.

**தீர்ப்பு வழங்க வேண்டியது மக்கள் மன்றம்.**

இங்ஙனம்,

கடலூர் பழைய நகர்
25—6—54

**'ஆக்கியோன்.'**

# பதிப்புரை.

**நூல்**கள் இருவகைப் படும். காலத்துக்கொவ்வ, அவ்வப்போது சமுதாயத்தில் நிலவும் சூழ்நிலைகளுக்கியையத் தீட்டப் பெறும் எழுத்தோவியங்கள் முதல் வகை. நிரந்தரமாய்ப் பேணிப் போற்றப் பெற வேண்டிய இன்சுவை இலக்கியங்கள், வீர காவியங்கள், சிந்தனைக் களஞ்சியங்கள், கலைப் பெட்டகங்கள், கருத்துக் கருவூலங்கள் இவை போன்றவை மற்றொரு பிரிவு. இவற்றுள் இரண்டாவதைச் சேர்ந்ததுதான் ஈடிணை யற்ற தேசபக்தன் **கட்டபொம்மன் வீர வரலாறு.** அதனை நாடக உருவில், நல்லதோர் முறையில், தீந் தமிழில், திறம்படத் தீட்டித் தந்திருக்கிறார் **'தியாகத் தீ'** என்னும் நூலின் வாயிலாக நாம் நாட்டுக்கு அறிமுகப் படுத்தி யுள்ளவரும் **'அமலன்'** என்னும் புனை பெயருள் மறைந்திருப்பவருமான **திரு. C. V. J. ஜோசப்** என்பார்.

மக்கள் திரளில் பல ஆக்க சக்திகள் மறைந்து கிடக்கின்றன. ஆனால் போதிய வாய்ப்பும் ஆதரவுமின்றி, நாளடைவில் அவை மக்கி, மடிந்து, மண்ணோடு மண்ணாய்ப் புதை யுண்டு போகின்றன. அத்தகைய ஆக்க சக்திகளுக்கு ஊக்க மளித்து வெளிக் கொணர்தல், மக்களுக்குச் செய்யப் படும் மகத்தான சேவை யென்றால், திறன் மிகு நாடகாசிரியர் ஒருவரை அறிமுகப் படுத்தியதன் மூலம், நானும் போற்றத் தக்கதொரு தொண்டு செய்திருக்கிறேன் என்று துணிந்து கூறுவேன், தற் புகழ்ச்சி யென்று யாரும் தவறாகக் கருதினாலும்

அன்னாரின் நடை நயத்திலே தேனைச் சுவைக்கிறோம், தென்றலை நுகர்கிறோம், கூர் வாளைக் காண்கிறோம், கோடை யிடியின் குமுறலைக் கேட்கிறோம். நுண்ணறி வெனும் தூரியத்தைக் கருத்துக் குழம்பிலே தோய்த்து, மக்களின் இதயக் கிழியிலே எழுச்சி என்னும் எழிலோவியம் தீட்டுகிறார் அன்பர் **அமலன்.** அவருக்கு என் ஆழ்ந்த நன்றி. அவரது விருப்பத்திற்கிணங்க, **இந் நூலை விடுதலை வீரன் கட்டபொம்மன் ஞாபகார்த்தத்திற்குச் சமர்ப்பணம்** செய்கிறேன்.

வணக்கம்,

**பொ. இராமலிங்கம்,**

*திருப்பாதிரிப்புலியூர்.*

---

**குறிப்பு:-** இந்நூலில் வரும் உரை யாடல்களை நாடக அரங்கிலோ, திரைப் படத்திலோ, பயன்படுத்த விரும்புவோர், ஆசிரியரின் அனுமதியையும், பிரசுரகர்த்தரின் அனுமதியையும், பெறவேண்டும்.


பிரசுர கர்த்தர் முகவரி:
**P. இராமலிங்கம்,**
***79 சுப்புராயசெட்டி வீதி,***
***திருப்பாதிரிப்புலியூர்.***

ஆசிரியர் முகவரி:
**C.V.J. ஜோசப் (செ. அமலன்)**
***13, அஞ்சல் அலுவலக வீதி,***
***கடலூர் பழைய நகரம்.***
தென்னாற்காடு மாவட்டம்.

விடுதலைப் போரில் வீழ்ந்துபட்ட வீரன்

ஜெகவீர பாண்டிய

# கட்டபொம்மன்

ஞாபகார்த்தத்திற்குச்

**சமர்ப்பணம்.**

# கட்டபொம்மன்

[வீர வரலாறு]

## நடர்.

| | |
|---|---|
| கட்டபொம்மன் (கருத்தையா) | — பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத் ததிபர். |
| ஊமைத்துரை (சிவத்தையா), துளசிங்கம் (சுப்பா நாயக்கன்) | — கட்டபொம்மனின் சகோதரர்கள். |
| பாதர் வெள்ளை | — கட்டபொம்மனின் அபிமானப் புத்திரன். மறவர் குல மாவீரன். |
| வெள்ளையம்மாள் | — பாதர் வெள்ளை மனைவி. |
| சிவசுப்ரமணிய பிள்ளை | — பாஞ்சாலங்குறிச்சி தானபதி. |
| எட்டப்பன் | — எட்டயா புரத் ததிபர். |
| தொண்டைமான் | — புதுக் கோட்டை யதிபர். |
| மருது சகோதரர் | — சிவகெங்கை யதிபர்கள். |
| க்ளைவ் | — சென்னை கவர்னர். |
| மாக்ஸ்வெல், பானர்மென், ஜாக்ஸன், க்ளார்க் | — ஆங்கில தளபதிகள், |

[இன்னும் பலர்.]

# கட்டபொம்மன்

## வீர வரலாறு.

[ நாடக உருவில். ]

## களம் க.

இடம்:- திருவிடநல்லூர் தன்மானக் கழகக் கட்டிடம்.

காலம்:- இரவு

உறுப்பினர்:-கழக நடிகர்கள், தலைவர் முதலானோர்.

[கட்டபொம்மன் நினைவு விழா நடைபெறல். மக்கள் குழுமி யிருத்தல். விழாத் தலைவர்உரை நிகழ்த்தல்.]

தலைவர்:— பேரன்பு மிக்க பெரியோர்களே! தாய்மார்களே! தோழர்களே! தோழியர்களே!

சுரண்டல், சுயநலம், ஏகாதிபத்தியம்........ இவை மூன்றும் சுதந்தர சமுதாயத்தின் முப் பெரும் வைரிகள். இவற்றுள் மூன்ருவதான ஏகாதிபத்தியத்தை... நமது தண்டமிழ் நாட்டில்... தாயகத்து மண்ணில் வேரூன்றி விட்ட ஆங்கில ஆதிக்கத்தை முறியடிக்க... முதுகுகாண... முன் வந்தவர்களில்... முழுமூச்சுடன முனைந்தவர்களில் முக்கியமானவர்....முதன்மையானவர்....பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்தின் பார்த்திபன்...ஜெகவீர பாண்டிய கட்டபொம்மன் தான்.

[ஆரவாரம்]

இன்று சுதந்தர மாளிகையிலே சுக வாழ்வு நடத்துகிறோம். ஆனல் அதற்கு அன்று அஸ்தி

வாரம் அமைத்துத் தந்தவன் அரும் பெரும் தேச பக்தன் ஜெக வீரன். இன்று தன்னரசுத் தரு நிழலில் தண்மை காண்கிறோம். ஆனால் அவ் விருட்சத்துக்கு வித்திட்டவன் வீர பாண்டியன்.

[ஆரவாரம்]

அன்னியன் தமிழன்னையைப் பிணைத்தான் அடிமைத் தளையால் அதை அறுத்தெறிய முற் பட்டான் அடலேறு ஆங்கிலேயனை எதிர்த்து ஆவேசமாய் அமர் புரிந்தான்! அவ்வரும் பணியில் தன் வாழ்நாளின் பெரும் பகுதியைத் தேய விட் டான். முடிவில் உலுத்தரின் துரோகத்துக்கு இலக்காகி உயிர்த் தியாகம் செய்தான் உத்தமன். சரித்திரத்தில் சாகா வரமும் பெற்று விட்டான்.

[ஆரவாரம்]

வெட்கப்படுகிறோம்... அந்த தீரனின் தியாகத் தைப் போற்ற.... அவனது வீரத்தை ஏற்ற...... அவ னது நாட்டுப் பற்றைப் பறை சாற்ற.... இதுகாறும் நாட்டில் ஞாபகச் சின்னம் எதுவும் நிறுவப் பட வில்லை என்பதை எண்ணுகையில். விடு பட்டுப் போன அப் புனிதப் பணியினைப் பூர்த்தி செய்ய முன் வந்துள்ளனர் இவ்வூர் தன் மானக் கழகத் தினர். வாயார வாழ்த்துகிறோம், மனமாரப் போற்றுகிறோம், அவர்களது புனிதமான தொண்டை! பொது நல் சேவையை!

கட்டபொம்மன் நினைவு விழாவில் அவனது வீர வரலாற்றை நாடகமாக நடத்தி, நிதி திரட்டி, அதனைக் கொண்டே அவனுக்கு ஞாபகச் சின்னம் நிர்மாணிக்க முடிவு செய்துள்ளனர் கழகத்தினர்... நல்லதொரு ஏற்பாடு.

நீங்கள் அளிக்கும் ஒவ்வொரு நாணயமும் வீரத்துக்கு வழங்கப் படும் வெகுமானம்! நாட்டுப் பற்றுக்கு நல்கப் படும் நன்கொடை! வாரி வழங்

குங்கள் வள்ளன்மையோடு என்று வேண்டிக் கொள்கிறேன்.

........இனி நாடகத்தைக் கண்டு களியுங்கள்.

[பலத்த ஆரவாரத்துக்கிடையே தலைவர் அமர்தல். நாடகம் துவக்கப் பெறல்]

[மாற்றம்]



# களம் உ.

இடம்:- பாஞ்சாலங் குறிச்சியில் கட்டபொம்மனின் கொலு மண்டபம்.

காலம்:- காலை.

உறுப்பினர்:- கட்டபொம்மன், ஊமைத்துரை, துளசிங்கம், தானாபதி சிவசுப்ரமணிய பிள்ளை, முதலானோர்.

[வாட்போர், மல் யுத்தம், சேவல் சண்டை முதலியவை நடை பெற்று முடிவுறல்]

கட்ட:— அன்பார்ந்த மக்களே! ஒண்ட வந்த ஒட்டகம் இன்று உரிமையாளனையே ஓட்டத் தொடங்கிவிட்டது! சுரண்டிப்பிழைக்கும் சோதாக் கும்பல் நம்மைச் சுற்றி வளைத்து விட்டது! அண்டி வாழ வந்த ஆண்டிகள் கூட்டம் ஆட்சிப் பீடத்தில் அமரும் அளவுக்கு ஆகிவிட்டது! உயிர் பிழைக்க ஊர் விட்டு ஊர் வந்த உலுத்தர் குழாம் உரிமை கொண்டாடுகிறது! எங்கே? தண்டமிழ் நாட்டில்!... நமது தாயகத்து மண்ணில்!...... அடுக்குமா இந்தக்கொடுமை? அனுமதிக்கலாமா இந்த அக்ரமத்தை? விட்டு வைக்கலாமா இந்த வீணர் குழுவை?..........

**ஊமை:—** [குறுக்கிட்டு] கூடாது! கூடவே கூடாது!! கட்டளை யிடுங்கள் அண்ணா! கண்ட கண்ட இடங்களில் கண்டம் துண்டமாகப் பிளந் தெறிகிறேன் அந்தக் கயவர்களின் உடல்களை.

**கட்ட:—** தம்பி சிவத்தையா! காலம் வரும்...... காத்திரு அது வரை.

**தானாபதி:—** அரசர் ஏறே! ஆங்கிலேயனின் அட்டகாசம் ஆற்காட்டையும் அணுகி விட்டது.

**ஊமை:—** [வீரா வேசமாய்] ஆஹ!... தானாபதி யாரே! அப்பாதகர்களின் பாதம் இப்பாண்டி மண்டலத்தில் பட்டால்...? பாஞ்சைப் பதி பதி லிறுக்கும்!......பழி வாங்கும்! பரங்கிகளின் பச்சை ரத்தத்தைப் பறவைகளுக்குப் பறிமாறும்!

**தானா:-** எட்டயாபுரத் தரசர் கும்பினியாருடன் இரகசியத் தொடர்பு கொண் டிருப்பதாகத் தெரி கிறது.

**கட்ட:-** ஆம்! எட்டப்ப நாயக்கன்! மற்றவ னோடு உறவு பூண்டு உற்றவனுக்கே உலை வைக்கத் துடிக்கும் உலுத்தன்! கோடரிக் காம்பு! குடி கேடன்! குலத் துரோகி!

**துளசி:—** எட்டப்பனின் கொட்டத்தை மட்டந் தட்ட வேண்டும்.

**ஊமை:—** ஆமாம் தம்பி துளசிங்கா! அவன் திட்டத்தையும் தரை மட்ட மாக்க வேண்டும்.

[மாற்றம்]



# களம் ௩.

**இடம்:-** எட்டயாபுரம் அரண்மனை.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** எட்டப்ப நாயக்கர், அமைச்சர்கள், முதலானோர்.

[மக்கள், மந்திரிகள் பிரதானிகள், தளத் தலைவர்கள் முதலானோர் அவைக் களத்தில் குழுமியிருத்தல். அரசர் பிரவேசித்தல்.]

**கட்டியக்காரன்:—** *ராஜாதி ராஜ, ராஜ மார்த்தாண்ட, ராஜ கெம்பீர, ராஜ கோலாகல, எட்டப்ப மகாராஜா பராக்! பராக்!!*

[எல்லோரும் எழுந்து மரியாதை தெரிவித்து அமர்தல். அரசர் அரியாதனத்தில் அமர்தல்.]

**எட்ட:-** *அமைச்சர்களே! பிரதானிகளே! தளத் தலைவர்களே! பல்லாரி நாட்டிலிருந்து பஞ்சம் பிழைக்க பாத்திரமேந்தி வந்த பரதேசிகளின் பரம்பரை வழி வந்த பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தான் இன்று நமக்குப் பணிய மறுக்கிறான், பவிசு கொண்டாடுகிறான்.....*

**திவான் கோவிந்தாச்சாரி:—** [இடை மறித்து] *ஹூம்! வளர்த்த கடா மார்பில் பாய்கிறது.*

**எட்ட:—** *அவ்வஞ்சகனை எப்படியும் வஞ்சம் தீர்த்தாக வேண்டும். ஆனால் படை பலம்......?*

**தளபதி:—** *பற்றாது அரசே!*

**எட்ட:—** *அப்படியானால் வழி?*

**கோவிந்:-** *அரசே! பஞ்ச தந்திரங்களில் இரண்டாவதைப் பயன் படுத்திப் பார்க்கலாமே!*

எட்ட:— அப்படியென்றால்?

**கோவிந்:-** சுகிர்ல்லாபம்... அதாவது நட்புப் பேறு.

எட்ட:—விளக்கம் வேண்டுகிறேன்.

**கோவிந்:—** அரசே! நமது ஆங்கில நண்பர் களோடு ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டால்....? உறவு வளர்ந்தது போலவுமிருக்கும்; அதோடு ஆபத்து காலத்தில் அநுகூலமாகவுமிருக்கும்.

[அவைக் களத்தில் பரபரப்பு. நானாவிதக் குரல்கள் எழல்]

'அரசே! அரவின் நட்பு அறவே கூடாது! ஆபத்து!!'

'ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக் கும்பலுக் குத்தானே கொண்டாட்டம்?'

'பாண்டி நாட்டுப் பறவைகளின் கூட்டிலே பரங்கி நரியா? கூடாது அரசே!'

'தமிழ் அன்னையின் இரு புதல்வருக்கு இடையே தோன்றிய பூசலில் தலையிட அன்னி யனை அழைப்பதா?'

'பூனைகளுக்கு மந்தி மத்தியஸ்தம் செய்த கதை போலாகி விடக் கூடாது'

'சமரச முயற்சியால் சரிக்கட்டி விடலாம்'

**கோவிந்:—**[கையமர்த்தி] அமைதி! அமைதி!! உங்கள் கூற்றிலும் ஓரளவு உண்மை இல்லாமல் இல்லை.... ஆனால்!... நமது உடை வாளாயிருந்தால் என்ன? உருவி உடலில் பாய்ச்சினால் ஊறு நேரா தா? வென்னீரா யிருந்தாலென்ன? நெருப்பை அவி யாமலா விட்டு விடும்? தாக்க வருபவன் தம்பியானால் என்ன தனயனானால் என்ன? குற்றம் செய்பவன் உற்றவன் ஆனால் என்ன? உறவினன் ஆனால்

என்ன? மற்றவன் உறவோ, மாற்றான் உதவியோ கொண்டு மட்டம் தட்ட வேண்டியதுதான். அது தான் அரசியல் தத்துவம்... எரிமலை குமுறும் முன் ஏற்பாடுகளைத் தொடங்கி விட வேண்டும். காட்டாற்று வெள்ளம் கரை புரண்டு வருவதற்குள் அணைகளை பலப் படுத்திக் கொள்ள வேண்டும்...... அரசே!

எட்ட;- அப்படியே ஆமோதிக்கிறேன் அமைச்சரின் அறி வுரைகளை.

[மாற்றம்]



## களம் ௪.

இடம்:- பாஞ்சையில் சக்கதேவி ஆலயம்.

காலம்:- காலை.

உறுப்பினர்:- கட்டபொம்மன், ஊமைத்துரை, துளசிங்கம் தாளுபதி, முதலானோர்.

[சக்க தேவியின் சந்நதியில் பிரார்த்தனை, தீபாராதனை நடைபெறல்.]

கட்ட:—[சிரம் தாழ்த்தி, கரம் கூப்பி] தாயே! சக்கம்மா! நாற்பத்தாறு தலைமுறைகள் கடந்து விட்டன, எமது முன்னோர் தமிழகத்தைத் தமது தாயக மாக்கி. அன்று தொட்டு இன்று வரை, எவ்வித இன்ன லின்றி, இடுக்கண் இன்றி, இடையூறின்றி இனிது வாழ்ந்து வருகிறோம், தேவியின் திரு வருளால். ஆனல், வடக்கே இருந்து வந்து கொண்டிருக்கும் வதந்திகள் வருத்தம் தருகின்றன. வர்த்தகராய் வந்த வெள்ளையர், இன்று மண்ணாசையால் மதி யிழந்து மதம் பிடித் தலைகின்றனர். தென்னகத்திலும் திரை யிட்டிருக்கும் யுத்த மேகங்கள் தீங்கிழைக்கக் குமுறுகின்றன. நாச மழை நாட்டில் எந்த விநாடியும் பொழியக் கூடும்.

ஏய்த்து வாழும் எத்தர்கள்.... எமது ஏதிலராம் வெள்ளையரின் சூழ்ச்சி வீழ்ச்சியுற, அவர்களின் தகாத செயல் தகர்த்தெறியப் பட...... தயை புரிவாய் தாயே!

[தீபாராதனைக்குப் பின் பிரசாதம் வழங்கப் பெறல். பக்திப் பிரவாகம் உள்ளங்களில் ஊற்றெடுக்க அனைவரும் பிரசாதம் பெற்றுக் கொள்ளல்]

துளசிங்கம்:- அண்ணா! வருந்தற்க! வல்லபி நமது வலக் கரமாயிருப்பாள்.

தானாபதி:- தர்மம் தழைத்தோங்கும் தமிழகத்தின் தவப் புதல்வராம் தங்களைத் தாய் தலை குனிய வைக்க மாட்டாள்.

ஊமை:—அண்ணா! நம் உடலில் உரம் உண்டு! உள்ளத்தில் உறுதி உண்டு! உற்சாகம் உண்டு! ஊக்கம் உண்டு!

துளசி:- உறுதுணையாக தானாபதியாரின் மதிநுட்ப முண்டு.

ஊமை:- சக்தியும், யுக்தியும், சேர்ந்தால் கதி கலங்கி விடுவார்கள் கம்பெனியார்.

கட்ட:- [சக்கதேவி சிலையைக் காட்டி] இதோ நம் குலதெய்வம் அன்னை பராசக்தியின் மீதாணை!

ஊமை:- வீரத்தின் மீதாணை!

துளசி:- தாய் நாட்டு மண்ணின் மீதாணை!

தானா:- தர்மத்தின் மீதாணை!

எல்லோரும்:- வெள்ளையரின் ஆதிக்கத்தை வேரறுத்து வீழ்த்தும் வரை சற்றும் ஓயமாட்டோம்!

[பிரதிக்ஞை செய்தல்]

[குடி மக்கள் வந்து வணங்கி நிற்றல்]

**மக்கள் தலைவர்;**—அரசே! அடுத்துள்ள வயல் வெளிகளில் விலங்கினங்கள் விளைவிக்கும் நாசம் விபரீதமாய்ப் போய்க் கொண்டிருக்கிறது.

**கட்ட:**— இதோ! இப்பொழுதே வேட்டைக்கு விரைகின்றோம். விடுங்கள் கவலையை. தம்பி சிவத்தையா! வேட்டைக்கு வேண்டியவற்றை உடனே சித்தப் படுத்து.

**ஊமை:**—ஆகட்டும் அண்ணா.

[குடிமக்கள் வணங்கிப் போதல்]

[**மாற்றம்**]



# களம் ரு.

**இடம்:-** வல்ல நாட்டு வயல் வெளி.

**காலம்:-** மாலை.

**உறுப்பினர்:-** பாதர் வெள்ளை, வீரத்தேவர் கம்பெனி காரியஸ்தர், முதலானோர்.

[நெற்களத்தில் நெல்லை சேகரித்து மூட்டைகளை கம்பெனி காரியஸ்தர்கள் கணக்கிட்டு நிற்றல்.]

[பாதர் வெள்ளை வருகை]

**பாதர்:-** [கம்பெனி காரியஸ்தரை நோக்கி] ஏய்! கம்பெனியானுக்குக் கால் வருடும் கருங்காலிகளே! வல்ல நாட்டிலுமா வாலாட்டுகிறீர்கள்? இந்த நெல்லில் ஒரு மணிகூட இதை விட்டு அப்பால் போகக் கூடாது. ஜாக்கிரதை! அத்தனையும் ஏழைகளுக்குப் பகிர்ந்தளிக்கப் பட வேண்டும்.

**காரியஸ்தன்;-** [திடுக்கிட்டு] ஐயையோ! இது கம்பெனி நெல்லுங்க........வந்து........

**பாதர்:—**[குறுக்கிட்டு] ஏண்டா! கம்பெனியான் கலப்பை பிடித்தானா? கரடு திருத்தினானா? களை எடுத்தானா? கதிர் அறுத்தானா? கழனியில் கஷ்ட மேதும் பட்டானா?கப்பம் என்ற பெயரால் கவர்ந்து செல்கிறான் கள்வன்!.... அவ்வளவுதானே?.... உம் சீக்கிரம் ஆகட்டும்.... உடனே செய்யுங்கள் நான் சொன்னபடி!

**காரி:-** [நடுங்கியவாறு] வந்து...... கம்பெனி களஞ்சியத்திலே சேர்க்கணும்னு துரைகள் உத்தரவுங்க...

**பாதர்:-** சீ! யாரடா துரைகள்? தூர தேசத்தி லிருந்து வந்து இங்கு துஷ்டத்தனம் செய்யும் துர்த்தர்கள் உனக்கு துரைகள்! உழைப்பாளி மக்களின் உதிரத்தை உறிஞ்சிக் கொழுக்கும் உலுத்தர்கள் உனக்கு துரைகள்! துரோகிகள்! துரைகளாம்! துரைகள், நல்ல துரைகள்! அந்த துரைகளுக் கேற்ற தொடை நடுங்கிகள்...... தூ.... உனக்கு வெட்கமில்லை.

**காரி:-** [குழறியவாறு] இல்லீங்க...வந்து....

**பாதர்-:** [கோபாவேசத்தோடு] ஏய்! மரியாதை யாய் நெல்லை மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கி றாயா? அல்லது மண்டையைப் பிளக்கட்டுமா?

[காரியஸ்தன் தயங்கி நிற்றல்]

ஹூம்! மயிலே மயிலே என்று கெஞ்சினால் இறகு போடுமா?...

[காரியஸ்தனை எட்டி உதைத்தல்]

இப்பொழுது என்ன சொல்லுகிறாய்?

**காரி:-** [அலறியவாறு] ஐயோ....அம்மாடி! இது என்ன உதையா? அல்லது உலக்கை அடியா?.......

[குழறியவாறு] என்னங்க....நீங்க.......நெல்....... கம்பெனி... துரை...

**பாதர்:-** டேய்!

[பாதர்வெள்ளை அவனை மீண்டும் ஆவேசமாய் அணுகல்]

**காரி:-** ஐயையோ....அடிக்காதீங்க....

**பாதர்;-** அப்படி யென்றால் நெல்லை....?

**காரி:-** இப்பவே எல்லாருக்கும் தூக்கிக் கொடுத்துடுறேனுங்க...

**பாதர்:-** உம்... ஆகட்டும்... அடி உதவுகிறது போல் அண்ணன் தம்பிகூட உதவுவானா?

[நெல் பகிர்ந்தளிக்கப்படல் வீரத் தேவர், நாட்டாண்மைக் காரர் ஆகியோர் வருகை]

**நாட்டாண்மை:-** இந்தாப்பா பாதர்வெள்ளை! அவனை அடித்து என்ன புண்ணியம்? எய்தவன் இருக்க, அம்பையா நோவது?

**பாதர்:-** இந்த மாதிரி காட்டிக் கொடுக்கும் கய வாளிப் பயல்கள் நாலுபேர் தலையைத் திருகி கை யில் கொடுத்தால்தான் நாட்டில் நயவஞ்சகர்கள் நடமாட்டம் கொஞ்சமாவது குறையும்,

**வீரத்:-** தம்பி சொல்றதும் நெசம்தானுங்க... அது சரி...உங்களுக்கு சேதி தெரியுமோ? பாஞ் சாலங்குறிச்சிப் பாளையமே திரண்டாச்சி, பரங்கிக் காரனைப் பழி வாங்க.

**பாதர்:-** நானும் அங்குதானப்பா போகிறேன். கட்டபொம்மு துரையுடன் சேர்ந்து, கம்பெனிக் காரக் கயவர்களைக் கருவறுக்கப் புறப்பட்டு விட் டேனப்பா....விடை கொடுங்கள்.

**வீரத்:-** வீரமகனே, போய்வா. கொண்டையங் கோட்டை மறவர் மரபினரின் வீரத்தை நிலை நிறுத்தி வா.

[பாதர்வெள்ளை போதல்]

[**மாற்றம்**]



## களம் சு.

**இடம்:-** பாஞ்சை எல்லையை அடுத்த அடவி.

**காலம்:-** மாலை.

**உறுப்பினர்:-** கட்டபொம்மன், ஊமைத்துரை, பாதர்வெள்ளை முதலானோர்.

[கட்டபொம்மனும் ஊமைத் துரையும் வேட்டை யாடிக் களைத்து அங்குள்ள சுனை யொன்றில் விடாய் தீர்த்து இளைப் பாறிக் கொண்டிருத் தல்.]

**ஊமை:-** அண்ணா! இன்று விலங் கினங்களை நமது வீரர்கள் வெட்டிக் குவித்ததைக் காணும் போது அடுத்து வரும் வெள்ளையர் வேட்டைக்கு இது ஒரு ஒத்திகை என்றே தோன்றுகிறது. இல்லையா அண்ணா?

**கட்ட.-** ஆம்! அவ்வஞ்சகர்களின் வாலை நறுக்கும் வரை என் வாள் வாளா இருக்காது.

[முயலொன்று நாயை வெருட்டு வதை ஊமைத்துரை கண்ணுறல்]

**ஊமை:-** அதோ பாருங்கள் அண்ணா! முயல் சீறிக் கிளம்பி அந்த வெள்ளை நாயை வெருட்டும் அதிசயத்தை!

[கட்டபொம்மன் பார்த்தல்]

கட்ட:- தம்பி! இதில் விந்தை யொன்றுமில்லை. படை பலம் படைத்த பகைவனும் பரங்கியை எதிர்த்துப் போரிடத் துடிக்கும் பாஞ்சைப் பதிமக்களின் பிரதிபலிப்பு, அவர்களின் இதயக் குமுறலின் எதிரொலி, இவற்றைத்தான் இச்சிறு முயலின் சினமும் சீற்றமும் சித்திரிக்கின்றன.

ஊமை:- நமது புதிய கோட்டையை நிர்மாணிக்க இதுதான் அண்ணு ஏற்ற இடம்.

கட்ட:- ஆம்! இங்கேயே அமைத்து விடுவோம்.

[அவ்வமயம் அங்கு வந்த பாதர் வெள்ளை எய்த அம்பு தைத்து நாய் வீழ்ந்து படல்]

பாதர்:- [தனதுள்] ஹ....ஹ....ஹ... மண்ணுசையால் வெறி கொண்டலையும் வெள்ளையனுக்கும் இதே கதி....அதோ கதி... ஹ....ஹ...ஹ

[பாதர் வெள்ளை, கட்டபொம்மன், ஊமைத்துரை ஆகியோரை அணுகுதல்]

கட்ட:—வெள்ளையனை வீழ்த்த வீறு கொண்டெழும் வீரனே! யார் நீ?

பாதர்:—என் பெயர் பாதர் வெள்ளை- கொண்டையங் கோட்டை மறவர் குலத்தைச் சேர்ந்தவன்.

கட்ட:—இங்கு வந்த காரணம்?

பாதர்:— ஆங்கிலேயரின் அட்டகாசத்தை அடக்க என்னுல் இயன்ற சேவை செய்ய தணியாத தாகம் கொண்டலைகிறேன்; கட்ட பொம்மு துரையை நாடிப் போய்க் கொண்டிருக்கிறேன்.

கட்ட:—வீர மைந்தனே! நீ தேடிச் செல்லும் கட்டபொம்மு இதோ... நான்தான்.

பாதர்:— [வியப்பும் மகிழ்ச்சியும் மேலிட] ஆ! தரணி புகழ் தலை வணங்காத் தமிழ் வேந்தன்

தாங்கள் தானா? அறம் வளர்க்கும் அரசர் ஏறு தாங்கள் தானா? பார் வியக்கும் பாஞ்சைப் பார்த்திபன் தாங்கள் தானா? கட்டபொம்மு காவலன் தாங்கள் தானா? ஆ! கும்பிடப் போன குலதெய்வம் குறுக்கே வந்துவிட்டது! ப்ரபூ! என் இதயம் எத்துணை இறும்பூது எய்துகிறது!... நான் மகா பாக்கியசாலி!

[வில்லையும் அம்பறாத் தூணியையும் கட்ட பொம்மனின் காலடியில் வைத்து சாஷ்டாங்க அஞ்சலி செய்தல்]

கட்ட:— [பாதர் வெள்ளையைத் தூக்கித் தழுவி] மறவர் குல மாவீரனே! மனங் குளிர்ந்தோம். இனி நீ தான் பாஞ்சைப் பதியின் படைத் தலைவன்! பட்டத்து இளவரசன்! என் மகன்! புத்திரனில்லாத என் பெருங் குறையைப் போக்கி விட்டாய்.

பாதர்:—தந்தையே! தங்கள் அன்புக் கட்டளைக்கு அடிமை நான்... ஆங்கில ஆதிக்கத்துக்கு அழிவைத் தேடுவேன்!.... தாய் நாட்டுக்கு நேர்ந்த இழிவை நீக்க நாடுவேன்!.... இனி என்றுமே இப் பணியில் ஈடு படுவேன். இந்த இலட்சியத்துக்காக என் இறுதி மூச்சையும் அர்ப்பணிக்கிறேன்.

[சிரம் தாழ்த்தி பிரதிக்ஞை செய்தல்]

கட்ட:— தமிழன்னை ஈன்றெடுத்த தவப் புதல்வா! மெச்சினோம் உன் வீரத்தை... உன் வாள் வலியும் தோள் வலியும் வகையோடு வாய்க்க அன்னை பராசக்தி அருகிருந்து அருள் பாலிப்பாள்.

[மாற்றம்]



# களம் எ.

**இடம்:-** சென்னை சென்ட் ஜ்யார்ஜ் கோட்டை.
**காலம்:-** காலை.
**உறுப்பினர்:-** கவர்னர் க்ளைவ், கர்னல் மாக்ஸ்வெல்.

[கம்பெனி தலைமைக் காரியாலயத்தில் மந்திராலோசனை நடைபெறல்].

**கவர்னர்:** [அங்கு மிங்கும் ஆவேசமாய் உலவியவாறு] *பல நாடுகளை வென்றோம்!.... பல வர்ணக் கொடியைப் பட்டொளி வீசிப் பறக்கவிட்டோம்... 'ஆங்கிலேய ஆட்சியில் ஆதவன் அஸ்தமிப்பதில்லை' என்ற அருமமொழி கேட்டோம்... ஆனந்தித்தோம்.... ஆனால் இன்று...? யானை எதிர்க்கத் துணிந்திருக்கிறது ஒரு பூனை! பாய்மாவை வெல்ல பகற்கனவு காண்கிறது பாஞ்சாலங்குறிச்சிப் பசு ....விளக்குடன் விளையாடுகிறது அந்த விட்டிற் பூச்சி. அதை நசுக்கிப் பொசுக்க வேண்டும்........ ...கர்னல் மாக்ஸ்வெல்!*

**மாக்ஸ்:-** Yes Your Excellency!

**கவர்னர்:-** What do you say?

**மாக்ஸ்:-** Exactly....*ஹி....ஹி....ஹி....*

**கவர்:-** *பாஞ்சையானைப் பணிய வைக்க உடனே ஒரு வழி வகுத்தாக வேண்டும்.*

**மாக்ஸ்:-** Exactly.. *ஹி...ஹி...ஹி...*

---

* சென்ட் ஜ்யார்ஜ் கோட்டை - Fort Saint கர்னல் மாக்ஸ்வெல் - Colonel Maxwell George க்ளைவ் - Lord Clive கவர்னர் - Governor கர்னல் மாக்ஸ்வெல் என்பான் சில அளவு முறையில் வல்லுநன். அரசியல் நிபுணன். சூழ்ச்சியில் தந்திகரற்றவன்.

கவர்:—அதற்காகத்தான் உம்மை வரவழைத்தேன். அவனைக் கத்தி முனையில் வெல்வதை விட புத்தி முனையில் புறமுதுகு காண்பது எளிதாயிருக்கும் என்று எண்ணுகிறேன்.

மாக்ஸ்:- Exactly...ஹி....ஹி....ஹி....

கவர்:- வட நாட்டில் ஒரு மீர்ஜாபர்! மைசூரில் ஒரு பூர்ணையா! அது போல் தென் பாண்டி நாட்டில........

மாக்ஸ்:- ஒரு எட்டப்பன் இருக்கவே இருக்கிறான். எட்டப்பனுக்கு கெட்டிப்பொம்மு எட்டிக்காய்.

கவர்:-I see...எட்டப்பனை எட்டிப் பிடிக்க ஒரு கெட்டிக்கார மாக்ஸ்வெல்லும் இருக்கிறீர். அல்லவா?

மாக்ஸ்:- Exactly ஹி....ஹி....ஹி....

கவர்:- கர்னல் மாக்ஸ்வெல்!

மாக்ஸ்:- Yes, Your Excellency!

கவர்:- இரண்டு ஆடுகளை மோத விட்டு அவற்றின் சிரங்களிலிருந்து உதிர்ந்த உதிரத்தை உறிஞ்சிக் குடித்தது ஒரு நரி. இது ஒரு கற்பனைக் கதை.... ஆனல் இந்த உவமைக்கு உருக் கொடுக்க வேண்டியது உமது பொறுப்பு. என்ன சொல்கிறீர்?

மாக்ஸ்:- Exactly....ஹி....ஹி....ஹி....

கவர்:- பாஞ்சையானுக்கும் எட்டயா புரத்தானுக்கும் இடையே பகைமைத் தீயை மூட்டி விட்டு விட்டால்......?

மாக்ஸ்:- Exactly....ஹி....ஹி....ஹி....

கவர்:- கர்னல் மாக்ஸ்வெல்!

**மாக்ஸ்:-** [எங்கோ ஞாபகமாக] Exa....[சமாளித்துக் கொண்டு] Excuse me Your Excellency!...I beg your pardon?

**கவர்;-** ஏதோ ஆழ்ந்த ஆலோசனை போலிருக்கிறதே!

**மாக்ஸ்;-** Exactly.... எட்டயாபுரம் எல்லையை அடுத்து இரண்டு சிற்றூர்கள் இருக்கின்றன. 'அருங்குளம்' 'சுப்லாபுரம்' என்று....

**கவர்:—** I see!... பாஞ்சாலங் குறிச்சியைச் சேர்ந்தவையா?

**மாக்ஸ்:-** ஆமாம்.... அவற்றை எட்டயாபுரத்துடன் இணைத்து விட்டால்?

**கவர்:-** I see!...அருமையான யோசனை! அந்த அறிவு கெட்ட ஆற்காட்டு நவாப்தான் வரி வசூல் உரிமையை நமக்குக் கொடுத்து விட்டானே! ஆனல்....[ஆலோசித்தவாறு] திடீர் இணைப்பு எப்படி சாத்திய மாகும்?

**மாக்ஸ்:-**My Lord!..'Resettlement'....இந்தத் திரை மறைவில் இருத்தி யமைத்து விட்டால் போகிறது. சீர்திருத்தப் போர்வைக்குள் சீர்கேடு. என்ன சொல்கிறீர்கள் Your Excellency?

**கவர்;-** [உற்சாகம் மேலிட] Oh... Beautiful idea! Splendid device! Excellent plot! Marvellous diplomacy! Tremendous strategy! ' Unconquerable Conspiracy!

**இருவரும்:-** Exactly....ஹி....ஹி .. ஹி....

[விலா நோகச் சிரித்தல்]

**கவர்:-** கர்னல் மாக்ஸ்வெல்!

**மாக்ஸ்:-** Yes Your Excellency!

---

Resettlement - நில அளவு திருத்தம்.
Your Excellency - மேன்மை தங்கிய பிரபுவே.

**கவர்:-** உமது திறனை வெளியாக்க இதோ மற்றொரு வாய்ப்பு. உடனே புறப்படும். அந்த புண்ணிய கைங்கரியத்தில் ஈடுபட.

[மாக்ஸ்வெல் வணங்கிப் போதல்]

[**மாற்றம்**]



## களம் அ.

**இடம்:-** எட்டயாபுரம் அரண்மனை.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** எட்டப்பன், மாக்ஸ்வெல் முதலானோர்.

[எட்டப்பன் கொலு வீற்றிருத்தல் சேவகன் வருகை]

**சேவகன்:-** மகாராஜா! மாக்ஸ்வெல் துரை வந்து கொண்டிருக்கிறார்.

**எட்ட:-** இதோ வந்துவிட்டேன்.

[எட்டப்பன் மாக்ஸ்வெல்லை எதிர் கொண் டழைத்து வரவேற்றல்]

**மாக்ஸ்:-** Hullo Chiefy! How do you do?

**எட்ட:-** என் சுகத்துக் கென்ன குறைவு, தங்கள் தயவு இருக்கும் வரை? தாங்கள் சௌக்கியம் தானே?

**மாக்ஸ்:-** Oh! Not bad.

[இருவரும் ஆசனங்களில் அமர்தல்]

* * *

**சேவகன் 1:-**[மற்றவனிடம் இரகசியமாக] அண்ணே! துரை வந்ததும் வராததுமாய் என்னமோ 'சடுகுடு'ன்னு சண்டைக்கு நிற்கிறாரே!

**சேவகன் 2:-** யார்ரு இவன்? 'ஹௌ டு யூ டு' அப்படின்ன 'சௌக்யமா' ன்னு அர்த்தம்.

**முதல்வன்:-** ஓகோ! அப்படியா?

* * *

**மாக்ஸ்:**-[எட்டப்பனிடம்] இன்று நான் இங்கு வந்த நோக்கம்...

**எட்ட:**- தெரியும்...எட்டயாபுரத்துக்கு நீங்கள் செய்யப் போகும் உதவி...

**மாக்ஸ்:**- சரித்திரத்தில் சாகா வரம் பெற்று விடும்; சந்தேகமே வேண்டாம்.

**எட்ட:**- சந்தோஷம்!

**மாக்ஸ்:**- இதோ! அருங்குளம், சுப்லாபுரம் இவற்றின் வரி வசூல் உரிமைச் சாஸனம்.

[சாஸனத்தை எட்டப்பனிடம் கொடுத்தல்]

**எட்ட.**- சந்தோஷம்!

**மாக்ஸ்:**- அவ்விரண்டு கிராமங்களில் கிஸ்து வசூலிக்கும் உரிமையும் பொறுப்பும் இனி உங்களுடையது.

**எட்ட:**- சந்தோஷம்!...ஒருவேளை இதன் காரணமாக நாட்டின் அமைதிக்குப் பங்கம் நேர்ந்தால்...?

**மாக்ஸ்.**- அதை அடக்கித் தருவது எங்கள் அலுவல்.

**எட்ட:**- சந்தோஷம்! ஒப்பந்தம் தயாராகட்டும் ஒப்பமிட்டுத் தருகிறேன்.

**மாக்ஸ்:**- இதோ! தயாராகவே கொண்டு வந்திருக்கிறேன்.

[ஒப்பந்தப் பத்திரத்தை எட்டப்பனிடம் நீட்டல்]

**எட்ட:**- சந்தோஷம்! [கையொப்ப மிட்டுக் கொடுத்து] சரிதானே!

**மாக்ஸ்:**- Exactly...ஹி...ஹி....ஹி

[**மாற்றம்**]



## களம் கூ.

இடம்- எட்டயாபுரம் அரண்மனையைச் சேர்ந்த பாக சாலை.

காலை:- காலை.

உறுப்பினர்;- பட்லர், அரண்மனை காரியஸ்தன் சமையல் காரன் முதலானோர்.

[மாக்ஸ்வெல்லின் பட்லர் வருகை]

பட்லர்:- காரியஸ்தரே! துரைக்குத் தேவை யான சாப்பாடு வகையறாக்க ளெல்லாம்.........

காரியஸ்தர் - ஆகா! 'மட்டன்' முதல்கொண்டு சகலமும் சித்தமாக இருக்கு. இன்னும் ஏதானும் வேணும்னு சொல்லுங்க. அது ஆனையானாலும் கொண்டு வந்து தள்ளிடறேன்.

பட்லர்:- ஆனையும் வேண்டாம் பூனையும் வேண்டாம். நல்ல புஷ்டியான மாடுகள் இங்கே நிறைய உண்டுன்னு கேள்விப் பட்டிருக்கேன்....

காரி:- ஆகா! பட்டணம் பக்காவுககு அஞ்சு பக்கா பால் கறக்கிற பசுமாடுகூட இருக்குதுங்க. பாலுக்குத்தானா பஞ்சம்?

பட்லர்:- உம்மிடம் யாரையா பால் கேட்டது? மாட்டு இறைச்சின்னா எங்க மாக்ஸ்வெல்துரைக்கு உசிர். அதைச்சொல்லவந்தால் ... ... ....

காரி:- [திடுக்கிட்டு] என்னங்க? விளையாடு றீங்க! பசு மாட்டைக்கொல்றதாவது? பாவமில்லீங் களா?

பட்லர்:- பாவமாவது? புண்ணியமாவது? நீர் இநத வேலைக்குப் புதிசு போலிருக்கு... கொன்ன பாவம் தின்னால் தீருமையா.

காரி:- அட பாவமே! அந்த உதவாக்கரை ஒட்டப் பசங்கதான் பண்ணியைத் தின்னுருங் கன்னா... ... வெள்ளைக்கார துரைகூட மாட்டை...

பட்லர்:-[குறுக்கிட்டு] ஆ! பண்ணியா? அதுகூட இருக்குதா இங்கே?

காரி:- ஏங்க? பண்ணியைப் பார்க்கக் கூட உங்களுக்குப் பிடிக்காது போலிருக்கு... நீங்க பயப்படாதீங்க. ஒரு பண்ணிகூட உங்க கண்ணிலே படாமே நான் பார்த்துக் கொள்றேன்.

பட்லர்:- என்ன ஐயா நீர்? சுத்த 'மூனு'வாய் இருக்கீர். பண்ணின்னு துரைக்கு ரொம்பப் பிடிக்குமேன்னு கேட்டால்......

காரி:- [வியப்பு மேலிட] ஐயோ! அப்படியா? உருப்பட்டுது!...... [சற்றுயோசித்து] அப்போ சரி. ஒட்டப்பசங்ககிட்டே சொல்லி ஒரு டஜன் உறிச்ச பண்ணிக்கு உடனே ஆர்டர் பண்றேன்.

[போதல்]

[பட்லர் சமயலறைக்குள் நுழைதல்]

சமையல்காரன்:- பொட்லர் துரையா? வாங்க! வாங்க! கமான்! கமான்! குட்மார்னிங் சார்!

பட்லர்:- அடடே! இங்கிலீஷ் கூட பேசுவே போல் இருக்கே!

சமை:- ஓ! பொட்லர் இங்கிலிபீசிலே பொளந்து கட்டிடுவேனுங்க.

பட்லர்:- பொட்லர் இங்கிலீஷா?

சமை:- ஆமாங்க. இங்கே வந்துபோற துரைமார்களுக்கெல்லாம் நான்தானுங்களே சாப்பாடு பறிமாறுகிறதெல்லாம்... அதனாலே நானும் கொஞ்சம இங்கிலிபீஸ் கத்துகிட்டேனுங்க. பேசிக் காட்டட்டுங்களா?

பட்லர்:- எங்கே பார்க்கலாம்?

சமை:- மட்டன் வாண்ட் சார்? மாட்கரி வாண்ட் சார்?

பட்லர்:- அப்படின்னா?

சமை:- ஆட்டுக்கறி வேணுமா? மாட்டுக்கறி வேணுமா? இன்னும் கேளுங்கோ ... ... மோர் வெஜிட்டபிள் புட் சார்! டேக் சார்! டேக் சார்!....

பட்லர்:- ஐயையோ போதும் .... போதும் ... புரியலியே! ...

சமை:- புரியாது.

பட்லர்:- ஆமா. இப்படி இங்கிலீஷிலே வெளுத்துவாருறியே! கஷ்டமாயிருக்காது?

சமை:-ஊம் ஹூம்! எனக்கென்னுங்க கஷ்டம்? சும்மா பிச்சி வாங்கிட மாட்டேனுங்களா? பெரிய பெரிய துரைமார்களே புரிஞ்சிக்கக் கஷ்டப்படுறுங்க... சும்மா அப்படியே திணறுறுங்கன்னு...

பட்லர்:- ஓஹோ! நெனைச்சேன்.

சமை:- அது கெடக்குதுங்க... பொட்லர்ஐயா! உங்க பேர் என்னுங்க?

பட்லர்:- என்பேரா? அது உனக்கெதுக்கப்பா?

சமை:- என்னங்க அப்படிச் சொல்லிட்டீங்க? உங்க பேரைச் சொல்லுங்க. அடுத்தவாட்டி நீங்க வரச்சே ஞாபகம் வைச்சிருக்கேனு இல்லியான்னு நீங்களே பார்த்துக்குங்க.

பட்லர்:- என் பேர் ... வந்து .... மிஸ்டர் 'பார்பர்'

சமை:- அப்படின்னு... [முகத்தில் கைவைத்து செய்கை காட்டியவாறு] சவரம் பண்றுங்களே........?

பட்லர்:- அடசட்! யார்ரு இவன்? பேர்தான் பார்பர். ஆனல் தொழிலில் பட்லர் அப்பா.

சமை:- ஓஹோ! அப்படிங்களா?

பட்லர்:- ஆமா ... அதுசரி.... உன்பேர் என்னப்பா?

சமை - பிச்சக் காரன்

பட்லர்:- Oh hell!.... beggar? அதாவது தெருவிலே பிச்சை...... ?

சமை:- என்னுங்க நீங்க ? ஹூம்க்கும்... பேர் தான் பிச்சக்காரனுங்க. அரமனையிலே சமையல் வேலை செய்யறேனுங்க.

பட்லர்:- ஓஹோ! ஐ ஸீ!

[மாற்றம்]



## களம் ௰.

இடம்:- கட்டபொம்மன் கொலு மண்டபம்.

காலம்:- மாலை.

உறுப்பினர்:- கட்டபொம்மன், ஊமைத்துரை, பாதர் வெள்ளை முதலானோர்.

[கம்பெனி சேவகன் ஓலை கொணர்தல்]

கட்ட:-[ஓலையைப் பிரித்துப் படித்துவிட்டு கோபாவேசமாக] ஆ! நரி வேலையைத் தொடங்கி விட்டான் நயவஞ்சகன்! தொன்று தொட்டு நம் வசம் இருந்து வரும் இரு கிராமங்களையும் இன்று எட்டயாபுரத்தோடு இணைத்திருக்கிறான் எத்தன்! பிரகடனம் வேறு விடுத்திருக்கிறான் பித்தன்! பிரித்தாளும் பேயன்! வெள்ளையனின் வெறியாட்டம் எல்லை மீறித் தொல்லை தருகிறது.

பாதர்;-[கண்களில் சினக் கனல் பறக்க] உத்திர விடுங்கள் தந்தையே! உருக்குலைத்து வருகிறேன் அந்த உலுத்த சிகாமணிகளை. கண் மூடித் தனமாய் கட்டளை பிறப்பித்த கம்பெனியானையும், அவன் காலை வருடும் கருங்காலி எட்டப்பன் கூட்டத்தையும் கசக்கிப் பிழிந்து வருகிறேன்! சூழ்ச்சி

யினுல் சுருட்டிக் கொள்ளப்பட்ட சுப்லாபுரத்தை யும் அருங்குளத்தையும் சூறையிட்டு வருகிறேன்! அவற்றைத் தாக்கித் தகர்த்தெறிகிறேன்! தவிடு பொடியாக்குகிறேன்! தரை மட்ட மாக்குகிறேன்! தந்தையே! தாருங்கள் உத்தாரம்!

**கட்ட:**— பதறாதே பாலகா!........ பொருமுதல் வேண்டாம். பொருதலும் வேண்டாம். பொறுத்திருந்து பார்ப்போம், புல்லர்களின் போக்கை.

**தானுபதி:**—ஆமாம் இளவரசே! சாம, பேத, தானம்... மூன்று முறைகளையும் முற்றிலும் முயற்சிப்போம். முடிவு இருக்கவே இருக்கிறது...... தண்டம்...உம்...[ஆலோசித்தவாறு] அரசே! எதற்கும் இளவரசர் அருங்குளத்தில் தங்கி யிருந்து அமைதியாக நடவடிக்கைகளை கவனித்து, அவ்வப்போது நமக்கு அறிவித்து வரட்டும். அவசியம் நேர்ந்தால்........

**கட்ட:**—ஆம். அதுவும் சரிதான்! போய் வா மகனே! ஆனால், அவசரப் பட்டு விடாதே. ஆத்திரம் அறிவுக்குச் சத்துரு. விவேகமாய் நடந்து கொள். வீரத்தையும் வென்று விடும் விவேகம்.

**பாதர்:**—சித்தம் அரசே!

**கட்ட:**—உதவிக்கு பொட்டிப் பகடையையும் மூத்தன் பகடையையும் அழைத்துச் செல்.

**பாதர்:**—ஆகட்டும் தந்தாய்!

[பாதர்வெள்ளை அருங்குளம் பயணமாதல்]

**[மாற்றம்]**



## களம் கக.

இடம் ராமனுதபுரம் கம்பெனி முகாம்,
காலம்:- காலை
உறுப்பினர்:- மேஜர் ஜாக்ஸன், காப்டன் புச்சர்

[இரு ஆங்கில தளபதிகளும் ஆலோசனை நடப்பித்தல்]

ஜாக்ஸன்:— காப்டன் புச்சர்! Anything Important?

புச்சர்:- மேஜர் சார்! மாக்ஸ்வெல்துரை மூட்டி விட்ட பகைமைத் தீ பற்றி யெரியத் தொடங்கி விட்டது.

ஜாக்ஸன்:-[மகிழ்ச்சியுடன்] அப்படியா?

புச்சர்:- ஆமாம். அருங்குளம் சுப்லாபுரம் இணைப்பைக் கேள்வி யுற்ற கட்டபொம்மன் இடி யோசை கேட்ட அரவம் போல் சீறி நிற்கிருன்.

ஜாக்ஸன்:- உம். அப்புறம்?

புச்சர்:- பாதுகாப்பை பலப் படுத்த பாதர் வெள்ளையை அருங்குளம் அனுப்பி வைத்திருப்ப தாகவும் தெரிகிறது.

ஜாக்ஸன்:- பாதர் வெள்ளையா? யாரவன்?

புச்சர்:— கொண்டையங் கோட்டை மறவன். கட்டபொம்மனின் அபிமான புத்திரன். அவனைக் கண்டால் எல்லோருக்குமே சிம்ம சொப்பனம் தான்.

ஜாக்ஸன்:- சுண்டைக்காய்! ........அது இருக்கட்டும்.... கலகம் ஏதாவது...?

புச்சர்:-கண்டிப்பாய் நடந்தே தீரும். கவலைப் பட வேண்டாம்.

**ஜாக்ஸன்:**-Correct! வைத்த குறி தவறி விடுமோ என்று பயந்தேன்.

**புச்சர்:**-மேஜர் சார்! தினகரன் திசை திரும்பி ஞலும், ஆழ்கடல் நீர் அனைத்துமே வற்றிப் போஞலும், வேல் விழி மாதர் மையலின்பம் வேம்பாக மாறினலும், இந்த மானிலமே அழிந் தொழிந்து மறைந்தாலும், ஆங்கிலேயரின் அரசியல் யுக்தி அணுவளவும் பிசகாது.

**ஜாக்ஸன்:**-Correct!

**புச்சர்:**-எட்டயாபுரத்து ஏவலர்கள் எந்த நேரமும் சேதி கொண்டு வரக் கூடும். எதிர் நோக்கியிருங்கள்.

[வாயில் காப்போன் வருகை]

**வாகா:**- துரையே! எட்டயாபுரத்தி லிருந்து தூதுவர் வந்திருக்கின்றனர்.

**ஜாக்ஸன்:**-வரச் சொல்!

[வாயில் காப்போன் போதல்]

**புச்சர்:**- ஹ.... ஹ ... ஹ... எண்ணியது ஈடேறி விட்டது.

**ஜாக்ஸன்:**-Correct!

[தூதுவர் வந்து வணங்கல்.
கலவரத்துடன் காணப்படல்]

**ஜாக்ஸன்:**-எதிர்பாராத சந்திப்பு!... ஏன் இந்த பரபரப்பு?

**தூதுவன்:**-துரையே! கட்டபொம்மன் அட்டகாசம் மட்டு மீறி விட்டது. என்னென்று இயம்புவோம் அவன் இழைத்துள்ள இன்னல்களை?

**ஜாக்ஸன்:**-நடந்ததை நவிலுங்கள்.

**தூதுவன்:**- புதிதாக இணைந்த இரண்டு கிராமங்களிலும் சூறுவளி போல் புகுந்து சூறையிட்டுச் சென்று விட்டனர் கட்ட பொம்மனின் ஆட்கள்.

ஜாக்ஸன்:- [கோபாவேசமாய்] என்ன?

தூதுவன்:-ஆம்! தானியக் கதிர்களைக் கொய்து கொள்ளை கொண்டது மன்றி கால் நடைகளையும் கவர்ந்து சென்றனர்.

ஜாக்ஸன்:-[பற்களைக் கடித்து] கள்வர்கள்!

தூதுவன்:- போகிற போக்கில் போர்களையும் பொசுக்கிச் சென்று விட்டனர்!

ஜாக்ஸன்:- போக்கிரிகள்!

தூதுவன்:- பாதர் வெள்ளையின் தலைமையில் தான் நடந்தது இந்த பகற் கொள்ளை.

ஜாக்ஸன்:-ஹூம்! வேங்கையிடம் விஷமம் காட்டுகிறது வெள்ளாட்டுக்கடா!....பதறாதீர்கள்! பாஞ்சை நாட்டுப் பஞ்சைப் பயல்களைப் பஞ்சாய் பறக்கடித்து விடுகிறேன். இந்த மேஜர் ஜாக்ஸன் யார் என்பதை விரைவில் அறிவுறுத்துகிறேன், அந்த வீணர்களுக்கு.

தூதுவன்:- துரையே! இந்தக் கொடுமை இன்னமும் நீடித்தால் எங்கள் எதிர்காலம் ....?

ஜாக்ஸன்:- [குறுக்கிட்டு] எதிர் காலத்தைப் பற்றி நீங்கள் எடுத் துரைக்கவே தேவை யில்லை. அது எங்கள் பொறுப்பு... அஞ்சாதீர்கள். அடுத்து ஆக வேண்டியதை உடனே கவனிக்கிறேன்...... ஏய்!... யாரங்கே?

[சிப்பாய் வருகை]

இந்த கடிதத்தை உடனே கட்டபொம்மனிடம் பட்டுவாடா செய்து விட்டு வா!

[நிருபம் வரைந்து தரல். சிப்பாய்போதல்]
[தூதுவர் வணங்கிப் போதல்]

புச்சர்:- மேஜர் சார்! எப்படி? எதிர்காலத்தைப் பற்றிய என் பரந்த நோக்கு?

ஜாக்ஸன்:- Correct!.... மீன் குஞ்சுக்கு நீச்சல்! மான் குட்டிக்குப் பாய்ச்சல்! கற்றுத்தரவா வேண்டும்? அரசியல் அறிவு ஆங்கில மகனின் இரத்தத்துடன் இரண்டறக் கலந்திருக்கிறதே! சுட்டுப் போட்டாலும் பிறவிப் பெருங்குணம் பிரிந்து விடுமா என்ன?

புச்சர்:- மேஜர் சார்! சமயம் வாய்க்கட்டும், சந்து சந்தாகப் பிளந்து, கண்டம் துண்டமாக நறுக்கி எறிந்து விடுகிறேன், கம்பளத்துக்கழுதைகளை.

ஜாக்ஸன்:- Correct! காப்டன் புச்சர் என்றால் கேட்கவா வேண்டும்?

[மாற்றம்]



## களம் கஉ.

**இடம்:-** கட்டபொம்மன் கொலுமண்டபம்.

**காலம்:-** காலை

**உறுப்பினர்:-** கட்டபொம்மன், ஊமைத்துரை, துளசிங்கம் தானபதி முதலானோர்.

ஊமை:- ஆங்கிலேயனின் அரவத்தையே காணோமே! அஞ்சிவிட்டானா? அயர்ந்து இருக்கிறானா? அன்றேல் அடங்கிப் போனானா?

கட்ட:- தம்பி! நீ நினைப்பது தவறு. கொக்கு காத்திருந்து கொத்தும்... புலி பதிவிருந்து பாயும். ..........ஆங்கிலேயன் ஆற அமர ஆலோசித்துத் தான் செயலில் இறங்குவான்.

[பாதர் வெள்ளை வந்து வணங்கல்]

கட்ட:- எழில் மகனே! என்ன சேதி?

பாதர்:- வடக்கே காவடி தூக்கி யிருக்கிறான்.

ஊமை:- யார் எட்டயாபுரத்தானா ?

பாதர்:- ஆம்.

துளசி:- எங்கே ?

பாதர்:- கேந்திர ஸ்தலத்துக்கு... ஆட்சி பீடத்துக்கு ... ராமனாதபுரம் வெள்ளையர் முகாமுக்கு.

கட்ட:- போகட்டும்... நன்றாய்ப் போகட்டும் ... பார்ப்போமே ... எவ்வளவு காலம்தான் வடக்குத் திக்கையே நம்பி வாழப் போகிறார்கள் என்று!

துளசி:- கோள் மூட்டியிருப்பான் கோடரிக் காம்பு, கோணங்கி ஜாக்ஸனிடம்.

கட்ட:- அக்கறையில்லை அதைப் பற்றி.

பாதர்:- சிறுத்தை சினந்தால் சிங்கத்துக்கு அச்சமா ?

[கம்பெனி சிப்பாய் கடிதம் கொணர்தல்]

சிப்பாய்:- கம்பெனியாரின் தாக்கீது...

[கட்டபொம்மனிடம் கடிதத்தைக் கொடுத்தல்]

பாதர்:- [குறுக்கிட்டு ரௌத்காரமாய்] தாக்கீது? யாருக்கு யார் அனுப்புவது ? அன்னிய நாட்டான் அருந் தமிழ் அரசனுக்கு ஆக்ஞை யிடுவதா ? நன்று! ... நன்று! ...... பாஞ்சைக் கோமான் பரங்கிக்காரன் ஆணைக்குப் பணிந்தவர் இல்லை என்பதை அகந்தை கொண்ட உன் அதிபதிக்கு அறிவி.: உம் ... ஓடு.......

[சிப்பாய் போதல்]

[கட்டபொம்மன் தாக்கீதைப் பிரித்துப் படித்தல்]

"அரசியல் விவகாரங்களைப் பற்றி அவசரமாக விவாதிக்க வேண்டியிருப்பதால் இந்த தாக்கீது கண்டவுடன் ராமநாதபுரம் புறப்பட்டு வந்து நம்மைப் பேட்டி காணவேண்டியது .... .... ...."

மேஜர் ஜாக்ஸன்.

ஊமை:-சிங்கத்தைச் சிறைப் படுத்த சிறுமதியோன் விரித்திருக்கும் சூழ்ச்சி வலை அண்ணா இது!

பாதர்:— நேர்மையிருந்தால் நேருக்கு நேர் போருக்கு அழைத் திருக்கலாமே! குறுக்கு வழியை....... கொல்லைப் புறத்தை...... கோணல் முறையையா நாடுவது?

துளசி:-சதிக்களம் அமைத்திருக்கிறான் ஜாக்ஸன். அதில் நம்மை வெகு எளிதில் வீழ்த்த எண்ணுகிறான் வீணன்.

தானாபதி:- மன்னிக்க வேண்டும்.........அரசே! வெள்ளையனை நேரில் சந்தித்து நமது உரிமைக் குரலை உரக்க எழுப்ப இதை ஒரு வளமான வாய்ப்பாகவே நான் கருதுகிறேன்.

ஊமை:- தவறு தானாபதியாரே! பாம்புப் புற்றென்று தெரிந்துமா பக்கத்தில் செல்வது? வேண்டாம்... விபரீதம் விளையக் கூடும்.

கட்ட:- தம்பி! உன் உள்ளத் துடிப்பை நான் உள்ளபடி உணர்கிறேன்... ஆனால்... உயிருக்கஞ்சி ஒளிந்து கொண்டான் கோழை என்று...... இழிமொழி இயம்புவான் இங்கிலீஷ்காரன். இடம் தரலாமா அதற்கு?

ஊமை:- தங்கள் இஷ்டம்!... எதற்கும் தக்க தற்காப்புடன் செல்வதுதான் சரி.

தானாபதி:- ஒப்புக் கொள்கிறேன்.

கட்ட:- சரி. உடனே புறப்படுவோம்... பாதர் வெள்ளை!..பகடைகள், படையாட்சிகள், சேர்வைக் காரர்கள் எல்லோருக்கும் தகவல் கொடு...

பாதர்:-ஆக்ஞை அரசே!

[பாதர்வெள்ளை போதல்]

கட்ட:- தானுபதியாரே! கம்பெனியானுக்குக் கடிதம் அனுப்பிவிடும்.

தானு:- சித்தம்!

[தானுபதி போதல்]

கட்ட:- மாமா கோடங்கி நாயக்கர் கோட்டைக் காவலை கவனித்துக் கொள்ளட்டும்.

[**மாற்றம்**]



## களம் கந.

**இடம்:-** குற்றாலத்தில் ஜாக்ஸன் முகாம்

*காலம்:-* காலை.

**உறுப்பினர்:-** மேஜர் ஜாக்ஸன், லெப்டினன்ட் க்ளார்க் தானுபதி முதலானோர்.

**ஜாக்ஸன்:-** [அங்குமிங்கும் ஆவேசமாய் உலவியவாறு] மார் தட்டினான் மன்னன்! எளளி நகையாடினான் இளவல்! ஹும்!... பணிய மாட்டானுமே பாஞ்சையான்? என்ன ஆணவம்!... இருக்கட்டும்.... காலம் வரட்டும்............ காட்டுகிறேன் என் கைவரிசையை!... லெப்டினன்ட் களார்க்!

**க்ளார்க்:-** Yes sir!

**ஜாக்ஸன்:—** அந்த ராட்சதனை ராமநாதபுரம் வரச் சொல்லியிருந்தோம்... அல்லவா?

**க்ளார்க்:-**That's right! ஏமாந்து திரும்பிப்போயிருப்பான் இந்நேரம்.

**ஜாக்ஸன்:**-Correct!

[பலகணி வழியாய் வெளியே கண்ணேறிட்டு நோக்கல்]

லெப்டினனன்ட் க்ளார்க்!

**க்ளார்க்:**- Yes Sir!

**ஜாக்ஸன்:**- அதோ பாரும்....... பாஞ்சாலங் குறிச்சி பட்டாளம் போல் தெரிகிறதே!

[க்ளார்க் வெளியே நோட்டம் விடல். பாஞ்சாலங்குறிச்சி பரி வாரத்தைக் கண்ணுறல்]

**க்ளார்க்:**- That's right! அவர்களேதான்! குற் றாலத்துக்கே வந்துவிட்டது குரங்குக் கும்பல்.

**ஜாக்ஸன்:**- நம்மைத் தேடிதான் வந்திருப்பார் கள். மடைதிறந்த வெள்ளம் போல் படைகள் புடை சூழ அல்லவா வந்திருக்கிறான் மடையன்? [ஆலோசித்தவாறு] உம்... இங்கேயே பேட்டி கொடுத்தால்...

**க்ளார்க்:**- வினையை விலைக்கு வாங்குவது போலத்தான் இருக்கும்.

**ஜாக்ஸன்:**- Correct!......அதுமட்டுமல்ல. இனி நாம் இங்கு தாமதிக்கும் ஒவ்வொரு கணமும் ஆபத்துக்கு நாம் விடுக்கும் அழைப்பு. கருநாகம் காலடி வரை வந்து விட்டது. அது கடிக்கும் முன் கடுகிச் சென்று விட வேண்டும். சித்தப் படுத்தும் குதிரைகளை!

**க்ளார்க்.**- சித்தம்!

[சிப்பாய் வருகை]

**சிப்:**-துரையே! பாஞ்சைப் பிரதானி வந்திருக் கிறார்.

**ஜாக்ஸன்:**— [திடுக்கிட்டு] ஆ! [சமாளித்துக் கொண்டு] சரி...வரச் சொல்.

[சிய்பாப் போதல்.]

க்ளார்க்:- இதமாகப் பேசி அனுப்பி விடுவோம்.

ஜாக்ஸன்:- Correct!

[தானுபதி வருகை]

ஜாக்ஸன்:— வரவேண்டும் பிள்ளைவாள்! வரவேண்டும்!! எங்களைத் தேடி இங்கேயே வந்து விட்டீர்களே!... குற்றாலம்... குளிர்ச்சியான இடம்... மனோ ரம்மியமான மலைக்காட்சி... நெஞ்சை அள்ளும் நீர் வீழ்ச்சி!........ இயற்கையின் எழில் தான் என்னே! என்னே!

[தானுபதி அமர்தல்]

தானு:- குற்றால நாதரைத் தரிசிக்க வந்தோம். நீங்கள் குற்றாலத்தில்தான் இருப்பீர்கள் என்று தெரியும்....... அப்படியே உங்களையும் பார்த்து விட்டு...

ஜாக்ஸன்:—Correct!... பரம திருப்தி, நீங்கள் வந்தது பற்றி... ஆனால்...

தானு;- ஆனல் என்ன? தங்களை இங்கேயே பேட்டி காண இசைந்து விட்டார் கட்டபொம்முதுரை.

ஜாக்ஸன்.-மன்னிக்க வேண்டும்! எதிர்பாராத அதி முக்கிய அலுவல்... தவிர்க்க முடியாத தலை போகும் அவசரம்... திருநெல்வேலிக்கு உடனடியாகப் பயணப் படுகிறோம்.

தானுபதி:- அப்படியானல்...?

ஜாக்ஸன்:- அங்கு வந்து சந்திக்கச் சொல்லுங்கள் உங்கள் அரசரை. சிரமத்துக்கு வருந்துகிறேன்.

[தானுபதி ஏமாற்றத்தோடு போதல்]

[ஜாக்ஸனும் கிளார்க்கும் புரவிகள் மீது ஆரோகணித்து திருநெல்வேலி பயணமாதல்]

[மாற்றம்]



## களம் கச.

இடம்:- ராமனுதபுரம் ராமலிங்க விலாசத்தை அடுத்து இருந்த கட்டபொம்மன் பாசறை.

காலம்:- காலே.

உறுப்பினர்:- கட்டபொம்மன், ஊமைத்துரை, பாதர் வெள்ளே, தானுபதி முதலானோர்.

கட்டபொம்மன்:- அங்கும் இங்கும் அலேய வைத்து அலேக்கழித்து விட்டான் அயோக்கியன்!

ஊமை:-குற்றாலம்... திருநெல்வேலி... ஸ்ரீவில்லி புத்தூர்....சங்கர நயினூர் கோயில்... திருச்சுழி........ அலங்கா நல்லூர்... கமுதி... இப்போது மறுபடியும் ராமனுதபுரம்...

பாதர்:- ஹூம்! ஒன்பது முகாம்! இருபத்தி மூன்று தினங்கள் நானூறுமைல்கள்!... அப்பப்பா மனச் சாட்சியையே மழுக்கி விட்டிருக்கிறுன் மதோன்மத்தன்!

ஊமை:- எல்லாம் தானுபதி பிள்ளேயால் வந்து வந்த வினைதான்.

கட்ட:- இதுதான் என் இறுதி முயற்சி... தானுபதியாரே! இந்த முறையும் ஜாக்ஸன் பேட்டி தர மறுத்தால்........? பாஞ்சைக்குப் பயணமாகி விட வேண்டியதுதான்.

தானுபதி:- சித்தம் அரசே!... ஜாக்ஸனுக்குத் தங்கள் வரவு பற்றித் தகவல் அனுப்பி யிருக்கி

றேன். கம்பெனி ஏவலனை எதிர்நோக்கி இருக்கி றேன். சற்று பொறுத் திருந்து பார்ப்போம்,

[சேவல் சண்டை நிகழ்தல்]

**பாதர்:-** [சேவல் போரைக் கண்ணுற்றவாறு]

***'வென்ற கோழி கூவவே! வேலு மயிலும் ஆடவே வெள்ளைக் கோழி கொத்துப் பட்டு வெளியேறி ஓடவே! வெளியேறி ஓடவே!!' ....ஹ....ஹ....ஹ***

[எல்லோரும் சிரித்தல்]

[**மாற்றம்**]



# களம் கரு.

**இடம்:-** ராமலிங்க விலாசம்.

**காலம்:-** காலை.

**உறுப்பினர் -** மேஜர் ஜாக்ஸன். லெப்டினன்ட் க்ளார்க் அவில்தார் முதலானோர்.

[ஜாக்ஸன் மாடியி லிருந்தவாறு சாளரத்தின் வழியே கட்ட பொம்மனின் பாசறையை வெறித்து நோக்கித் திரும்பல்]

**ஜாக்ஸன்:-** [தனதுள்] *ஹூம்! பாஞ்சையான் பாசறையில்தான் எத்தனை அமர்க்களம்! ஆனந் தம்! ஆரவாரம்! குதூகலம்! கொம்மாளம்! கோலா கலம்! அச்சம் என்பது அவர்கள் அகராதியி லேயே கிடையாது போலும்!*

[க்ளார்க் வருகை]

*லெப்டினன்ட் க்ளார்க்!*

**க்ளார்க்:-** Yes sir!

**ஜாக்ஸன்:**-பாஞ்சையானுக்கு பதில் அனுப்பி விட்டீரா?

**க்ளார்க்.**-ஓ!... கட்டபொம்மன், ஊமைத்துரை, தானுபதி....... இவர்கள் மூவரையும் தவிர யாரும் கோட்டைக்குள் வரக் கூடாதென்று கண்டிப்பாய்க் கண்டு எழுதி விட்டேன்.

**ஜாக்ஸன்:**- Correct!... [சற்று ஆலோசித்து] தற்காப்பு ஏற்பாடுகள்... ?

**க்ளார்க்:**- தவருமல் செய்து முடித்து விட்டேன் தங்கள் உத்திரவுப்படி... அரண்களில் ஆங்காங்கு பீரங்கிகளைப் பொருத்தி விட்டேன்.

**ஜாக்ஸன்;**- கோட்டை வாயிலில் ...?

**கிளார்க்;**- பலத்த பந்தோபஸ்து போட்டு விட்டேன்... பயப்படத் தேவை யில்லை.

**ஜாக்ஸன்:**- Correct!.... ஹ...ஹ....ஹ.... வெறி கொண்ட வேழத்தை வீழ்த்த சரியான கிடை அமைத்து விட்டோம்.... என்ன சொல்கிறீர் ?

**க்ளார்க்:**- That's right!

[கட்ட பொம்மனிடம் சேதி கொண்டு சென்ற அவில்தார் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வரல்]

**ஜாக்ஸன்** [ஆர்வத்தோடு] என்ன நடந்தது ?

**அவில்தார்;**- துரைகளே! என் தலை தப்பினதே தம்பிரான் புண்ணியமாய்ப் போச்சுங்க... என்னமோ! என் பெண்டாட்டி மாங்கல்யம் கன கெட்டிங்க... நல்ல வேளையாய் ஏழு சவரனிலே திண்ணமாய் அடிச்சுப் போட்டிருந்தேனுங்க........ இல்லேன்னு இந்நேரம் நான் போன இடம் புல்லு முளைச்சிப் போயிருக்குமுங்க.

**ஜாக்ஸன்:**- என்னடா பிதற்றுகிறாய் ?

அவில்தார்:- நான் என்னத்தைச் சொல்றது துங்க...? போட்டானே ஒரு அடி பொட்டிப் பகடை 'பொட்' ன்னு பொட்டிலே பார்த்து...!

[தடவி விட்டுக் கொள்ளுதல்]

அந்தப் பாவி பாதர் வெள்ளை வேறே பாய்ஞ்சி வந்தான், சிலம்பத் தடியை ஓங்கிக்கொண்டு ... ஹூம்!... இவருகிட்டேயா நடக்கும்? ... சே!....... ஆபத்து ....... இனிமே சும்மா இருக்கக் கூடா துன்னு ....

ஜாக்ஸன்:- [உத்சாகத்தோடு] உம்...... என்ன செய்தாய்?

அவில்தார்:- ஹூம்! எடுத்தேன் பாருங்க ஒரு ஓட்டம்! இங்கே வந்துதானுங்க நின்னேன் சும்மா, அப்படியே சிட்டாய்ப் பறந்துல்ல வந் தேன். என் ஓட்டத்தை ஒரு பயல் பிடிக்க முடி யுங்களா?

ஜாக்ஸன்:- [கேலியாக] அட! அப்படிங்களா?

அவில்தார்:- ஆமாங்க. நெசந்தானுங்க.

ஜாக்ஸன்:- Shut up! You silly swine! அசகாய சூரன் அளக்கிறான். பார்! போன காரியம் என் னடா ஆயிற்று?

அவில்தார்:- ஓ! அதுங்களா? வருவதா யிருந் தால் எல்லாரும் கும்பலாய்த்தான் வருவாங்களாம். இல்லேன்னா ஒருத்தருமே வர மாட்டாங்களாம்.

ஜாக்ஸன்:- இதைச் சொல்லத்தானா இத்தனை பிதற்றல்? ... .... Get out you stupid goose!

[அவில்தார் போதல்]

ஜாக்ஸன்:- லெப்டினன்ட் க்ளார்க்!

க்ளார்க்:- Yes Sir!

ஜாக்ஸன்:- முயற்சி பலிக்க வில்லையே! [ஆலோசித்தவாறு] உம்... எப்படியாவது தலைவர்களைத் தனி

மையில் அழைத்து சிறைப் படுத்தி விட்டால், பிறகு பயமில்லை.... சேனைகளை யெல்லாம் சின்னா பின்னமாகச் சிதறடித்து விடலாம், சிரமம் எதுவு மின்றி.

க்ளார்க் : That's right! இன்னும் முயன்று பார்ப்போம்... முயன்றால் முடியாதது ஒன்று மில்லை ...[யோசனை பளிச்சிட] ஆ...! That's right.

ஜாக்ஸன்:- என்ன ?

க்ளார்க்:- மேஜர் சார்! என் மதியில் புதியதொரு சதி உதித்திருக்கிறது. ........கோபாலய்யனைப் பிடித்தால் விஷயம் வெற்றி கரமாக முடிந்து விடும்.

ஜாக்ஸன்:— கோபாலய்யனா ?

க்ளார்க்:- ஆம். ஒரு Fifth columnist. பாஞ்சாலங்குறிச்சியில் முன்பு பட்டா மணியமா யிருந்தவன்...

ஜாக்ஸன்:- தகுதியான ஆசாமிதான்.

கிளார்க்:- இன்னொரு துரோகியும் இருக்கிறான்.

ஜாக்ஸன்:- யாரவன் ?

க்ளார்க்:- ஒரு படையாட்சி....

ஜாக்ஸன்:- பெயர் ?

க்ளார்க்:- ரெங்கப்ப படையாட்சி.

ஜாக்ஸன்:-ஓகோ அவனா?... Correct!... லெப்டினன்ட் க்ளார்க்!

க்ளார்க்:- Yes sir!

ஜாக்ஸன்:- சரியான சதி!

க்ளார்க்:- Thats right...! சதியின் முடிவு|அந்த சத்திராவதியின் சரணாகதி!

ஜாக்ஸன்:- Correct!... இரண்டு துரோகிகளையும் பக்குவமாக பயன் படுத்திக் கொள்ளும்.

**க்ளார்க்:-** O. K. [போதல்]

[கோபாலய்யனும், ரெங்கப்ப படையாட்சியும் அழைத்து வரப்பட்டு கட்டபொம்மன் பாசறைக்கு தூது அனுப்பப் படல்]

**[மாற்றம்]**



## களம் கசா

**இடம்-** கட்டபொம்மன் பாசறை.

**காலம்-** காலை.

**உறுப்பினர்:-** கட்டபொம்மன், ஊமைத்துரை, பாதர் வெள்ளை, தானபதி முதலானோர்,

[பாஞ்சை வீரர் உல்லாச கேளிக் கைகளில் ஈடுபட்டிருத்தல்]

[கோபாலய்யன் வருகை]

**கோபா:-** [கட்டபொம்மனை வணங்கி] *துரைகளே! நமஸ்காரம்....! நமஸ்காரம்....! நமஸ்காரம்...! ... சௌக்கியம் தானேன்னு?*

**கட்ட:-** [வியப்புடன்] *அடடே! யார்? பட்டாமணியம் கோபாலய்யர்வாளா?*

**கோபா:-** *சாக்ஷாத் நானே தான்!*

**கட்ட:-** *வாருங்கள் சுவாமிகளே! வழி தெரிந்ததா?... பாஞ்சாலங் குறிச்சிதான் உங்களுக்குப் பிடிக்க வில்லை....... அது சரி... ஏது திடீர் விஜயம்?*

**கோபா:-** *ராமேஸ்வரம் தீர்த்த யாத்திரை போயிட்டு வர்றேன். தங்கள் திவ்ய பாதம் படக் கூடிய பாக்கியம் ராமனாத புரத்துக்குக் கிடைச்சி*

ருக்குன்னு வழியிலே ஆரோ சொன்னு... அப்படியே சமூகத்தையும் தரிசிச்சுட்டுப் போயிடலாமேன்னு வந்தேன்.

**தானபதி:-** [தனதுள்] பசுத் தோல்போர்த்த புலி! அழையாமல் நுழையும் அதிதி! அயோக்கியன்! ஆலகால விஷம்! நீறு பூத்த நெருப்பு!

**கோபா:-** ஆற்காட்டு நவாப்பை ஆட்டிப் படைக்கிருன்...!வங்கத்தைப்பங்கப்படுத்தினுன்.... பட்டணத்துக் கோட்டையிலே பரங்கிக் கொடியைப் பறக்க விட்டான்...! அப்பேர்ப்பட்ட ஆங்கிலேயனையே எதிர்க்கணும்னு, ஆகாகா! என்ன துணிச்சல்! என்ன வீரம்! என்ன நெஞ்சுரம்! அட! அடா! அடா!.... நான் ஏதோ மிகைப் படுத்திச் சொல்றேன்னு அவ்விடத்திலே நினைச்சுக்கப் படாது. பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்துப் பேரைக் கேட்டாலே பரங்கிக் காரா பயப்படறுன்னு!

**தான:-**[குறுக்கிட்டு] வலை விரிக்கிருன் வஞ்சகன்.

**கோபா;-** [திடுக்கிட்டு] அப்படியா? பேட்டி தர மாட்டேன் னுட்டானுமே பேடி ஜாகஸன்.

**கட்ட:-** இல்லை...பேட்டி தர மறுக்க வில்லை, இப்போது....ஆனுல்...எங்கள் மூவரையும் தனிமையில் அழைக்கிருன்...

**கோபா:-** [வஞ்சனையாக] பூ! இவ்வளவுதானே! அடர்ந்த ஆரண்யமானுல் என்ன? சிங்கம் தனித்துச் செல்லத் தயங்கவா போகிறது? பாஞ்சையதிபர் பராக்கிரமத்தின் முன் பரங்கிப் பதர்கள் என்ன செய்துவிட முடியும்? கோழை யென்றெண்ணி விட்டான் போலும் அந்தக் கோமாளி. அரசே! பாஞ்சை யதிபதி பரங்கித் தலைவனைப் போல் பயந்தாங் கொள்ளி அல்ல என்று அந்த

அற்பனுக்கு அறிவுறுத்த அருமையான வாய்ப்பு அமைந்து விட்டது....

தானு:- [குறுக்கிட்டு] என்ன இருந்தாலும் பரிவாரங்கள் இல்லாமல் செல்வது அவ்வளவு உசிதமாகப் படவில்லை. எனக்கு

கோபா:- எட்டப்ப நாயக்கர் வேறு எக்கச்சக்கமாகப் பேசினாராம்...!

கட்ட:- என்னவென்று?

கோபா:- பாஞ்சையானுக்காவது.... ஜாக்ஸனாவது........பேட்டியாவது... தருவதாவது...... அப்படின்னு ரொம்ப ரொம்ப இளப்பமாய்ப் பேசினாராம்ன்னு!

கட்ட:- என்ன? எட்டயாபுரத்தானுக்கு எத்துணை இறுமாப்பு?....இதோ இப்பொழுதே போய் ஜாக்ஸனைப் பேட்டி கண்டு வருகிறேன். எட்டப்பன் எண்ணத்தில் மண் விழட்டும்!

[கோபாலய்யன் விடை பெற்றுப் போதல்.]

தானு:-[தனதுள்] முடி போட்டு விட்டுப் போய் விட்டான முகடன்!

கட்ட:- தானுபதியாரே! உடனே புறப்படுவோம்!

தானு:- [தயங்கியவாறு] அரசே! முடிவை மாற்றிக் கொள்ள......

கட்ட:-முடியவே முடியாது. பேட்டி காணமல் பாஞ்சை திரும்பினுல் எட்டப்பனின் ஏச்சுக்கும் ஏளனத்துக்கும் ஏதுவாக நேரும்.

தானு:-ஒரு வேளை.... சதி நடந்தால்...?

[ஊமைத்துரை, பாதர்வெள்ளை வருகை]

**கட்ட:-** சமாளித்து விடலாம். பக்க பலமாகப் பாதர் வெள்ளை யிருக்கிறான். பார்த்துக் கொள்வான். [பாதர் வெள்ளையிடம்] புதல்வா!

**பாதர்:-** அப்பா!

**கட்ட:-** இதைக் கேள்....நாங்கள் மூவரும் முதலில் கோட்டைக்குள் போகிறோம்.

**பாதர்:-**[கவலையோடு] தனிமையிலா தந்தையே?

**கட்ட:-** ஆம்....வருந்தாதே....ஏதேனும் அல்லல் நேர்ந்தால் குரல் கொடுப்போம். உடனே கோட்டையைத் தாக்கி உள்ளே புகுந்து விடுங்கள். எப்படியும் சூரியாஸ்தமனத்துக்குள் மீண்டு விடுவோம்....அதற்குள் திரும்பத் தவறினாலும் ஆபத்து என்று அறிந்து கொள்.

**பாதர்:-** அப்படியே ஆகட்டும் அப்பா. நீங்கள் திரும்பும் வரை என் உயிர் ஊசலாடிக் கொண்டு தான் இருக்கும்.

[கண் கலங்குதல்]

**கட்ட:-**கவலைப்படாதே மகனே... காத்திரு... காலம் மாறும்.

[கட்டபொம்மன், ஊமைத்துரை, தானுபதி மூவரும் ராமலிங்க விலாசத்தை நோக்கிச் செல்லல். இதை மறைவில் இருந்து கவனித்த ரெங்கப் படையாட்சி மெல்ல நழுவிச் செல்லல்.]

**[மாற்றம்]**



## களம் கஎ.

இடம்:- ராமலிங்க விலாசம்.
காலம்:- காலை.
உறுப்பினர்:- மேஜர் ஜாக்ஸன், லெப்டினன்ட் க்ளார்க், கோபாலய்யன், ரெங்கப்பன் முதலானோர்.

[ஜாக்ஸனும் க்ளார்க்கும் ஆலோசனை நடத்திக்கொண்டிருத்தல்]

[கோபாலய்யன் வருகை]

**கோபா:**- முழு வெற்றி துரைகளே....! முழு வெற்றி...! கட்டபொம்மன் புறப்பட்டு விட்டான்.

**ஜாக்ஸன்:**- [துள்ளிக் குதித்து] அப்படியா? சபாஷ்...! இதோ..! உங்கள் இருவரின் அபார சேவையை மெச்சி நாங்கள் அளிக்கும் அற்பமான அன்பளிப்பு,

[பணமுடிப் பளித்தல்]

**கோபா:**- [கிழியைப் பெற்றுக் கொண்ட வாறு] இதெல்லாம் ஏக்கு எதற்கு? அவ்விடத்திய ஆதரவு எப்போதும் இருக்கணம். அது போறும்ணு!

[ரெங்கப்பன் வருகை]

**ரெங்:**-துரையே! இன்னொரு சமாச்சாரம்.

**ஜாக்ஸன்:**- என்ன அது?

[ரெங்கப்பன் ஜாக்ஸன் காதுக்குள் ஏதோ உரைத்தல்]

**ஜாக்ஸன்:**- [ரௌத்காரமாய்] ஹூம்! குரல் கொடுப் பானும் கோட்டான்! கோட்டையைத் தாக்குவார்களாம் குள்ள நரிகள்!

**கோபா:**- அபாய அறிவிப்பு அவர்களுக்கு எட்ட ஒட்டாமல் செய்து விட்டால்...?

**ஜாக்ஸன்:-** Correct...! அப்படியே செய்து விடுவோம.

**கோபா:-** ரொம்ப சரி... நாங்கள் போகிறோம். தக்கசமயத்தில் வந்து சிப்பாய்களுக்கு சமிக்ஞை செய்கிறோம். எட்டிப் பிடித்துக் கட்டி விடட்டும் அந்த.குட்டிச் சாத்தான்களை.

**க்ளார்க்:-** That's right!

[ரெங்கப்பனும் கோபாலய்ய னும் போதல்]

[**மாற்றம்**]



## களம் கஅ.

***இடம்:-*** கம்பெனி அலுவலகம்.

***காலம்:-*** முற்பகல்.

***உறுப்பினர்:-*** மேஜர் ஜாக்ஸன், லெப்டினன்ட் க்ளார்க், கட்ட பொம்மன், ஊமைத்துரை, தானுபதி முதலானோர்.

[ஆங்கில தளபதிகள் கட்ட பொம்மனை எதிர் நோக்கி யிருத் தல். கட்டபொம்மன், ஊமைத் துரை தானுபதி ஆகியோர் வருகை]

**ஜாக்ஸன்:-** வருக... வருக...... வளமார் பாஞ்சைப் பதியின் அதிபதியே! வருக.... அமர்க இவ் வாசனத்தில்

[மூவரும் அமர்தல்]

தானுபதி:- [கட்டபொம்மனிடம் இரகசியமாக] அரசே! முறைப்படி தரவேண்டிய மாமூல் கவுல் கூட கொடுக்கவில்லையே! இதில் ஏதோ சூது இருக்கிறது.

கட்ட:- இருக்கட்டும் பார்ப்போம்.

ஜாக்ஸன்:- தவிர்க்க முடியாத காரணங்களால் இதுவரை தடைபட்டு விட்டது. நமது சந்திப்பு.

க்ளார்க்:- பாதகமில்லை மேஜர் சார்! வீரர்களை வரவேற்கத் தகுதியான இடம் இந்த சேதுபதி அரண்மனைதான்.

ஜாக்ஸன்:- Correct!

கட்ட:- தெரிகிறது... அது சரி...! எம்மைப் பேட்டிக் கழைத்த நோக்கம்?

ஜாக்ஸன்:- பாஞ்சாலங் குறிச்சியின் எதிர்காலத்தை நிர்ணயிக்க.

கட்ட:- எங்கள் எதிர்காலத்தை நிர்ணயிக்க எங்களுக்குத் தெரியும். அதில் அன்னியன் தலையீடு அவசியம் இல்லை.

ஜாக்ஸன்:- அன்னியரல்ல நாம்! ஆற்காட்டு நவாபின் அதிகாரம் பெற்ற அரசாங்க அலுவலர்.

கட்ட:- [கண்களில் சினக்கனல் பறக்க] ஹூம்! பகற் கொள்ளை யடிக்க வந்த பட்டாணியனுக்குப் பாண்டி நாட்டில் பாத்தியதை! அந்த ஆற்காட்டு நவாபின் அக்ரமத்தை அமுல் நடத்த ஆங்கிலேயனுக்கு அலுவல்! அனுமதி! அதிகாரம்!.... அழகாயிருக்கிறது உங்கள் அரசியல் அகராதி!

---

கவுல். பாளையக்காரரை சந்திக்கும் போது வெள்ளையர் அவர்களுக்குக் கவுல் கொடுத்து வரவேற்பது வழக்கம். பாளையக்காரர் உயிரின் பாதுகாப்புக்கு வெள்ளையர் உத்தரவாதம் என்பது அதன் உட்பொருள்.

ஜாக்ஸன்:- வீண்வார்த்தை யாடுகிறீர்! 'வெடுக்' வெடுக்கென்று துடுக்கு மொழி அடுக்குகிறீர்....என் பொறுமையைச் சோதிக்கிறீர்.... விவாதிக்க நேரமில்லை... விரைவில் ஒரு முடிவு காண வேண்டும்.... பாஞ்சாலங் குறிச்சியின் வரி வசூல் உரிமை எம்மைச் சேர்ந்தது.

கட்ட:- உரிமை? நாங்கள் பிறந்து வளர்ந்த மண்ணில் பிறனுக்கென்ன உரிமை?

ஜாக்ஸன்:- அப்படியானால் கிஸ்திப் பணம்?

கட்ட:- கிடையாது!

ஜாக்ஸன்;- முடிவு ?

கட்ட:- முடியாது!

ஜாக்ஸன்: உம்.... போகட்டும்... கொள்ளையடித்தீரே அருங்குளம் சுப்லாபுரத்தில்! அதற்கு என்ன சொல்கிறீர் ?

கட்ட:- குடும்ப விவகாரம் அது... குறுநரியின் குறுக்கீடு தேவையில்லை!

ஜாக்ஸன்:- எட்டயாபுரத்தின் எல்லைப் பாது காப்பு எம்மைச் சேர்ந்தது.

கட்ட:- வக்காலத்து வாங்கி யிருக்கிறீரா ?

ஜாக்ஸன்:- ஒப்பந்தம் அப்படி.

கட்ட:- ஒருப்படேன் ஒருபோதும். இரு சிற்றூர்களும் எமமைச் சேர்ந்தது. எல்லையோரங்களில் புதையுண்டு கிடக்கும் புள்ளடிக் கற்களே அதற்குப் போதிய சான்றாகும்.

---

புள்ளடிக் கற்கள்:- பாண்டிய மண்டலம் பூராவும் சுந்தர பாண்டியன் கோல் என்னும் 24 அடி கொண்ட அளவு சாதனத்தால் அளவிடப்பட்டு எல்லை வகுக்கப் பெற்றிருந்தது.

ஜாக்ஸன்:- இல்லை அவை எட்டயாபுரத்து எல்லைக்குட்பட்டது. எமது நில அளவு திருத்தம் நிர்ணயித்த நீதி அது.

கட்ட:- மக்கள் வழங்கட்டும் தீர்ப்பு.

ஜாக்ஸன்:- நிராகரிக்கிறேன் உமது கோரிக்கையை!

கட்ட:- [ரௌத்ராகாரமாய்] அப்படியானால் வாள் முனை நிர்ணயிக்கட்டும் அவற்றின் எதிர்காலத்தை! ....... சமர்க் களத்தில் சந்திப்போம்.... நான் வருகிறேன்.

[கட்டபொம்மன் ஆவேசத்தோடு ஆசனத்தைவிட்டு எழுந்து போதல். ஜாக்ஸன் கட்டபொம்மனைப் பற்றி இழுத்தல். கட்டபொம்மன் அவனைத் தட்டி வீழ்த்தல். மறைந்திருந்த கோபாலய்யன் சமிக்ஞை செய்யவே க்ளார்க் தலைமையில் சிப்பாய்கள் வந்து மூவரையும் சூழ்ந்து சங்கிலிகளால் அவர்களைப் பிணைத்தல்.

கட்ட:- [ரெங்கப்பனைப் பார்த்து விட்டு] யார்? ரெங்கப்பனா?... டேய் படையாட்சி! [காரி உமிழ்ந்து] தூ! துரோகி! உண்ட வீட்டுக்கா இரண்டகம் செய்கிறாய்? நீட்டின மரத்திலேயே கூர் பார்க்கிறாயேடா நீவட்டி! இதைக் கேள்! பணம்.... பட்டம்... பதவி... இவை அத்தனையுமே ஒரு நாள் ஒழிந்து போம்... ஆனால் மறந்து விடாதே.... உன் மேல் இன்று சுமரும் பழிமொழி இந்தப் பார் உள்ளளவும் அழியாது.

[மாற்றம்]



## களம் கசு.

இடம் சேதுபதியின் அரண்மனையின் அந்தப்புரம்,
காலம்:- மாலை.
உறுப்பினர்:- வெள்ளையம்மாள், வீரம்மாள்.

[பாதர் வெள்ளையின் பராக்கிரமத்தைக் கேள்வி யுற்றிருந்த வெள்ளையம்மாள், அவன் மீது மைய லுற்று காமசுரத்தால் வருந்தியவாறு சயனித் திருத்தல்]

[வெள்ளையம்மாளின் பிராண சகி வீரம்மாள் ஒடோடி வரல்]

**வீரம்:-** [பரபரப்போடு] அம்மா! அம்மா!! கட்டபொம்மு துரையை வெள்ளையர்கள் சிறைப் பிடித்து விட்டார்கள்,

**வெள்ளை:-** [திகைப்புடன்] கனவு கண்டாயா அப்படி?

**வீரம்:-** இல்லையம்மா...... சத்தியமாக........ கோட்டைக்குள் வரவழைத்து வஞ்சனை செய்து விட்டார்களம்மா கொடியவர்கள்.

**வெள்ளை:-** [துணுக்குற்று] ஆ...! வீராதி வீரன் விலங்கிடப் பட்டார்.

**வீரம்:-** ஆம்! அவருடன் ஊமைத் துரையும் தானபதியும் பிடிபட்டு விட்டார்களம்மா.

**வெள்ளை:-** [கலக்கம் மேலிட] ஆ...! தேவரின் திரம் என்ன வாயிற்று?

**வீரம்:-** தேவரா?...... [கேலியாக] ஓ!........... அந்தத் திருடரா?

**வெள்ளை:-** திருடரா?... யாரடி திருடர்?

**வீரம்:-** அவர்தானம்மா. தமது வீரதீரப் பராக்கிரமப் பிரதாபத்தால் உங்கள் பளிங்கு உள்

ளத்தைப் பகற்கொள்ளை கொண்ட பாதர் வெள்ளைத் தேவரைத் தானம்மா சொல்கிறேன்.

**வெள்ளை:-** [கொஞ்சலாக] போடி! குறும்புக்காரி!...... வேடிக்கை செய்ய இதுவல்ல வேளை... விஷம் தலைக்கேறும் போதுதானா விஷமம்? தேவர் இப்போது எங்கேயடி இருக்கிறார்?

**வீரம்:-** கோட்டைக்கு வெளியில் காத்துக் கொண் டிருக்கிறார் சமயத்தை எதிர் நோக்கி....

**வெள்ளை:-** களிறுகள் கட்டுண்ட சேதி அவருக்கு.......?

**வீரம்:-** தெரியாது. எட்டி யிருந்தால் இந்நேரம் கோட்டையைக் குட்டிச் சுவராக்கி யிருக்க மாட்டாரா?

**வெள்ளை:-** அப்படியானால் அவருக்கு உடனே அறிவிக்க வேண்டும்... வீரமமா! நீ தான் அதற்கு ஒரு உபாயம் சொல்லேன்!

**வீரம்:-** [சற்று சிந்தித்து] ஓலை தாருங்கள். ஓடிச் சென்று கொடுத்து வருகிறேன்.

**வெள்ளை:-** ஆம். அதுதான் சரி.

[ஓலை தயாரித்தல்]

**வெள்ளை:—** எப்படி வெளியேறுவாய்?

**வீரம்:—** குறத்தி வேஷத்தில்

**வெள்ளை:—** சரி. புறப்படு உடனே...... இதோ மடல்......

[ஓலையை வீரம்மாளிடம் கொடுத்தல். வீரம்மாள் வெளியேறல்.]

**[மாற்றம்]**



# களம் உம.

இடம்:- பாதர் வெள்ளை பாசறை.

காலம்:- மாலை.

உறுப்பினர்:- பாதர் வெள்ளை, வீரம்மாள், பாளையத்துப் படைவீரர் முதலானோர்.

[பாதர் வெள்ளை கோட்டைக்கு வெளியே நிம்மதியின்றி உலவுதல்.]

பாதர்:- [தனதுள்] அஸ்தமனமும் ஆகப்போகிறது. அரண்மனைத் தகவல் ஒன்றுமே தெரியவில்லையே....? ஒருவேளை.... அண்ணனுக்கு ஏதேனும் ஆபத்து?...ஹூம்! அவ்வுத்தமரின் உயிருக்கு நேர்ந்தால்?.... வெள்ளை வெறியரின் தலைகளை மலையெனக் கொய்து குவித்து விட மாட்டேனா? இந்த நாடு பரங்கிகளின் பிணக் காடாக மாறி விடாதா?.

[வீரம்மாள் வருகை. பாதர் வெள்ளையிடம் ஓலையைக் கொடுத்தல்]

பாதர்:- பெண்ணே!....யார் நீ? என்ன இது?

வீரம்.- அரசிளங் குமரி திருமுகம் அனுப்பியிருக்கிறார்கள். அவர்களின் பிராண சகி நான்.

பாதர்:- [வியப்புடன்] பரங்கிதாசன் சேதுபதியின் செல்வ த் தோன்றலுக்கு, பாஞ்சை நாட்டாரிடம் அத்தனை பரிவும் பாசமுமா?...களர் நிலத்தில் விளைந்த செந்நெல் போலும்.

[பாதர் வெள்ளை ஓலையைப் பிரித்துப் படித்தல்]

பாதர்:- [கண்கள் கனல் கக்க] ஆ! பாஞ்சை நாட்டுப் பாய்மாவைப் பரங்கி சிறைப் பிடித்தான்....பரம்பரைப் புத்தியைக் காட்டி விட்டானே

பாவி!.......பெண்ணே போ!.....போர்க் கோலம் புனைந்துவிட்டார் பாதர் வெள்ளை என்று உன் தலைவிக்குத் தெரிவி.

வீரம்:- பொறுங்கள் இளவரசே! வீரத்தைக் காட்ட இது வல்ல நேரம்.........கட்ட பொம்மு துரை காராக்கிருகத்தில் கட்டுண்டிருக்கிறார்.... ஆபத்து அணுகுவதைக் கண்டதும் ஆங்கிலேயன் அவர் உயிருக்கே ஒரு வேளை உலை வைத்து விட்டால்...? கண் கெட்ட பிறகா காட்சி ரசனை?

பாதர்:- ஆ!... ஆம்.... ஆலோசிக்க வேண்டியது தான்.

வீரம்:- உங்கள் படையெடுப்பை எதிர்பார்த்து பாதுகாப்பை பலப்படுத்திவிட்டார்கள் கோட்டை வாயிலில்.

பாதர்:- அப்படியா ?

வீரம்:- ஆம!... பாஞ்சை வீரரின் செந்நீர் வீணிலே விரயமாகி விடக் கூடாது இளவரசே!

பாதர்:- உண்மை! அப்படியானால் ?

வீரம்:- முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும்.........வஞ்சனையை வஞ்சனையால்தான் வெல்ல வேண்டும். தலைவி சொல்லித் தந்த தந்திரம்தான் தகுதியானது.

பாதர்:- என்ன அது ?

[பாதர் வெள்ளையிடம் ஏதோ இரகசியம் உரைத்தல்]

பாதர்:- [உத்சாகம் மேலிட] அற்புதமான யோசனை! அருமையான ஏற்பாடு!

[பாதர் வெள்ளை படை வீரரை அணுகல்]

பாதர்:- [படை வீரரை நோக்கி] நான் கூறப் போகும் செய்தியைச் செவி மடுக்க உங்கள் காது

களைக் கடினப் படுத்திக் கொள்ளுங்கள்.... உள்ளங்களை உறுதிப் படுத்திக் கொள்ளுங்கள்.... கன்னித் தமிழகத்தின் காளையை...... நம் கருணாநிதியை காராகிருகத்தில் தள்ளி விட்டான் கயவன்.

[படை வீரரிடையே பலத்த கொந்தளிப்பு]

**பாதர்:-** [தொடர்ந்து] சூரத் தனத்தாலா?.... இல்லை.... சூழ்ச்சி வலையால்!... சூது மார்க்கத்தால்! .......

[வீரரிடையே பரபரப்பு]

**வீரன் 1:-** விடை கொடுங்கள்,... அந்தக் கடையனின் மார்பைக் கிழித்து எங்கள் கத்தி முனைக்கு இரத்த விருந்தளிக்கிறோம்.

**வீரன் 2:-** பரங்கிகளின் தலைகளைப் பந்தாடுகிறோம்!

**பாதர்:-** [கையமர்த்தி] அமைதி! அமைதி!! உங்கள் தோள்கள் துடிப்பதை அறிவேன்...... ஆனால் அவசரத்தில் அறிவிழந்து விடக் கூடாது.... சதியை மதி கொண்டுதான் மாய்க்க வேண்டும்.... இதைக் கேளுங்கள்... நான் இன்றிரவே எப்படியும் கோட்டைக்குள் நுழைந்து விடுகிறேன்... நீங்கள் பாசறைகளைப் பெயர்த்துக் கொண்டு பாஞ்சைக்குப் பயணப் படுவது போல் நடிக்க வேண்டும் எதிரிகள் பின் வாங்கி விட்டனர் என்ற எக்களிப்பில் வெள்ளையர்கள் குடித்து வெறித்துக் கூத்தடித்து ஒய்ந்து விடுவார்கள்.... சாமக் கோழி கூவியதும் எக்காளத்தை எடுத்து ஊதுவேன். எக்காள தொனி கேட்டவுடன் காட்டாற்று வெள்ளம் போல கடிதில் கோட்டைக்குள் புகுந்து விடுங்கள் எல்லோரும்... பிறகு... பரங்கிகளின் தலைகளைப் பனங்காயைச் சீவுவது போல் 'சிவுக்' 'சிவுக்' கென்று சீவித் தள்ளுங்கள்.

**வீரர்கள்:-** அப்படியே செய்கிறோம்.

**பாதர்:-** சரி. நான் உடனே புறப்படுகிறேன்.

[பாதர் வெள்ளையும் வீரம்மாளும் போதல்]

**பாதர்:-** [வீரம்மாளிடம்] அது சரி.... நான் கோட்டைக்குள் பிரவேசிப்பது எப்படி சாத்திய மாகும்? காவல் பலமாயிருக்கிறதே.

**வீரம்:-** நீங்கள் ஒரு குறவன்.......

**பாதர்:-** இல்லை... மறவன்!

**வீரம்:-** மறவரைத்தான் குறவன் வேஷம் போடச் சொல்கிறேன்.

**பாதர்:-** வேஷமா?

**வீரம்:-** ஏன்? வீர சிவாஜி வேஷமிட்டு விந்தைகள் புரியவில்லையா?

**பாதர்:-** [ஆலோசித்தவாறு] உம். சரி... உன் இஷ்டம்! வேண்டாமென்றால் விடப் போகிறாயா?

[பாதர் வெள்ளை குறவன் வேஷம் அணிந்து கொள்ளல்]

**வீரம்:-** சரி. சரி. சீக்கிரம் புறப்படுங்கள்- இருட்டி விட்டால் கோட்டைக்குள் யாரையும் அனுமதிக்க மாட்டார்கள்... தலைவி வேறு தங்களைக் காண அனலிற் புழுவெனத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

[பாதர் வெள்ளையும் வீரம்மாளும் கோட்டைக்குள் நுழைதல்]

[மாற்றம்]



# களம் உக.

**இடம்:-** சேதுபதி அரண்மனையின் அந்தப் புரத்தை அடுத்த மலர் வனம்.

**காலம்:-** இரவு.

**உறுப்பினர்:-** வெள்ளையம்மாள்' பாதர், வெள்ளை, வீரம்மாள் முதலானோர்.

[வெள்ளையம்மாள் பாதர் வெள்ளையைக்காண வழி மேல் விழி வைத்து காத்திருத்தல்]

[பாதர் வெள்ளை வீரம்மாள் ஆகியோர் வருகை]

**வீரம்:-** *அம்மா! கள்ளனைக் கையோடு கொண்டு வந்து விட்டேன்!*

[வெள்ளையம்மாள் நாணம் மேலிட தலை கவிழ்தல்]

**பாதர்:-** [திடுக்கிட்டு] *யார் கள்வன் ?*

**வீரம்:-** *தாங்கள்தான். எங்கள் தலைவியின் உள்ளங் கவர்ந்த கள்வன் ?*

[வெள்ளையம்மாள் உணர்ச்சி மேலீட்டால் கண்களில் நீர் பெருக்கெடுக்க பாதர் வெள்ளையின் பாதங்களில் வீழ்ந்து பணிந்தெழல்]

**வெள்ளை:-** *சுவாமி! தங்கள் பராக்கிரமத்தைக் கேள்வியுற்றேன். பலகாலம் தவங் கிடந்தேன் தங்களைப் பார்க்கும் பாக்கியம் பெற. இன்று வரம் கிடைத்து விட்டது. பெறற்கரிய பெரும் பேறு பெற்று விட்டேன்.*

[தோழி வீரம்மாள் நழுவுதல்]

**பாதர்:-** தேவி! களம் பல கண்டிருக்கிறேன். ஆயுதங்களை யெல்லாம் அநாயாசமாய் எதிர்த்துப் போரிட் டிருக்கிறேன். ஆனல்.... உன் விற்புருவம், வேல் விழி... இரத்தச் சிவப்பை நிகர்க்கும் உன் கன்னக் கதுப்பு... தளவரிசையைத் தகர்க்கும் உன் பல் வரிசை, கூர் வாளைப் பழிக்கும் உன் கூரிய மதி... இந்த போர்க் கருவிகள் எடுத்த மாத்திரத்தில் என்னை எளிதில் புறங் கண்டு விட்டன ... கண்ணே!

[இருவரும் அருகுற அணுகல்]

**வெள்ளை:-** கண்ணாளா! வான் வரை வளர்ந்து நிற்கும் வரைகளின் வனப்பினைக் கண்டு ரசித்திருக்கிறேன். ஆனல் திரண் டெழுந்த உங்கள் தடந் தோள்களின் எழிலுக்கு இணை யில்லை அது. விரிந்த விசும்பின் அழகினைக் கண்டு வியந்திருக்கிறேன். ஆனல் தங்கள் விசால மார்பின் வசீகரத்துக்கு அது ஈடில்லை. உதய சூரியனைக் கண்டு உள்ளம் சிலிர்த்திருக்கிறேன். ஆனல் என் இதய ஜோதியின் எழுச்சியின் முன் அது எம் மாத்திரம்?

[இருவரும் கரம் பிணைதல்]

**பாதர்:-** பேசு கண்ணே பேசு... போர்க் களத்தில் எக்காள தொனி எனக்கு இத்தனை இன்பம் நல்கிய தில்லை...... ஏன்?... வாள் வீச்சிலே கூட காணுத பேரின்பத்தை உன் வாய்ப் பேச்சிலே காண்கிறேன் [அன்பே! ஆனந்த பரவசத்தில் மூழ்கிய வாறு] இன்னமுதே...!

**வெள்ளை:-**[மெய்ம் மறந்த வண்ணம்] என் இன்னுயிரே!

[இருவரும் அணைதல்]

**[மாற்றம்]**



# களம் உஉ.

இடம்- ஜாக்ஸன் அலுவலகம்.
காலம்- இரவு.
உறுப்பினர்:- மேஜர் ஜாக்ஸன், லெப்டினன்ட் கிளார்க், முதலானோர்.

[ஜாக்ஸன் மாடியில் நின்றவாறு பாஞ்சை வீரரின் பாசறையை ஒரு நோட்டம் விட்டுத் திரும்பத் திரும்பல்]

[கிளார்க் பிரவேசம்]

**ஜாக்ஸன்:-** *லெப்டினன்ட் கிளார்க்!*

**க்ளார்க்:-** Yes sir!

**ஜாக்ஸன்:-** *பாஞ்சையான் பாசறையில் அரவத்தையே காணுமே!* Pin drop silence *நிலவுகிறதே!*

**க்ளார்க்:-** *ஓடி விட்டார்கள் பேடிகள்!*

**ஜாக்ஸன்:-** *யார்? பாளையக் காரர்களா?*

**க்ளார்க்:-** That's right! *பாஞ்சாலங்குறிச்சிக்குப் பயணப்பட்டு விட்டார்கள்.*

**ஜாக்ஸன்:-** *ஆச்சரியம்!...*

**க்ளார்க்:-** *இல்லை.... இயல்பு... மேஜர் சார்! 'தலைவனை இழந்த தளம்,' 'பதியைப் பிரிந்த பத்தினி,' 'சிற கொடிந்த பறவை,' 'பாய் மரம் பாழ்பட்ட படகு,' 'பற்றுக்கோலைப் பறிகொடுத்த அந்தகன்'... நிலை குலைவது இயல்புதானே!*

**ஜாக்ஸன்:-** [மகிழ்ச்சி மேலீட்டால் துள்ளிக் குதித்து] Correct! *பல நாள் பட்ட பாட்டுக்கு இன்று*

---
Pin drop silence—ஊசி விழுந்தால் கூட கேட்கத் தக்க அமைதி.

தான் பலன் கிடைக்கப் போகிறது. பாஞ்சை யான் பவிசுக்கு......

க்ளார்க்:- [குறுக்கிட்டு] இன்றே நான் சமாதி கட்....

ஜாக்ஸன்:-[இடைமறித்து] Correct! ஹ....ஹ... ஹ... அந்த சமாதியின் மேல் தான் எனக்கினி சாந்தி!

க்ளார்க்:- That's right!

ஜாக்ஸன்:- சரி! ஆரம்பமாகட்டும் ஆனந்தக் கேளிக்கைகள்!

[வெள்ளைய னொருவனும் ஆங்கில மாதொருத்தியும் நடனமாடல்]

[பாடல்]

ஆண்;- இணை பிரியாது இனிது வாழ்வோம் மயிலே!
பெண்:- துணையாக வந்து வாய்த்த என் துரையே!
ஆண்:- நீயே எந்தன் Wife!
பெண்:- நீரே எந்தன் Life!
ஆண்:- Coat ம் Suit ம் போலே!
பெண்:- Lips ம் Stick ம் போலே!
ஆண்:- Wine ம் போதையும் போலே!
பெண்:- Fire ம் Smoke ம் போலே!
ஆண்:- Bread ம் Butter ம் போலே!
பெண்:- Boots ம் Socks ம் போலே!
ஆண்:- இணை பிரியாது இனிது வாழ் வோம் மயிலே!
பெண்:- துணையாக வந்து வாய்த்த என் துரையே!
ஆண்:- நான் Moon!
பெண்:- நான் Light!
ஆண்:- நான் Sky!
பெண்:- நான் Blue!
ஆண்:- நான் Beach!
பெண்;- நான் Breeze!

**ஆண்**:- நான் Wave!
**பெண்**:- நான் Noise!
**ஆண்**:- உன் நீல நிற விழியிலே நிலை குலைந்தேனே!
**பெண்**:- உம் செம்பட்டை மயிரிலே சிந்தை குளிர்ந்தேனே!
**ஆண்**:- கலை மானே!
**பெண்**:- தெளி தேனே!

[வெள்ளையர் குடித்து வெறித்துக் கூத் தடித்தல்]

[**மாற்றம்**]



# களம் உரு.

**இடம்**:- சேதுபதி அரண்மனைக் கன்னி மாடம்,
**காலம்**:- நடு நிசி.
**உறுப்பினர்**:-பாதர் வெள்ளை,வெள்ளையம்மாள் முதலானோர்.

[பாதர் வெள்ளையும் வெள்ளையம்மாளும் அளவளாவிக் கொண்டிருத்தல்]

[சாமக் கோழி கூவுதல்]

**வெள்ளை**:- [திடுக்கிட் டெழுந்து] வேளை வந்து விட்டது சுவாமி!

**பாதர்**:- ஆ!.... நேரம் நெருங்கியதே தெரிய வில்லை, பொற்றொடியாளுடன் பொழுது போக்கி யதில்...

---

Beach-கடற்கரை,
Breeze-காற்று.
Wave-அலை.
Noise-ஓசை.

வெள்ளை:- சீக்கிரம் சுவாமி! சிங்கங்கள் சிறைப் பட்டிருக்கின்றன. காளைகள் காத்திருக்கின்றன கட்டளையை எதிர் நோக்கி!

பாதர்:- காதல் வேகத்தில் கடமையை மறந்து விட மாட்டேன் கண்ணே!

[பாதர் வெள்ளை எக்காளத்தை எடுத்து ஊதுதல். பரிவாரங்கள் கோட்டைக்குள் புகுதல். பொட்டிப் பகடையும் முத்தன் பகடையும் பாதர் வெள்ளையிடம் வரல்]

பொட்டி:- வீரர்கள் எல்லோரும் கோட்டைக் குள் புகுந்து விட்டனர் இளவரசே!

பாதர்:- இதோ புறப்பட்டு விட்டேன்.

[புறப்படச் சித்தமாதல்]

வெள்ளை:- உதவி கிடைத்து விட்டது சுவாமி! உடனே கிளம்புங்கள்!...... [வழியைக் காட்டி]... இதோ.... இந்த வழியாக நேரே கிழக்கு நோக்கிச் சென்று தெற்கே திரும்பினால் இருப்புக் கதவு போட்ட அறையொன்று தென்படும். அங்குதான் அரிமாக்கள் அடை பட்டிருக்கின்றன... வெளிச் சுவற்றின் மேல்புரம், சற்று உயரத்தில் 'க்ளைவ்' உருவப்படம் ஒன்று இருக்கும்... அதை நீக்கி நோக்கினால் விசை யொன்று இருப்பது புலனாகும். விசையைச் வேகமாய்ச் சுழற்றினால் போதும். கதவு தானாகத் திறந்து கொண்டு விடும்.

பாதர்:- அதை நீ எப்படித் தெரிந்து கொண் டாய்?

வெள்ளை:- அது ஒரு பெரிய கதை! அப்புறம் சொல்கிறேன்....... காவலைக் கடந்து செல்வது தான் கடினம்.

பாதர் - கவலைப்படாதே கண்ணே! இதோ அரை நொடியில் அண்ணல்களை மீட்டு வருகிறேன். [வெள்ளையம்மாளின் முகவாட்டத்தைக் கண்டு துணுக்குற்று] ஆ! குவளை மலர் ஏன் குவிந்து விட்டது?

வெள்ளை:- ஆருயிரே! நீங்கள் திரும்பும் வரை என் உயிர் என் வசம் இருக்காது.

பாதர்:- கொஞ்சும் அஞ்சுகமே! அஞ்சாதே! என் உயிரைத்தான் உன்னிடம் விட்டுச் செல்கிறேனே!... [வீரர்களிடம்] பொட்டிப் பகடை முத்தன் பகடை!.... புறப்படுங்கள் உடனே!

[பாதர் வெள்ளை பொட்டிப் பகடை, முத்தன் பகடை, ஆகியோர் சிறைச்சாலையை நோக்கிச் செல்லல]

[மாற்றம்]



## களம் உச.

**இடம்:-** சிறைச்சாலை.

**காலம்:-** நள்ளிரவு

**உறுப்பினர்.-** பாதர் வெள்ளை, கட்ட பொம்மன் க்ளார்க் முதலானோர்.

[பாதர் வெள்ளை காவல்காரர்களை நையப் புடைத்து, சிறையைத் திறந்து தலைவர்களை விடுவித்தல்]

**பாதர்:-** [கட்டபொம்மனைக் கண்டு] **அப்பா!**

**கட்ட:-** *மைந்தா!*

[இருவரும் தழுவுதல்]

[அரவம் கேட்ட லெப்டினன்ட் க்ளார்க் நித்திரை தெளிந்தெழுந்து சிறைச் சாலைக்கு வரல்]

**க்ளார்க்:-** [கட்டபொம்மனை நோக்கி துப்பாக்கியை நீட்டியவாறு] ஏய் கட்டபொம்மா! அசையாதே! அதை விட்டு அடி பெயர்ந்தால்... நான் அப்புறம்... அவ்வளவு தான்!

[அவ்வமயம் அங்கு வந்த பாதர் வெள்ளை அவன் துப்பாக்கியைத் தட்டி விட்டு அதனை அப்பால் தூக்கி எறிதல்]

**கட்ட:-** டேய் க்ளார்க்! தீயைத் தீண்டுகிறாய்!

**க்ளார்க்:-** இல்லை கொசுவை நசுக்கப் போகிறேன்.

**கட்ட:-** மரியாதையாய் எட்டி நில்! அல்லது எடு உன் வாளை! எதிர்த்து நில் என்னை! பின் செத்து மடி!

**க்ளார்க்:-** [அலட்சியமாக] ஹூஉ! குழி முயலைக் கூர்மம் மேற்கொள்வதா?...ஹ...ஹ ..ஹ

[க்ளார்க் வாளை உருவி நிராயுத பாணியாய் நின்ற கட்ட பொம்மனை நோக்கிப் பாய்தல். பாதர் வெள்ளை தன் உடைவாளை உருவி கட்ட பொம்மனிடம் வீசி எறிதல். அதைக்கொண்டு கட்ட பொம்மன் க்ளார்க் கோடு வாட்போர் புரிதல்]

**கட்ட:—** [க்ளார்க்கை வீழ்த்தியவாறு] இதோ என் வாள் முனை உனக்குத் தரும் கடைசி முத்தம். ... ஏற்றுக் கொள்! ஹ... ஹ.... ஹ...!

[க்ளார்க் மடிதல்]

[ராமநாதபுரம் கோட்டைக்குள், கும்பினியார் பட்டாளத்துக்கும், பாஞ்சாலங்குறிச்சிப் பரிவாரங் களுக்கு மிடையே பயங்கர போர் நிகழ்தல். வெள்ளையருக்கு பெருத்த உயிர்ச் சேதம் நேரல். பாதர் வெள்ளை, நெற்றியில் பலத்த காயமுறல். பாஞ்சை வீரர்கள் பலங் கொண்ட வரை வெள்ளையரை வெட்டி வீழ்த்தி விட்டு வெற்றியோடு வெளி யேறல்]

[மாற்றம்]



## களம் உ௫.

**இடம்:-** பாஞ்சை போகும் பாதை யோரமாயுள்ள கன்னிமார் கோவில்.

**காலம்:** வைகறை.

**உறுப்பினர்:-** கட்டபொம்மன் ஊமைத்துரை, துளசிங்கம் வெள்ளையம்மாள் பாதர் வெள்ளை முதலா னோர்.

[வெள்ளையம்மாள் பாதர் வெள் ளையின் காயத்துக்கு மருந்திடல்]

**வெள்ளை:—** [காயத்தைக் கண்ணுற்றுக் கவலை யோடு] *கண்ணாளா! காயம் பலமாகப் பட்டு விட்டதே!*

**பாதர்:—** *ஹ.... ஹ... ஹ... விழுப்புண்! வீரம் தந்த அன்பு முத்திரை! ஏந்திழையே! இதற் காகவா வருந்துகிறாய்?*

[கோவிலின் மற்ருெரு பகுதியில்]

[கட்டபொம்மன் அமைதி யின்றி அங்குமிங்கும் உலவுதல்]

கட்ட:— சிலந்தி வலேயில் சிக்கி விட்டாரே சிவ சுப்ரமணியபிள்ளே... உம... அவதிப் படுவாரே அப்பாவி, அரவினும் கொடியோன் ஜாக்ஸ னிடம்!

[ஆலோசித்தல்]

ஊமை:— கலியாண சந்தடியில் தாலியை மறந் தது போல், களத்தில் நடந்த கலவரத்தில் தாஞ பதியாரை மறந்து விட்டோம்.

[பாதர் வெள்ளே வருகை]

பாதர்:— மீண்டும் புறப்படுவோம், ராமஞத புரம் நோக்கி, பிள்ளேயவர்களேச் சிறை மீட்க.

[எல்லோரும் புறப்படுதல். கவுளி சப்தித்தல்]

கட்ட;- [வாயிலில் தயங்கி நின்றவாறு] ஆ! பல்லி சொல்லுகிறதே... எங்கே தும்பிச்சி நாயக்கர் ?.... பலன் கேட்டுப் பார்ப்போம்.

[தும்பிச்சி நாயக்கர் அழைத்து வரப்படல்]

தும்பி:— [ஏடுகளேப் புரட்டிப் பார்த்தவாறு] அரசே! கவலே வேண்டாம். இன்னும் நாற்பது நாட்களுக்குள் எப்படியும் நாடு திரும்பி விடுவார் தாஞபதி.

ஊமை:— தம் மதி நுட்பத்திஞலேயே மடை யர்களே ஏய்த்து விட்டு வந்து விடுவார்.

துள்சி;- மேலும் நமது படையெடுப்பால் அவ ருக்கு உபகாரத்துக்கு பதில் உபத்திரவம் நேரிட்டு விடக் கூடும்.

கட்ட:— அதுவும் சரிதான்... [சிந்தித்தவாறு] ஆனால், இன்னொரு முக்கிய அலுவல் இருக்கிறது.

ஊமை:— என்ன அண்ணா அது?

கட்ட:— தூத்துக்குடியைச் சூறையிட வேண்டும்! பரங்கியானைப் பழிக்குப்பழி வாங்க வேண்டும்!

பாதர்:— பழிக்குப் பழியா?

கட்ட:— ஆம். [பழைய நினைவுகள் மனதில் பளிச்சிட] எட்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள்! ஊரில் யாரும் இல்லாத சமயம் பார்த்து, பாஞ்சாலங் குறிச்சிக்குள் புகுந்து கொள்ளையடித்துச் சென்றான்.

துளசி:— யார் அண்ணா?

கட்ட;— ஒரு புல்லன்!.... மேஜர் புல்லர்ட்டன் அவன் பெயர்!

பாதர்:—அப்படியானால்....... ஈட்டி முனைக்கு இதமான இன்னொரு இரத்த விருந்து! சபாஷ்! ஹ.... ஹ... ஹ....!

[பாளையத்தார் தூத்துக்குடியைச் சூறையிடல்]

[மாற்றம்]



## களம் உசு

இடம்:- ராமநாதபுரத்தில் ஜாக்ஸன் அலுவலகம்.
காலம்:- அதிகாலை.
உறுப்பினர்:-மேஜர் ஜாக்ஸன், காப்டன் புச்சர் முதலானோர்.

[ஜாக்ஸன் கோபாவேசத்தோடு குறுக்கும் நெடுக்குமாய் உலவல்]

ஜாக்ஸன்.— காப்டன் புச்சர்!

புச்சர்:— Yes sir!

ஜாக்ஸன்:— வலையிற் சிக்கிய மான் தளையறுத்து மீண்டும் அடவி புகுந்து விட்டது. அதைத் திரும்பவும் வளைத்துப் பிடிக்க வேண்டும்.

புச்சர்:— மேஜர் சார்! சமயம் வாய்க்கட்டும். சந்து சந்தாகப் பிளந்து........

ஜாக்ஸன்:— [குறுக்கிட்டு கிண்டலாக] கண்ட துண்டமாய் நறுக்கி விடுவீர்! இல்லையா? அன்றைக்கும் அப்படித்தான் சொன்னீர். இப்போது என்ன வாயிற்று ? போமையா போய்! வீண் சொல்வேகம் எதற்கு ? செயல் வீரம் அல்லவா வேண்டும் ?

[இருவரும் ஆலோசித்தல்]

புச்சர்:- மேஜர் சார்!... எனக்கொரு யோசனை தோன்றுகிறது...

ஜாக்ஸன்:—என்ன அது?... [கேலியாக] சந்து சந்தாகப் பிளந்து! அதுதானே ?

புச்சர்:— இல்லை மேஜர் சார்!... கட்டபொம்மன் மீது கொலைக் குற்றம் சுமர்த்தி விட்டால்...?

ஜாக்ஸன்:— கொலைக் குற்றமா?

புச்சர்:- ஆம். லெப்டினன்ட் க்ளார்க் களபலி

யாகி விட்டாரல்லவா? அதைக் கொலைக் குற்றமாகத் திரித்து....

**ஜாக்ஸன்:**—[உத்சாகத்தோடு] Correct!.... அப்படியானால் உடனே பிரகடனப் படுத்தும், கொலையாளி கட்டபொம்மனைப் பிடித்துத் தருபவர்கட்குப் பரிசு ரூபாய் ஐயாயிரம் என்று.

**புச்சர்:**— Yes sir.

[காப்டன் புச்சர் போதல்]

[ஜாக்ஸன் மாடியில் நின்றவாறு வீதியை நோட்டம்விடல். தானாபதி போவதைக் கண்ணுறல்]

**ஜாக்ஸன்:**—[தனதுள்] யார்?... தானாபதியா? ஹு....ஹு...ஹு.... இவன்தான் கட்டபொம்மனின் வலது கரம்...[சிந்தித்தல்]....உம்...நாசியை அழுத்தினால்?...வாய் தானாகத் திறந்து கொள்ளும்... ஆம்! ...அதுதான் சரி....ஏய்!...யாரங்கே?

[சிப்பாய் வந்து வணங்கி நிற்றல்]

**ஜாக்ஸன்:**- அதோ போகிறான் பார்...!

[சிப்பாய் வெளியே பார்த்தல்]

**சிப்பாய்:**- யாருங்க?

**ஜாக்ஸன்:**- பாஞ்சை நாட்டு நோஞ்சை....... அவன்தானடா! ..அந்தத் தறுதலை தானாபதி...

**சிப்பாய்:**- ஓ! ஆமாங்க!

**ஜாக்ஸன்:**- இழுத்து வாருங்கள் அந்த இரண்டுங் கெட்டானை!

**சிப்பாய்:**- உத்தரவு!

[சிப்பாய் போதல்]

[**மாற்றம்**]



# களம் உஎ.

இடம்:- பாஞ்சாலங்குறிச்சி கொலு மண்டபம்.

காலம்:- காலை.

உறுப்பினர்:- கட்டபொம்மன், பாதர் வெள்ளை, வெள்ளையம்மாள் முதலானோர்.

கட்ட:- அன்பார்ந்த மக்களே! சூழ்ச்சியால் எம்மைச் சிறைப்படுத்திய சூதர்களுக்குச் சரியான சூடு கொடுத்தோம்! இராமனுதபுரத்தை இரணகளமாக்கினோம்! வெள்ளையர் உடல்களை விலங்கினங்களுக்கு விருந்திட்டோம்! நமது இந்த முதல் வெற்றிப் பண் இசைக்க மூலக்கருவியாயிருந்தவன் இதோ...[பாதர் வெள்ளையைக் காட்டி] நெற்றியிலே விழுப்புண்ணேந்தி...நெஞ்சிலே வீரமேந்தி... தோளிலே வாகைசூடி...காலிலே கழலணிந்து நிற்கிருனே....மறவர்குல மாணிக்கம்... பாஞ்சையின் படைத்தலைவன்... என் பாலகன்....வெள்ளையத் தேவன் தான்.

[ஆரவாரம்]

ஒரு குரல்:- வீரன் வெள்ளையத்தேவன்....

அவையோர்:- வாழ்க! வாழ்க!! வாழ்க!!!

[பாதர் வெள்ளை சிரம் தாழ்த்தி அவையோரை வணங்கி நிற்றல்]

கட்ட:- வெற்றி கீதமிசைக்க வெள்ளையத் தேவனுக்கு பக்க கருவியாயிருந்தவள், வளமார் ராமனுதபுரத்தின் வானம்பாடி....வனிதாமணி...வீர வெள்ளையம்மாள்...

[மீண்டும்ஆரவாரம்]

ஒரு குரல்:- வீரவெள்ளையம்மாள்...

அவையோர்:- வாழ்க! வாழ்க!! வாழ்க!!!

கட்ட:- வீரத்துக்கேற்ற வெகுமானம் வழங்கப் போகிறேன்!

[அவையோர் ஆவலுடன் எதிர் நோக்கல்]

சேதுபதி வம்சத்தின் செழுங் கொடியை, கொண்டையங் கோட்டை மறவர் மரபின் கொழு கொம்பில் படர விடப் போகிறேன். கூடி வந்த ஜோடிப் புறாக்களை இல்லறம் என்னும் இருஞ் சிறையில் அடைக்கப் போகிறேன்! இராமநாத புரம் இரமணியை வல்ல நாட்டுக் கட்டிளங் காளைக்கு வதுவை செய்து வைக்கப் போகிறேன்...

[பலத்த ஆரவாரம்]

[கட்டபொம்மன் சமிக்ஞை செய்ய வெள்ளையம்மாளை சேடியர் அழைத்து வரல்]

ஊமை:- உம்....மங்கல வாத்தியங்கள் ஒலிக் கட்டும்.

[மங்கல வாத்தியங்கள் வானளாவ முழங்கல். பாதர் வெள்ளையும் வெள்ளையம்மாளும் மணமாலை மாற்றிக் கொள்ளல்]

கட்ட:- [இருவரிடமும்] குழந்தைகளே! வாளும் ஒளியும் போல், வேலும் கூரும் போல், உதிரமும் செந்நிறமும் போல், இணைபிரியாது வாழுங்கள், என்றும் இனிதாய்.

[இருவர் கரங்களையும் இணைத்தல். மணமக்கள் எல்லோரையும் வணங்கி நிற்றல்]

கட்ட:- மைந்தா! நீங்கள் இருவரும் வல்லநாடு சென்று சிலகாலம் வதிந்திருங்கள். விழுப்புண் தழும்பேறிய பின் நீ மீண்டும் வரலாம்.

பாதர்:- [திடுக்கிட்டு] ஆ!... பாஞ்சாலங்குறிச் சியைப் புரட்சிப் புயல் சூழ்ந்திருக்கிறது! கலகக்

கார்மேகங்கள் கவிந்திருக்கின்றன!... பழி வாங்க சமயம் பார்த்திருக்கிறான் பரங்கி!.... இந்த இக்கட்டான நிலையில் தங்களை விட்டு விட்டு நான் மட்டும் இன்பம் துய்க்கச் செல்வது தகுமா தந்தையே?

கட்ட:- மகனே! போரில் ஏற்பட்ட களைப்பைக் களையவும், புது மனைவியுடன் களிப்பைக் கண்டடையவும் கண்டிப்பாய் நீ சென்றுதான் ஆக வேண்டும்.

பாதர்:- அப்பா....... நான்......

கட்ட:- [ஆத்திரமாய்] இந் நாட்டு அரசன் கட்டளை யிடுகிறான்! மறுத்தால் ராஜ தண்டனை!

பாதர்:- [துணுக்குற்று] ஆ! [தயங்கியவாறு] சித்தம் அரசே!

கட்ட:- வருந்தாதே புதல்வா! அவசியம் நேர்ந்தால் உனக்கு உடனே அழைப்பு அனுப்புகிறேன்.

பாதர்:- ஆகட்டும் தந்தாய்!

[பாதர் வெள்ளை எல்லோரிடமும் விடைபெற்று வெள்ளையம்மாளுடன் வல்லநாடு பயணமாதல்]

[மாற்றம்]



## களம் உஅ.

இடம்:— ராமனுதபுரத்தில் ஜாக்ஸன் அலுவலகம்.
காலம்:— காலை.
உறுப்பினர்:— மேஜர் ஜாக்ஸன், காப்டன் புச்சர், தானுபதி முதலானோர்.

[சிப்பாய்கள் தானுபதியைப் பிணைத்து இழுத்து வந்து ஜாக்ஸன் முன்னிலையில் நிறுத்தல்]

ஜாக்ஸன்:- [கோபாவேசமாய்] தானுபதி!....... கட்டபொம்மன் கம்பெனிக்குக் கப்பம் கட்டப் போகிறுனு? இல்லையா? என் கடைசி வினு...முடிவான விடை தேவை!

தானுபதி:- மேஜர் சார்! நான் மட்டும், கட்டபொம்மு வாயிருந்தால் கட்டாயம் கப்பம் கட்டியிருப்பேன். ஆனுல்...

ஜாக்ஸன்:- குதர்க்கம் பேசாதீர்! நீர் கீறின கோட்டை அவன் தாண்டுவ தில்லையாமே!

தானுபதி:- அறிவிலிகள் அரற்று வார்கள் அப்படி....

ஜாக்ஸன்:- Shut up!

தானுபதி:- கோபித்துக் கொள்ளாதீர்கள். நான் ஒரு சாதாரண அரசாங்க அலுவலன், மேஜர் சார்! நான் பாஞ்சை நாட்டி லிருந்தால் என்ன? பரங்கி நாட்டி லிருந்தாலென்ன? ...உடலை உழைத்தால் தானே ஊதியம்?

ஜாக்ஸன்:- நீர் எடுத்துரைப்பதுதானே அந்த எத்தனிடம்?

தானுபதி:- எவ்வளவோ எடுத்துச் சொன்னேன்.

ஜாக்ஸன்:- என்ன வென்று?

தானுபதி - 'கம்பளத்துத் துரைமகனே! கம்பெனியார் பிடித்தால் குரங்குப் பிடிதான்.... மூர்க்கனும் முதலையும் கொண்டது விடாது....'

ஜாக்ஸன்:- Correct!... சரியான எச்சரிக்கை செய்திருக்கிறீர்...உம் அப்புறம்...?

தானுபதி:- 'அவர்கள் கேட்பது கேவலம் பிச்சைக்காசு...'

ஜாக்ஸன்;- [குறுக்கிட்டு] ஓய்!...

**தானபதி:-** [தொடர்ந்து] 'கம்பெனியார் ஏன் வீணாய்க் கத்துகிறார்கள். வீசி எறிந்துவிடுங்கள்...'

**ஜாக்ஸன்:-** [இடைமறித்து] ஓய்!....

**தானபதி:-** [தொடர்ந்து]...என்று நயமாகவும் பயமாகவும் பலமுறைகளிலும் முயன்று பார்த்தேன்.

**ஜாக்ஸன்:-** அதற்கு என்ன சொன்னான் அந்த அறிவிலி?

**தானபதி:-** '....யாசகம் கேட்டால் கொடுத்து விடலாமே! அதிகாரப் பிச்சையல்லவா கேட்கிறான்? அற்பன்! அசடன்! அதமன்! அயோக்கியன்!....

**ஜாக்ஸன்:-** [இடைமறித்து] ஓய்! நிறுத்தும். நிறுத்தும்...

**தானபதி:-** [தொடர்ந்து] '....வெள்ளைக்காரன்! கொள்ளைக்காரன், அப்படி! இப்படி!...'

**ஜாக்ஸன்:-** Nonsense!

**தானபதி:-** யாருங்க?...என்ன மேஜர் சார்! பெரிய இடத்திலிருந்து இந்த மாதிரி சின்ன வார்த்தை வரலாமா?

**ஜாக்ஸன்:-** [ரௌத்காரமாய்] உம்.... இப்பொழுது தெரிகிறது, எரியும் நெருப்பில் எண்ணை வார்ப்பவன் யாரென்று! பிரதிமையை ஆட்டுவிக்கும் சூத்திரதாரி யாரென்று! துர்த்தனுக்குத் தூபமிடும் துராத்மா யாரென்று! ...ஏய்!.... யாரங்கே...?

[சிப்பாய்கள் வரல்]

கொண்டு செல்லுங்கள் இந்தக் கோணங்கியை, கவாத்து மைதானத்துக்கு

[தானபதியை சிப்பாய்கள் இழுத்துச் செல்லல்]

*ஜாக்ஸன்:- காப்டன் புச்சர்!*

புச்சர்:- Yes Sir!

*ஜாக்ஸன்:- சித்ரவதை செய்யும் இந்தச் சிறு நரியை!*

புச்சர்:- Yes Sir!

[காப்டன் புச்சர் போதல்]

**[மாற்றம்]**



## களம் உகூ.

*இடம்;* — கவாத்து மைதானம்.

*காலம்;* — நண்பகல்.

*உறுப்பினர்:* — காப்டன் புச்சர், தாஸுபதி, ஜாக்ஸன் முதலானோர்.

[தாஸுபதி சித்ரவதை செய்யப் படல். தாஸுபதியின் கைகளை உயர்த்தி, கனத்த துப்பாக்கி ஒன்றைக் கொடுத்து ஓடுமாறு பணித்தல்]

புச்சர்:- ...Double March!...உம்...Double up! ...Left ..Right...Left....Right...

[தாஸுபதி தள்ளாடியவாறு ஓடுதல்]
[ஜாக்ஸன் வருகை]

*ஜாக்ஸன்:- உம்... நகக்கண்களில் ஊசி ஏற்றுங்கள்! நாசியில் கொதிநீரை ஊற்றுங்கள்! கை*

---

கவாத்து மைதானம்—Parade ground.

களில் கிட்டி கட்டி நெருக்குங்கள்! வாட்டுங்கள்! வதையுங்கள்!

[சித்ரவதைக் காளான தானுபதி தாங்கொணு வேதனையால் அலறி அழல்]

உம்...அழட்டும்! அலறட்டும்!....துடிக்கட்டும்!... இக் கயவனின் கதறல் கட்டபொம்மன் காதுகளில் சென்று எட்டட்டும்! நெருப்புடன் விளையாடும் அந்த நீசனுக்குப் புத்தி கற்பிக்கட்டும்,

[தானுபதி இவ்வையன்ன பிற இன்னல்களுக்கு இலக்காதல்]

[தானுதிபதியிடம்] இப்பொழுது என்ன சொல்கிருய்? இசைகிருயா எமது கோரிக்கைக்கு?

தானுபதி:- இணங்கவேண்டியது கட்டபொம்மு துரை? அம்மை விட்டு விட்டு ஏன் வாலேப் பிடிக்கிறீர்கள்?

ஜாக்ஸன்:- உம்... [சிந்தித்தவாறு] காப்டன் புச்சர்!

புச்சர்:- Yes sir!

ஜாக்ஸன்:- இவனைத் திரும்பிப் போக அனுமதித்தால்......

புச்சர்:-தீமூட்டி விடுவான் அந்த தீவட்டியிடம்.

ஜாக்ஸன்:- Correct! திரும்பிப் போக மாட்டான். திருச்சிக்குப் பயணமாகிருன். [பெருமூச்சுடன்] அது சரி.......? கட்டபொம்மனை விட்டு விட்டோமே!

புச்சர்;- கவலைப் படாதீர்கள் மேஜர் சார்! சமயம் வாய்க்கட்டும். சந்து சந்தாகப் பிளந்து...

ஜாக்ஸன்:- [இடைமறித்து] போதும் நிறுத்திக் கொள்ளும்,

[தானுதிபதி திருச்சிராப்பள்ளிக்கு மூடு பல்லக்கில் அனுப்பப் படல்]

[மாற்றம்]



## களம் ௩௰.

**இடம்:-** சென்னை செண்ட் ஜ்யார்ஜ் கோட்டை.
**காலம்:-** காலை.
**உறுப்பினர்:-** கவர்னர் க்ளைவ், கர்னல் மாக்ஸ்வெல்.

[கம்பெனி தலைமைக் காரியாலயத்தில் மந்திராலோசனை நடைபெறல்]

**கவர்:-** ***கர்னல் மாக்ஸ் வெல்!***

**மாக்ஸ்;-** Yes your Excellency!

**கவர்:-** ***தெற்கு வட்டாரத்தி லிருந்து தகவல் ஒன்றையும் காணுமே!***

[கம்பெனி சேவகன் சில கடிதங்களைக் கொடுத்துப் போதல்]

[கவர்னர் கடிதங்களைப் பிரித்துப் படித்தல்]

***ராமனுதபுரம் கோட்டையைத் தாக்கிப் போரிட்டனர் பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்தார். பலத்த உயிர்ச் சேதம். லெப்டினன்ட் க்ளார்க் கொலையுண்டார். தானுபதியைச் சிறைப் படுத்தி திருச்சிக்கு அனுப்பி யிருக்கிறோம்.***

**ஜாக்ஸன்.**

**கவர்.-** [ரௌத்காரமாய்] ***ஆ! கிளார்க் கொலையுண்டார்! இருபத்தைந்து வயது கூட நிரம்பாத இளம் தளபதி!... புது மண மகன்... கொடுமை! ...கர்னல் மாக்ஸ்வெல்!***

மாக்ஸ்:- Yes Your Excellency!

கவர்:- வல்லூறுவிடம் வாலாட்டுகிறது அந்த சின்னஞ் சிறு சிட்டுக்குருவி... அதை உடனே சுட்டுப் பொசுக்க வேண்டும். என்ன சொல்கிறீர்?

மாக்ஸ்:- Exactly....ஹி...ஹி...ஹி

[கவர்னர் அடுத்த கடிதத்தைப் படித்தல்]

பாஞ்சைப் பரிவாரங்கள் தூத்துக்குடியைச் சூறையிட்டுச் சென்றன. பெருத்த பொருட் சேதம். பலத்த கொந்தளிப்பு.

டேவிஸன்.

கவர்:- Ramnad, Tuticorin... இரண்டு இடங்களிலும் இடக்கு செய்திருக்கிறான் ஈனன். இனியும் அவனை விட்டு வைக்கக் கூடாது... கர்னல் மாக்ஸ்வெல்!

மாக்ஸ்:- Yes Your Excellency!

கவர்:- உடனே பாஞ்சைமீது போர் தொடுத்து விட்டால்...?

மாக்ஸ்:- Exa...Excuse me my Lord!... இப்பொழுது கூடாது.

கவர்:- ஏன்?

மாக்ஸ்:- ஸ்ரீரங்கம் முற்றுகையில் மும்முரமாய் முனைந்திருக்கின்றன நமது சைனியங்கள். இந்த சமயத்தில் நமது சக்தியைக் கூர் போட்டால் இரு முனைகளிலும் தோல்வி நேரும்.

கவர்:- I See!....

மாக்ஸ்:- இந்த நெருக்கடியான நேரத்தில் பாளையத்தார் ஒரு முகமாகத் திரண்டு விட்டால், ஆங்கில ஆட்சியின் அஸ்திவாரமே ஆட்டங் கண்டு விடும்.

கவர்:- I See!... அப்படியானால்?

மாக்ஸ் - போர்க்களம் வேண்டாம் சதிக்களம் போதும்.

கவர்:- விளக்கம் தேவை!

மாக்ஸ்.- தானபதி திருச்சிக்குப் போயிருக்கிறான். முதலில் இங்கு அவனை வரவழைத்து தாஜா செய்ய வேண்டும். உபசார வார்த்தைகளில் உச்சி குளிர்ந்து விடுவான்....அவன் மூலமாக கட்டபொம்மனுக்கு ஒரு அழைப்பு விடுத்தால்...?

கவர்:- I See!.... அப்படியே செய்வோம்.... சுமுகமாகவே சிறிது காலத்தைக் கடத்திவிடலாம். [சற்று ஆலோசித்து] ஆனால் அத்தனை எளிதில் ஏமாந்து விடுவானா? ஏற்றுக் கொள்வானா நமது அழைப்பை?

மாக்ஸ்:- தானபதி சொல்லைத் தட்ட மாட்டான் கட்டபொம்மன்.

கவர்:-I See!.... ஒருவேளை மாற்றானின் வஞ்சனை இது வென்று தயங்கினால்...? மயங்கினால்...?

மாக்ஸ்:- My Lord! மயக்கத்தைப் போக்கவும் ஒரு மார்க்கம் இருக்கிறது.

கவர்:- என்ன அது?

மாக்ஸ்:- ஒரு நாடகம் நடத்தி விட்டால் போகிறது.

கவர்:- நாடகமா?

மாக்ஸ்:- Exactly... ஹி... ஹி... ஹி....

[க்ளைவின் காதுக்குள் ஏதோ ஓதல்]

கவர்:- [உற்சாகமாய்] அப்படியானால் நீதிபதிகள் பட்டியலை உடனே தயார் செய்யும், ராமனாதபுரம் சம்பவத்தை விசாரிக்க.

மாக்ஸ்:- Yes Sir!

[மாக்ஸ்வெல் பட்டியல் தயாரித்தல்]
க்ளைவ் பட்டியலைப் படித்தல்]

'Justice Fox, Justice Green, Justice, Butler; Justice Cook, Justice Smith, Justice Raw bottom, Justice Long fellow'

**கவர்:-** ஆகாகா! ஏழும் ஏழு பொறுக்கு மணிகள். நான் கிறின கோட்டைத் தாண்ட மாட்டார்கள்.

**மாக்ஸ்:-** Exactly... ஹி... ஹி... ஹி...

[**மாற்றம்**]



## களம் ௩௧.

**இடம்:-** பாஞ்சாலங் குறிச்சி கோட்டை.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** கட்டபொம்மன், ஊமைத்துரை, துளசிங்கம்.

[கட்டபொம்மன் அமைதி யின்றி அங்கு மிங்கும் உலவல்]

**கட்ட:-** ஒரு மாதம் ஓடி மறைந்து விட்டது. உத்தமர் தானாபதியைப் பற்றி ஒன்றுமே தெரிய வில்லையே,

**ஊமை:—** அண்ணா! ஜாக்ஸனுக்கும் டேவிஸனுக்கும் அஞ்சல் அனுப்பினால்...?

**கட்ட:—** அனுப்பிப் பார்த்தேன். 'உண்டு' 'இல்லை' என்று பதிலிறுக்கும் பண்புகூட இல்லை அந்த...

**ஊமை:-** [பெருமூச்செறிந்தவாறு] உம்... மகான் மறைந்த இடம் மர்மமாகவே இருக்கிறது. மனச்சஞ்சலமோ மட்டு மீறுகிறது.

களம் 31.

துளசி:- அண்ணா! வருந்தற்க. வந்து விடுவார் தானாபதி அவ்வஞ்சகர்களைத் தமது வாசாலத்தால் ஏய்த்து விட்டு.

கட்ட:- பிள்ளையவர்களின் போக்கே அலாதியாயிற்றே... வரும் பொருள் அறிவதில் வல்லுநர் தான், ஆனால் அதனை வெளிப்பட விளம்பத் தவறி விடுவார்... திட்டம் பலத் திறம்படத் தீட்டுவார். ஆனால் அவற்றை அமுலாக்கத் துணியமாட்டார்.... ஆங்கிலேயனின் மொழி அறிவார்; ஆனால் அவன் வெட்டும் குழி அறியார்....மதிநுட்பம் படைத்தவர் தான்; ஆனால் சமயத்தில் மதி மயங்கியும் விடுவார். அதனால்தான் அஞ்சுகிறேன், அண்ணலுக்கேதும் அவதி நேருமோ வென்று.

ஊமை:- உள வறிந்து வரச் சென்றவர்களும் இன்னும் திரும்ப வில்லையே.

துளசி:- [வெளியே கண்ணோட்டிட்டு நோக்கி] அதோ ஒற்றன் ஒருவன் ஓடி வருகிறான்.

[ஒற்றன் வந்துவணங்கி நிற்றல்]

கட்ட:- [ஆவலோடு] என்ன சேதி ?

ஒற்றன்:- அரசே! பல்வேறு சித்ரவதைக் காளானார் தானாபதி அந்த பாதகன் ஜாக்ஸனிடம்......

கட்ட - [திடுக்கிட்டு] ஆ!...... [ரௌத்காரமாய்] நயவஞ்சகன்! நாகத்திலும் கொடியவன்! அவன் நாவில் எத்தனை நஞ்சு? பற்களின் இடுக்குகளில் எவ்வளவு விஷம்? அவன் உள்ளத்தில் எத்தனை கள்ளம்?... அவன் தொல்லைக்கும் ஒரு எல்லையே இல்லையா?... விடக்கூடாது அந்த வீணனை... பழிக்குப் பழி வாங்கியே ஆக வேண்டும்!....புறப்படுங்கள் உடனே!

[புறப்படச் சித்தமாதல்]

ஒற்றன்;- படையெடுப்பு இப்போது தேவை யில்லை அரசே!

ஊமை:- ஏன் தேவை யில்லை?

ஒற்றன்.-பிள்ளை யவர்கள் இப்பொழுது இராம ஞதபுரத்தில் இல்லை.

ஊமை:- பிறகு?

ஒற்றன்:- மூடு பல்லக்கில் வைத்து முத்திரை யிட்டு திருச்சிக்கு அனுப்பி வைத்தான் மூடன் ஜாக்ஸன்... ஆனல் அவரை சகல மரியாதைகளுட னும் சென்னைக்கு அனுப்பி வைக்குமாறு திருச்சி மூகாமுக்குத் தாக்கீது வந்திருக்கிறது.

கட்ட:- [மகிழ்ச்சி பொங்க] எங்கிருந்து? கும்பினி தலைமைக் காரியாலயத்தி லிருந்தா?

ஒற்றன்:- ஆமாம் வேந்தே!

கட்ட:- [நிம்மதியடைந்தவனாய்] அப்பாடா!.... ஓரளவு நிம்மதி!...... ஆனல்....... [ஆலோசித்தவாறு] அங்கு நடப்பதை வேவு பார்த்து வர....

ஒற்றன்:_ [குறுக்கிட்டு] சென்னப்ப நாயக்கர் சென்னைக்குப் போயிருக்கிறார் அரசே.

கட்ட:- அப்படியானல்.சரி. இன்னும் சற்று பொறுப்போம், தும்பிச்சி நாயக்கர் சொன்ன கெடு தீரும் வரை.

[மாற்றம்]



# களம் ௩௨.

**இடம்:—** வல்ல நாட்டில் பாதர் வெள்ளை இல்லத்தின் மருங்கிருந்த மலர் வனம்,

**காலம்:—** பூர்ணிமை இரவு.

**உறுப்பினர்:—**பாதர் வெள்ளை, வெள்ளையம்மாள்.

[பாதர் வெள்ளையும் வெள்ளையம் மாளும் சல்லாபமா யிருத்தல்]

**பாதர்:-** ஆ... கா....கா....சோபிதமான சூழ்நிலை. மோகன முழு நிலவு வள்ளன்மையோடு வாரி வழங்கும் பொன்னிறக் கதிர்க் கூட்டம்......சுகந்தம் சொரியும் சுந்தர மலர்த் தோட்டம்....இன்னிசை மீட்டும் நீரோட்டம்....இன்ப போதை யூட்டும் மெல்லிய காற்றோட்டம்...இவற்றின் இடையே இளங் கன்னியோடு நாட்டம்....ஏனோ எனக்கினி வாட்டம்?......கண்ணே!

**வெள்ளை:-** சுவாமி!

[கரம் பிணைதல்]

**பாதர்:-** களத்திலே கட்கங்கள் உராயும் 'கண்' 'கண்' என்ற ஓசையில்கூட கேட்டறியாத இன்ப நாதத்தை உன் குரலோசையில் உணர்கிறேன் தேவி!

**வெள்ளை:-** நாதா! மாங்குயிலின் தீங்குரல் கேட்டு மனங் களித்திருக்கிறேன். ஆனல் அதை ஒரு தூசளென மதிக்கிறேன், தங்கள் ஆசை மொழிகளை நான் செவி மடுக்கையில்.

[தழுவுதல்]

**பாதர்:-** பைங்கிளியே!... பகைவனுடலில் என் படைக்கலன் பதிகையில் நான் கொள்ளும் பரவசத்தைவிடப் பன் மடங்கா யிருக்கிறது உன் ஸ்பரிச இன்பம்.

வெள்ளை:- ஆருயிரே! தென்றலின் அணைப்பில் சிக்குண்டு மகிழ்ந்திருக்கிறேன்.... ஆனால் அதை ஒரு துரும்பெனக் கருதுகிறேன் என் அன்பரின் ஆலிங்கனத்தில் நான் அடையும் ஆனந்தத்தின் முன்.

[முத்தமிடல்]

பாதர்:- யுத்தம்...! அதைவிட என்னை மெத்தவும் களிப்பூட்டுகிறது உன் மெல்லிதழ் முத்தம்.

வெள்ளை:- இயற்கையின் எழிலில் இதயம் பறிகொடுத்திருக்கிறேன். ஆனால் அதை ஒரு துச்சமாக எண்ணுகிறேன் தங்கள் அன்புப்பிணைப்பில் என் நெஞ்சம் நெகிழ்ந்து உருகுகையில்.

[மெய் மறத்தல்]

பாதர்:- ஏந்திழையே! எதிரியை வீழ்த்துங்கால் நான் எய்தும் பூரிப்பினை விட அதிக உவகை அடைகிறேன் உன்னுடன் நான் உடல் உறவு கொள்கையில்.

வெள்ளை:- அரியேறே! தடாகத்தின் தண் புனலில் உருசித்து இரசித்திருக்கிறேன். ஆனால் அதைத் துளியெனக் கொள்கிறேன், கரைபுரண்டு வரும்காட்டாற்று வெள்ளப் பெருக்கைப் போன்ற தங்கள் இன்பப் பிரவாகத்தினை ஏற்கையில்.

பாதர்:- எனக்கு ஒரு விருப்பம்...

வெள்ளை:- என்ன அது?

பாதர்:- கண்ணே! நாம் என்றுமே இளமை மாறாதிருந்து இதுபோல் இன்ப வாரிதியில் மூழ்கித் திளைக்க மாட்டோமா என்று.

வெள்ளை:- அன்பே! காலச் சகடத்தின் சுழற்சியில்தான் எத்தனை மாறுதல்கள்? அவற்றுக்கு அணை போட நாம் யார்?

பாதர்:-சரி, நெடுநேரமாகிவிட்டது, வா. போய் சயனித்துக் கொள்ளலாம்.

[இருவரும் போதல்]

[மாற்றம்]



# களம் ௩௩.

இடம்:— செயின்ட் ஜ்யார்ஜ் கோட்டை.
காலம்:— காலை.
உறுப்பினர்:— கவர்னர், க்ளைவ், மாக்ஸ்வெல் முதலானோர்.

[மந்திராலோசனை நடைபெறல்]

க்ளைவ்:- கர்னல் மாக்ஸ்வெல்!

மாக்ஸ்:- Yes Your Excellency!

க்ளைவ்:- இன்னும் சில நிமிடங்களில் வந்து விடுவான் தானபதி.... இல்லையா?

மாக்ஸ்:- Exactly... ஹி... ஹி.... ஹி

க்ளைவ்:- இவனுக்கு நாம் விரிக்கிற புகழ்ச்சி வலையிலே கட்ட பொம்மனையும் இவனைக் கொண்டே சிக்க வைக்க வேண்டும். என்ன சொல்கிறீர்?

மாக்ஸ்:- Exactly.... ஹி.... ஹி... ஹி ....

க்ளைவ்:- நாம் நியமித்துள்ள நீதிமன்றத்தின் தீர்ப்பும் இன்று வழங்கப் பட்டு விடும் அல்லவா?

மாக்ஸ் :- Exactly.... ஹி.... ஹி.... ஹி....

[தானபதி பிரவேசம். க்ளைவ் அவரை எதிர் கொண்டழைத்து, மாலை சூட்டி, மலர்ச் செண்டு அளித்து, பன்னீர்

தெளித்து, தாம்பூலம் சந்தனம் வழங்கி, கைகுலுக்கி வரவேற்றல்]

**க்ளேவ்:-** வருக......வருக...... பாஞ்சைப் பதி பார்த்திபனின் பக்க துணையே வருக....மதியூக மந்திரியாரே....ஞாலம் புகழும் ஞான விற்பன்னரே வருக....வருக.... அமர்க இவ்வாசனத்தில்...

[தானுபதி உவகை பூத்த வதனத்தினராய் அமர்தல்]

**தானுபதி:-** தாங்கள் மனமுவந்து சொரிந்த முகமன் கேட்டு அகமகிழ்வெய்தினேம். ஆயினும்....

**மாக்ஸ்:-** [இடைமறித்து] அறிவோம்... ஜாக்ஸன் இழைத்துள்ள இன்னல்களை இயம்பப் புகுகுன்றீர். அல்லவா?

**தானுபதி:-** ஆம். எமது அரசரைப் பேட்டிகாண அழைத்து, அநேக ஊர்களுக்கு அலைய வைத்து, அலைக்கழித்து அவமதித்தார். முடிவில் எம்மை வஞ்சனையால் சிறைப்படுத்தி, ராமனாதபுரத்தை ரத்தக் கழனியாக மாற்றினர். எனக்கவர் இழைத்த கொடுமையும் கூறத் தரமல்ல.

**க்ளேவ்:-** I See!... சரியான பாடம் கற்பிக்கிறேன் அந்த சண்டாளனுக்கு. தானுபதியாரே! வருந்தாதீர். நீதி மன்றத்தின் முன் நிறுத்தியிருக்கிறேன் அந்த நீசனை.

**மாக்ஸ்:-** Exactly... ஹி ஹி...ஹி.... தீர்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

[கம்பெனி சேவகன் கடிதம் கொணர்தல்]

**க்ளேவ்:-** இதோ தீர்ப்பு நகலும் கிடைத்து விட்டது!

[கடிதத்தைப் பிரித்துப் படித்தல்]

'........ராமனாதபுரம் சம்பவம் சம்பந்தமாக மேஜர் ஜாக்ஸன் தமது அதிகாரத்தை துர்விநியோகம் செய்திருப்பதாக நிர்ச்சந்தேகமாய் நிரூபிக்கப்பட்டுவிட்டது, எனவே அவரைப்பதவியிலிருந்து டிஸ்மிஸ் செய்ய நாங்கள் எழுவரும் ஏகமனதாக கிழக்கிந்திய கம்பெனியாருக்கு சிபார்சு செய்கிறோம். (ஆயினும் பரிதானம் வாங்கியதாக அவர் மீது சுமர்த்தப் பட்டிருந்த குற்றம் ருசுப்பிக்கப் படவில்லை)

ஒப்பம். FOX.
**Chief Justice.**

க்ளைவ்:- சபாஷ்! தகுதியான தண்டனை... கர்னல் மாக்ஸ்வெல்!

மாக்ஸ்:- Yes Your Excellency!

க்ளைவ்:- நீதிமன்றத்தின் தீர்ப்பை ஏற்று ஜாக்ஸனைப் பதவியி லிருந்து உடனடியாக டிஸ்மிஸ் செய்கிறேன்......ராமனாதபுரம் கலெக்டராக Mr. S. R. லூஷிங்டனை நியமிக்கிறேன்... தாக்கீதும் நியமன பத்திரமும் உடனே தயார் செய்யும்.

மாக்ஸ்;- Exa...Yes Your Excellency!

[தாக்கீதையும் நியமன பத்திரத்தையும் மாக்ஸ்வெல் தயாரித்தல், க்ளைவ் அவற்றில் கையொப்பமிடல்]

க்ளைவ்:- தானபதியாரே! திருப்திதானே?

தானபதி:- மகிழ்ச்சி....இனி இது போல்...

க்ளைவ்:- ஒருபோதும் நடவாது...உத்தரவாதமளிக்கிறேன்.

தானபதி:- மெத்த வந்தனம்.

**க்ளேவ்:-** பிள்ளைவாள்! ஒரு வேண்டுகோள்...

**தானுபதி:-** என்னிடமா? இந்த ஏழையிடமா?

**க்ளேவ்:-** தங்களிடம்தான்....அஞ்சா நெஞ்சம் படைத்த பாஞ்சை யதிபனின் பராக்கிரமத்தைப் பற்றி கேள்வி யுற்றிருக்கிறோம். ஆனால்...

**மாக்ஸ்:-** [தொடர்ந்து] அவரைப் பார்க்கும் பாக்கியம் இதுவரை சித்திக்க வில்லை.

**க்ளேவ்:-** அவரோடு அளவளாவ வேண்டும் என்ற ஆவலும் இதுவரை நிறைவேற வில்லை. சென்னைக்கு ஒரு முறை அவர் விஜயம் செய்ய சம்மதித்தால்........

**தானுபதி:-** அதற்கென்ன? துரையின் சென்னை விஜயத்துக்கு உடனே ஏற்பாடு செய்கிறேன். ஆனால்......

**க்ளேவ்:-** ஆனால் என்ன?.... கவலைப்பட வேண்டாம். கவுல் கொடுத்து கண்ணியமாக, கவுரவமாக, கவர்னரின் அதிதியாக அன்புடன் வரவேற்று உபசரிப்போம்....கர்னல் மாக்ஸ்வெல்!

**மாக்ஸ்:-** Yes Your Excellency!

**க்ளேவ்:-** நாம் நாடுவதெல்லாம் நல்லோர் நட்புதானே?

**மாக்ஸ்:-** Exactly...ஹி...ஹி...ஹி...

**தானுபதி:-** அப்படியானால் சரி நான் உடனே பாஞ்சைக்குப் பயணப் படுகிறேன்........... போய் வருகிறேன்.... நன்றி! மகிழ்ச்சி! வணக்கம்!

[தானுபதி சிவிகை மீதமர்ந்து
பாஞ்சை பயண மாதல்.]

**க்ளேவ்:-** [தானுபதி போனதும்] கர்னல் மாக்ஸ்வெல்!

**மாக்ஸ்:-** Yes Your Excellency!

க்ளேவ்:- பார்த்தீரா? சொக்கி விட்டான் சுப்ர மணியன்! கொக்கைப் பிடிக்கக் கச்சிதமாகக் கண்ணி வைத்தாயிற்று. என்ன சொல்கிறீர்?

மாக்ஸ்:- Exactly... ஹி... ஹி... ஹி...

க்ளேவ்:-கலெக்டர், ஜாக்ஸனாயிருந்தாலென்ன? ஊஷிங்டனாயிருந்தாலென்ன? கூர்வாளா யிருந்தாலென்ன? சுடுகணையா யிருந்தாலென்ன? எதிரியை வீழ்த்த வேண்டும். அதுதானே நம் குறி........

மாக்ஸ்:- Exactly... ஹி... ஹி... ஹி...

[மாற்றம்]



## களம் ௩௪.

இடம்:- வல்ல நாட்டில் பாதர் வெள்ளை வீடு.

காலம்:- மாலை.

உறுப்பினர்:- பாதர் வெள்ளை, வெள்ளையம்மாள்.

பாதர்:- நாட்கள் நகர்ந்ததே தெரியவில்லை. கட்டழகியோடு நான் கழித்துக் களித்த காலத்தில்... காதல் வேகத்தில்... ஆயினும்...

வெள்ளை:-[இடை மறித்து] தெரியும்... உங்கள் உடல் இங்கிருக்கிறது, மனம் பாஞ்சையைச் சுற்றியே வட்டமிடுகிற தென்று....

[நெற்றிக் காயத்தின் கட்டை அவிழ்த்து நோக்கல்.]

கண்ணாளா! காயம் ஆறிவிட்டது.

பாதர்:-களம்புகக் காத்திருக்கிறேன் கண்ணே! ....நெருக்கடியான நிலையை எதிர்நோக்கியிருந்தது பாஞ்சாலங் குறிச்சி, நாம் வல்ல நாட்டுக்குப் பயணப்பட்டு வந்தபோது... இல்லையா?

**வெள்ளை:-** ஆம் நாதா! எனினும், போகபோக்கியங்களை நாடியல்லவே நாம் இங்கு வந்தது. அரசரின் அன்புக் கட்டளையைத் தட்ட முடியாமல் தானே வந்தோம்.

**பாதர்;-** உண்மை! ஆனால் இனி ஒரு கணம் கூட இங்கு தரிக்க என் மனம் இடம் தரவில்லை. உடனே புறப்படுவோம்.

**வெள்ளை:-** சித்தம்! [புறப்படச் சித்தமாதல்]

[பொட்டிப் பகடை வந்து வணங்கி நிற்றல்.]

**பாதர்:-** நல்ல சமயத்தில் வந்தாய், நாங்களும் பாஞ்சைக்குப் புறப்பட்டு விட்டோம்.

**பொட்டி:-** இப்போது வேண்டாம் இளவரசே. நிலைமை ஒன்றும் மோசமாகி விடவில்லை. மன்னர் சென்னை சென்றிருக்கிறார்?

**பாதர்:-** சென்னைக்கா? எதற்காக!

**பொட்டி:-** கவர்னரைப் பேட்டி காண.

**பாதர்:-** தனிமையிலா?

**பொட்டி:-** இல்லை. தானபதியாருடன்.

**பாதர்:-** [மகிழ்ச்சி மேலிட] ஆ! தானபதி வந்து விட்டாரா?

**பொட்டி:-** ஆம். அவர் மூலமாகத்தான் அன்பழைப்பு விடுத்திருக்கிறான் கவர்னர்.

**பாதர்:-** ஆனால் [ஆலோசித்தவாறு] அங்கேயும் ஏதாவது சங்கடம் ..?

**பொட்டி:-** ஏற்படாது. ஏனென்றால் இந்த முறை பாளையத்தின் அதிபர் என்ற முறையில் செல்லவில்லை. கவர்னரின் அதிதியாகப் போயிருக்கிறார்.

பாதர்:- நல்லது. தந்தை பாஞ்சை மீண்டதும், உடனே சேதி அனுப்பு.

பொட்டி.- சித்தம்!

[பொட்டிப் பகடை வணங்கிப் போதல்.]

[மாற்றம்]



## களம் ௩௫

இடம்:- சென்னை செல்லும் பாதையோரத்தில் கட்ட பொம்மன் முகாம்,

காலம்:- வைகறை.

உறுப்பினர்-: கட்டபொம்மன், தானபதி.

[அருணன் உதயமாதல். கட்டபொம்மன் துயிலெழல்]

கட்ட:— [படுக்கை விட்டெழுந்து தனதுள்] காரிருள் நீங்கிற்று.......கதிரவனும் கிளம்பி விட்டான் ...[அருணோதயத்தை வியந்தவாறு] ஆகாகா!.... அற்புதமான காட்சி!.... 'கொக்கரக்கோ' வெனக் கூவி அருக்கன் வருகைக்குக் கட்டியம் கூறும் குக்குடம்!...........கீழ்த்திசை வானில் செம்பொற் கிண்ணமென மிளிரும் செங்கதிரோன்!........இன்னிசை பாடும் புள்ளினம்!...... மணம் வீசும் மலர் வனம்!...அதோ!... தண் புனல் தடாகம்!... பகலவன் வருகை கண்டு பகட்டாய் மலரும் பங்கயம்!... என்னே இயற்கையின் இரமணீயம்!...அபாரம்!... அதிசயம்!... ஆனந்தம்! ஆச்சரியம்!

[தானபதி பூசை முடித்து எழுந்து வரல்.]

**தானுபதி:-** அரசே!... இயற்கையின் எழிலில் இலயித்து விட்டீர்கள் போலும்!

**கட்ட:-** ஆமாம் தானுபதியாரே... அது இருக்கட்டும்...சென்னை சென்றடையும் முன் போதும் போதுமென்றாகி விடும் போலிருக்கிறதே.

**தானுபதி:-** அரசே! ....ஆயிற்று........ இன்னும் இரண்டே காத தூரம் தான். இன்னும் சில நாழிகைகளுக்குள் சென்னை சேர்ந்து விடலாம்.

**கட்ட:-** சரி, புறப்படுவோம்.

[பயணத்தைத் தொடர்தல்.]

[போகும் வழியில்]

**தானுபதி:-** மதுரை,... மணப்பாறை... திரிசிரபுரம்........ இவற்றை யெல்லாம் அநாயாசமாய்க் கடந்து வந்து விட்டோம். இனி என்ன பிரமாதம்? ...அரசே! [சற்றுத் தொலைவில் சுட்டிக் காட்டி] அதோ பாருங்கள்! கொடி யொன்று பறக்கிறதே, அதுதான் செண்ட் ஜ்யார்ஜ் கோட்டை.

**கட்ட:-** கொடியா?

**தானுபதி:-** ஆம்.... ஆங்கிலேயரின் 'யூனியன் ஜாக்'

[கட்டபொம்மன் கண்ணேறிட்டு நோக்கல்]

**கட்ட:-** [கொடியைப் பார்த்து விட்டு கண்கள் சிவக்க] ஆ! தீரர்களின் கொடிபறக்க வேண்டிய இத்திருவிடத்தில் தீயோனின் கொடியா? இழுக்கு! சகிக்க இயலாத இழுக்கு! முடியுடை மூவேந்தர் கோலோச்சிய தமிழகத்தின் தலையாய நகரிலே ஆங்கிலேயனின் அதிகாரச் சின்னம்!... அன்னியனின் ஆதிக்கத்துக்குத் தமிழன் அடிமை யென்று பறை சாற்றும் அவமானச் சின்னம்....தானுபதியாரே! இதை என்னால் பொறுக்க முடியாது....அந்த

தூர்த்தர்களின் துவசத்தை துவம்சம் செய்தாலன்றி எனக்குத் தூக்கம் பிடிக்காது.

தானுபதி:= ஆத்திரத்துக்கு அணைபோட்டுக் கொள்ளுங்கள் அரசே!

கட்ட:- தானுபதியாரே!........ திரும்பி விடுவோம்!.... வேண்டாம் இந்த வீணர்களின் விபரீத உறவு!.... நீரும் நெருப்பும் நெருங்க முடியுமா? இருளும் ஒளியும் இணைந்திருக்க இயலுமா? பரங்கியிடம் பாஞ்சாலங்குறிச்சிக்கு என்ன சிநேகம்?... நச்சரவுடனு நட்பு பூணுவது?...

தானுபதி:- அரசே! நட்பை நாடியல்ல நாம் அங்கு செல்வது... அறநெறியைக் கடைப்பிடித்து அவர்களுக்கு அறிவுரை செய்ய... எச்சரிக்கை விடுக்க....

கட்ட:- [அலட்சியமாக] ஹூம்!.... கழுதைக்கு உபதேசம் காதோடு சரி! ஆங்கிலேயருக்குச் செய்யும் அறிவுரை செவிடன் காதில் முரசொலி போலத்தான். கொக்கு பால் நிறமென்று குருடனிடம் கூறுவதில் யாது பயன்?

தானுபதி:- முயன்று பார்ப்போம்... முடியவில்லையென்றால் பிறகு முடிவு கட்டுவோம்.

[மாற்றம்]



## களம் ௩௬

இடம்:- செண்ட் ஜார்ஜ் கோட்டை.

காலம்:- காலை.

உறுப்பினர்:- க்ளேவ், மாக்ஸ்வெல், தானுபதி முதலானோர்.

**க்ளேவ்:**— கர்னல் மாக்ஸ்வெல்!

**மாக்ஸ்:**— Yes Your Excellency!

**க்ளேவ்:**— ஏற்பாடுகளை யெல்லாம்..?

மாக்ஸ்:— கன கச்சிதமாகச் செய்து முடித்து விட்டேன்... நகர் பூராவும் நன்கு அலங்கரிக்கப் பட்டிருக்கிறது...... வாழை மரங்கள்...... தோரணங்கள்......வாத்திய கோஷ்டிகள்........ விருந்து வகைகள்...... சகலமும் சித்தமாகி விட்டன.

க்ளேவ்:- I see!.... Guard of Honour?

மாக்ஸ்:- Oh Yes! அதற்கு நான்தான் தலைமை தாங்கி நடத்தப் போகிறேன்.

க்ளேவ்.- I see!.. Good......மதக் கரியை வசப் படுத்த பக்குவமாகப் படுகுழி அமைத்து விட்டோம்.

மாக்ஸ்:- Exactly.... ஹி.. ஹி.... ஹி... மகுடி நாதத்தில் கட்டாயம் மயங்கிவிடும் கருநாகம்....

க்ளேவ்:- சூழ்ச்சியில் சுருண்டு விடுவான் கட்டபொம்மன் என்கிறீர்.

மாக்ஸ்:- Exactly...ஹி... ஹி...ஹி....

க்ளேவ்:- அது சரி... [தாழ்ந்த குரலில்] தற் காப்பு ஏற்பாடுகள்....

மாக்ஸ்:- பிரமாதம்!

க்ளேவ்:- I See!....

[தானபதி வருகை]

தானபதி:- கட்டபொம்மு துரை வந்து விட்டார்.

க்ளேவ்:- I See!.... மவுண்ட் ரோடு மாளிகையில் தானே இருக்கிறார்?

தானபதி:- ஆமாம்... பேட்டி?

---

Guard of Honour—மரியாதை அணி வகுப்பு.
Reception—வர வேற்பு.
Interview—பேட்டி.

க்ளைவ்:- இதோ இப்பொழுதே!.... முதலில் Reception பிறகு Interview... சரிதானே?

[மாக்ஸ் வெல்லிடம்] கர்னல் மாக்ஸ்வெல்!

மாக்ஸ்:- Yes Your Excellency!

க்ளைவ்:- வீரனை வரவேற்க உடனே புறப்படும்.

[மாக்ஸ்வெல் தானபதியுடன் போதல்]

[மங்கல வாத்தியங்கள் ஒலிக்க கட்டபொம்மன் சாரட்டில் பவனி வந்து கோட்டையை அணுகல். கட்டபொம்மன் வருகையை அறிவிக்க பீரங்கி முழங்கல். கட்டபொம்மன் அணி வகுப்பைப் பார்வையிடல். மரியாதை யேற்றல். கவர்னர் க்ளைவ் கட்டபொம்மனை எதிர் கொண்டு வந்து அழைத்துச் செல்லல். எல்லோரும் விருந்துண்ணல்]

[மாற்றம்]



# களம் ௩௭.

இடம்:- கவர்னர் மந்திராலோசனை மண்டபம்.

காலம்:- மாலை.

உறுப்பினர்:- க்ளைவ், மாக்ஸ்வெல், கட்டபொம்மன் தானபதி முதலானோர்.

க்ளைவ்:- பாஞ்சை யதிபரே! பல குற்றச் சாட்டுகள் இருக்கின்றன...

கட்ட;- தவறு....திருத்திக் கொள்ளும்.... பிரச்னைகள் என்று...

க்ளீவ்:- எங்கே உமது விளக்கம்?

கட்ட:- தர மறுக்கிறேன், உமது கூற்றை மாற்றிக் கொள்ளும் வரை.

தாணுபதி:- [குறுக்கிட்டு] உண்மையை எடுத்துரைத்து உரிமையை உறுதிப் படுத்துவதில் தவறொன்றுமில்லை யரசே!

கட்ட:- அதிதியாக அழைத்தார்! இப்போது ஆணவமாகப் பேசுகிறார்! விருந்துக் கழைத்தார்! இப்போது வீணுரை நவிலுகின்றார்.

க்ளீவ்:- நல்லது. சுமுகமாகவே பிரச்சினைகளை விவாதித்து முடிவு காண்போம்.

கட்ட:- ஒப்புக் கொள்கிறேன்.

க்ளீவ்:- முதல் பிரச்னை.... 'க்ளார்க் படுகொலை'

கட்ட:- களபலியானார் க்ளார்க். அதற்குக் காரணம் வேறு கேட்பதா? போர்க்களத்திலா ஒப்பாரி?... தன்னைக் கொல்லவரும் பசுவைக் கொல்வதுகூட பாவமில்லை. பாய வந்த புலியைக் கொன்றதில் என்ன தவறு?

க்ளீவ்:- அடுத்தது 'இராமநாதபுரம் இரணகளம்'

கட்ட:- வஞ்சனையால் எம்மை வெஞ்சிறையில் பூட்டினான் ஜாக்ஸன். மடிபிடித்திழுத்து மானபங்கப் படுத்தினான். கொதித் தெழுந்தனர் என் குடிமக்கள். அதன் விளைவு கொலை, கொள்ளை, கோர யுத்தம்!

க்ளீவ்.- தூத்துக்குடியைச் சூறையிட்டு தொண்ணூறு சாக்கு பணம் கொள்ளை கொண்டீரே! ஏன்?

கட்ட:- அகப்பட்டது அவ்வளவுதான். அது போதும் என்று திருப்தி யடைந்து விட்டேன்.

க்ளேவ்:- வேடிக்கை வேண்டாம். பிறர் பொருளைக் கள்வனைப்போல் கவர்ந்து செல்வதுதான் உமது நாட்டுப் பண்போ?

கட்ட:- இல்லை. பழிக்குப் பழி வாங்குவதுதான் பாஞ்சை நாட்டாரின் பண்பு.

க்ளேவ்:- புரிய வில்லை.

கட்ட:- எப்படிப் புரியும்?...முன்பொரு முறை அரசன் இல்லாத சமயம் பார்த்து பாஞ்சைக்குள் புகுந்து 'நாற்பதினாயிரம் வராகனைச் சுருட்டிக் கொண்டு' போனானே மேஜர் புல்லர்டன்! அதற்கென்ன சொல்கிறீர்? நாங்கள் கொள்ளை யடித்தது கொள்ளை தொண்ணூறு சாக்குப் பணம். பட்டாளத்து சிப்பாய்களின் படிச் செலவுக்குக் கூடப் பற்ற வில்லை.

க்ளேவ்:- 'அருங்குளம் சுப்லாபுரம்' கலகம்?

கட்ட:- புதையுண்ட பிணம்! தீர்ந்துபோன விஷயம்! இதைக் கேளும். எனக்கும் அதற்கும் யாதொரு சம்பந்தமு மில்லை ஒருவன் தன் கண்ணைத் தானே குத்திக் கொள்வானா? எங்கள் ஊர்களை நாங்களே சூறையிடுவோமா?... குழந்தையையும் கிள்ளி விட்டு, தொட்டிலையும் ஆட்டி விட்டான் எட்டப்பன்.... முதலில் அவற்றை எட்டயாபுரத்தோடு இணைத்ததே தவறு.

தானாபதி:- [குறுக்கிட்டு] கலகம் நேராதவாறு கண்காணித்துக் கொள்வதற்காகத்தான் இளவரசர் அருங்குளத்தில் தங்கி யிருந்தார்... அராசகம் நிகழ்த்தியது எட்டயா புரத்தினர்தான்.

கட்ட:- இன்னும் ஏதாவது...?

க்ளேவ்:- இருக்கிறது. இவற்றிற் கெல்லாம் சிகரம் வைத்தாற் போன்றது.

தானாபதி:- அம்மாடி! என்ன அது?

க்ளேவ்:- 'தோப்பாப் பணம்'

கட்ட:- தோப்பாப் பணமா?

க்ளாவ்:- ஆம். நிலவரி. ஏழு வருஷமாக பாக்கியிருக்கும் கிஸ்திப் பணம்.... அரசிறை!...

கட்ட:- [ரௌத்தகாரமாய்] ஹஹ்ம்... அரசிறை!.... கம்பெனியாருக்குக் கட்டபொம்மன் கட்ட வேண்டும், பாஞ்சை நாட்டு மண்ணைப் பயிரிட்ட குற்றத்துக்காக...ஏன்? அப்படித்தானே?

க்ளாவ்:- ஆம். ஆற்காட்டு நவாப் எமக்களித்திருக்கும் உரிமைச் சாஸனத்தின் படி.

கட்ட:- [கண்களில் கனல் பறக்க] உரிமை!... சாஸனம்! ஹஹ்!

[கோபாவேசமாக ஆசனம் விட்டெழுதல்]

தானுபதி:- [குறுக்கிட்டு] அரசே!.... அமைதியாயிருங்கள்!...அமருங்கள்...

[கட்டபொம்மன் மீண்டும் அமரல்]

தானுபதி:- [கவர்னரைப் பார்த்து] யூவர் எக்ஸெலென்ஸி! நானே சொல்கிறேன்...பருவமழை தவறி விட்டது பல ஆண்டுகளாக...பயிர்கள் தழைக்கவில்லை...பஞ்சம் தாண்டவமாடியது...பணம் கட்ட முடியவில்லை...பாஞ்சை திரும்பியதும் முதல் அலுவலாக வட்டியுள்பட உங்கள் வரிப் பணத்தைப் பைசா பாக்கியில்லாமல் பைசல் செய்து விடுகிறேன்.

க்ளாவ்:- I See!... அப்படியே செய்யுங்கள்.... பாஞ்சை யதிபரே! மெச்சினேம் உம் வீரத்தையும் விவேகத்தையும்-நமது நட்பு இனி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர வேண்டும்.

தானுபதி:- ஆகா!...நாங்கள் செலவு பெற்றுக் கொள்கிறோம்.

[கட்டபொம்மனும் தானுபதி யும் பாஞ்சை பயணமாதல்]

க்ளேவ்:- சுட்டு வீழ்த்தி யிருப்பேன் அந்த சுண்டைக்காயப் பயலை...... ஆனல் இன்றைய நிலைமை இடம்தர வில்லை அதற்கு.

மாக்ஸ்:- Exactly....ஹி...ஹி....ஹி....

க்ளேவ்:- கிஸ்தி கேட்டால் குஸ்திக்கல்லவா வருகிருன்?

மாக்ஸ்:- Exactly...ஹி....ஹி...ஹி....

க்ளேவ்:- என்ன துடுக்கு! என்ன அகம்பாவம்! என்ன மண்டைக் கர்வம். அவன் மமதையை ஆழக் குழிதோண்டிப் புதைக்க வேண்டும். என்ன சொல்கிறீர்?

Exactly...ஹி...ஹி....ஹி....ஆனல்...[ஆலோசித் தவாறு] ஸ்ரீரங்கம் கோட்டை முற்றுகை முடிந்து திப்பு சுல்தானை முற்றிலுமாக முறியடிக்கும் வரை மூச்சுவிடக் கூடாது,

[மாற்றம்]



## களம் ௩௮.

இடம்:- சென்னை திருச்சி ரஸ்தா.

காலம்:- இரவு,

உறுப்பினர்:- கட்டபொம்மன், தானுபதி.

[கட்டபொம்மனும் தானுபதி யும் பல்லக்கில் பாஞ்சை நோக்கி பயணமாகிக் கொண் டிருத்தல்]

கட்ட:- பார்த்தீரா தானுபதியாரே, பரங்கிக் காரன் பகல் வேடத்தை?.... உதட்டிலே உறவு, உள்ளத்திலே பகை!

**தானுபதி;-** அது அவன் பிறவிக் குணமாயிற்றே... பிரிந்து விடுமா அவனை விட்டு....

**கட்ட:-** வரி வேண்டுமாம் வரி!...

**தானுபதி:-** அரசே! தங்கள் கண்கள் கனல் கக்குவதைக் கண்டேன் கவர்னர் தங்களிடம் வரி பற்றி கேட்ட பொழுது.... விபரீதம் நேர்ந்து விடுமோ என்று விதிர் விதிர்த்தேன். நமக்கோ இடம் பொருள் ஏவல் சரியில்லை....சாதுரியமாகவே பேசி அவனைச் சரிப்படுத்தினேன்.

**கட்ட:-** தெரியும்! ராமனுதபுரம் அனுபவத்தை அதற்குள் மறந் திருக்க மாட்டீர் அல்லவா?

**தானுபதி:-** [முகத்தில் அசடுவழிய] போங்கள் அரசே! கேலிசெய்கிறீர்கள்!

**கட்ட;-** தானுபதியாரே! இனியும் அவன் வரி என்ற வார்த்தையை எடுத்தால்.......?

**தானுபதி:-** வாள்முனை தான் பதிலிறுக்க வேண்டும்.

**கட்ட:-** முதல்தரமான முடிவு.

[பயணத்தைத் தொடர்ந்து ஏகல்]

**[மாற்றம்]**



## களம் ௩௯.

**இடம்:-** பாஞ்சை கோட்டை.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** ஊமைத்துரை, துளசிங்கம், தானுபதி முதலானோர்.

[கம்பெனி சேவகன் கடிதம் கொணர்தல்]

**ஊமை:-** [ஆலோசித்தவாறு] என்னவா யிருக்கும்?....ராமனாத புரத்திலிருந்து வந்திருக்கிறது... கலெக்டர் லூஷிங்டன் அனுப்பி யிருக்கிறான்.... மன்னிப்புக் கோறி யிருப்பான் ராமனாதபுரம் நிகழ்ச்சிக்காக...தம்பி துளசிங்கா! இதைப் படி.

[சுப்பா நாயக்கன் கடிதத்தைப் பிரித்துப் படித்தல்]

**'...உம் மீது சுமர்த்தப் பட்டிருந்த கொலைக் குற்றம் சம்பந்தமாக, உம்மீது கருணை காட்டி, காருண்யம் மிக்க கம்பெனியார் இந்த முறை உமக்கு மன்னிப் பளித் திருக்கிறார்கள்...'**

**ஊமை:-** [இடைமறித்து] ஹும்! மன்னிப்பு!... பெரிய கருணா சாகரர்....நமக்கு இரக்கம் காட்டி யிருக்கிறார்....

**துளசி:-** யாருக்கு யார் மன்னிப் பளிப்பது?... தலைவர்களை வஞ்சனையால் சிறைப் படுத்தினான் ஜாக்ஸன்....மக்களின் கொதிக்கும் நெஞ்சத்துக்குத் தூபமிட்டான்......அதன் விளைவு கலகம்....... க்ளார்க்கின் மரணம்....

**ஊமை:-** இதை விட்டு விட்டு, கொலையாம்! குற்றமாம்! மன்னிப்பாம்! விந்தையாகவே இருக்கிறது வெள்ளை வெறியனின் போக்கு. அதிசய

மாயிருக்கிறது அவர்கள் அரசியல் அகராதி!... உம்.... அப்புறம்....

[சுப்பா நாயக்கன் கடிதத்தைத் தொடர்ந்து படித்தல்]

'...கவர்னருக்குக் கொடுத்த வாக்குறுதியின் படி வரிப்பணத்தை வட்டி யுள்பட இந்த உத்தரவு கண்டவுடன் கம்பெனிக் கருவூலத்தில் இருசால் செய்துவிட வேண்டியது'

ஒப்பம்: அந்தரங்கக் காரியதரிசி·
(மேன்மை தங்கிய கவர்னரின் உத்திரவுப்படி)

[கடிதத்தைக் கசக்கி எறிதல்]

ஊமை:- ஹூம்! வரி!... வரி!.... வரி!.... இந்த ஒரே வார்த்தைதான் அவனுக்குப் பிரணவ மந்திரம் போலும்.. ... பகற் கனவு, காண்கிறான்! பலிக்காது ஒருபோதும் பாஞ்சை மகன் உடலின் கடைசி துளி இரத்தம் சிந்திப் போகும் வரை!....... கடைசி அணு துடித்து ஓயும் வரை!... பரங்கிக்கு வரி செலுத்த மாட்டான்!...... இதை அறிவுறுத்த வேண்டும் அந்த அற்பனுக்கு.

துளசி:- அண்ணு! அனுமதி கொடுங்கள்! பாடம் கற்பித்து வருகிறேன் அந்தப் பாதகர்களுக்கு....படையெடுத்துச் செல்கிறேன், பாளையங் கோட்டை மீது....

[தானுபதி வருகை]

தானுபதி:- [குமாரசாமி நாயக்கனை ஏறிட்டுப் பார்த்து விட்டு] எரிமலை குமுறுகிறது!.... [சுப்பா நாயக்கனை ஏறெடுத்து நோக்கி விட்டு] ஆழ் கடல் ஆர்க்கிறது! ஏன் இந்தக் கொந்தளிப்பு?....நான் புறப்பட்ட நேரம் சரியில்லை போலிருக்கிறது ...ஒரு அதிமுக்கிய அலுவல் பற்றி வந்தேன். ஆனல்...

ஊமை:- தானாபதியாரே! தயக்கமின்றிசொல்லும்! என்ன சேதி?

தானாபதி:- [தயங்கியவாறு] என் மகன் குமாரு பிள்ளைக்குத் திடீரென்று திருமணம் நிச்சயமாகி விட்டது. முகூர்த்தத்துக்கு நாளும் குறித்தாகி விட்டது.

ஊமை:- பெண்......தளவாய் தாண்டவராய பிள்ளை மகள் தானே?

தானாபதி:- ஆமாம் சாமீ! என் குல விளக்கு ......ஏக மைந்தன், ஆடம்பரமாக நடத்தலாமென்றிருந்தேன். ஆனால்...

ஊமை:- அமர்க்களமாக நடத்தி விடுவோம்... அஞ்சேல்!... அழைப் பனுப்பும் நாட்டின் நாலா திசைகளுக்கும்.

தானாபதி:- வரும் விருந்தினருக்கு அமுது படைக்க நெல்தான் பற்றாக் குறையாயிருக்கிறது.

ஊமை:- களஞ்சியத்தில்...?

தானா:- மொத்தத்தில் நூறு மூட்டை நெல் தான் இருக்கிறது. இன்னும் ஒரு இருநூறு கலமாவது இருந்தால்...

துளசி:- சேத்தூர் சிவகிரி ஜமீன்தரர்களுக்குச் சொல்லி யனுப்பினால்...?

தானா:- அதற்குப் போதிய இடைவேளை இல்லை. மேலும், அங்கு நெல் கிடைப்பதும் துர்லபம்தான். திருமண நாளோ நெருங்கி விட்டது... வருகிற வெள்ளிக் கிழமை யன்று முகூர்த்தம்.

ஊமை:- உம்....வேறு என்ன செய்யலாம்?

---

*சாமீ*- ஊமைத்துரையை பாஞ்சை மக்கள் எல்லோரும்'சாமீ' என்றுதான் அன்போடு அழைப்பர்.

**துளசி:-** அண்ணா! எனக்கு! ஒரு யோசனை தோன்றுகிறது.

**ஊமை:-** என்ன தம்பி அது?

**துளசி:-** கம்பெனியானிடம் நெல் வரையறையின்றி குவிந்து கிடக்கிறது. ஸ்ரீவைகுண்டம்... பாளையங்கோட்டை களஞ்சியங்கள் நிரம்பிக் கிடக்கின்றன. அவற்றை ஒரு கை பார்த்தால்...?

**ஊமை:-** சபாஷ்! சரியான யோசனை!...ஒரே குறியில் இரண்டு வேட்டை! வெள்ளையனுக்குப் பாடம் கற்பித்தது போலவு மிருக்கும்...அதோடு நமது காரியமும் நிறைவேறும்... ஆனால் அண்ணா என்ன சொல்வாரோ.

**துளசி:-** கருத்தையா அண்ணா வல்ல நாட்டிலிருந்து திரும்ப நாள் பிடித்தாலும் பிடிக்கும் அண்ணா!

**ஊமை:-** உண்மைதான் பாலகன் பாதர் வெள்ளையின் பாசம் அவ்வளவு சீக்கிரம் அவரை விட்டு விடுமா?

**துளசி:-** அப்படியானால் நாம் உடனே புறப்படுவோம் அண்ணா! அறப்போரை அனுமதிக்க அண்ணா மறுக்க மாட்டார்.

[பாளையங் கோட்டை மீது படையெடுத்துப் போதல்]

[மாற்றம்]



## களம் ௪௰.

இடம்: — பாளையங்கோட்டை கம்பெனி நெற் களஞ்சியம்.

காலம்; — இரவு.

உறுப்பினர்: — பிரிகேடியர் பாண்டியத் தேவன், வேலாண்டிக் குடும்பன்.

[கம்பெனி களஞ்சியத்தைப் பாண்டியத் தேவன் காவல் புரிந்திருத்தல்.]

காவல்:- பாரா உஷார்!....பாரா உஷார்!...

[பிரிகேடியர் வருகை]

பிரிகேடியர்:- பாண்டியத் தேவரே!... பாஞ்சாலங்குறிச்சியார் வரிந்து கட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டதாகக் கேள்வி......

பாண்டி:— எதற்குங்க?

பிரிகேடியர்:- கம்பெனி நெல்லைக் கொள்ளையடித்துப் போக. ஆனால், அவர்கள் ஸ்ரீவைகுண்டம் போகிறார்களா? அல்லது பாளையங் கோட்டைக்கு வருகிறார்களா என்று நிச்சயமாகத் தெரியவில்லை.

பாண்டி:- பிரிகேடியர் சார்! நீங்க ஒண்ணுக்கும் பயப்படாதீங்க. பாளையங் கோட்டைக்கு வந்தானுகன்னு, அவங்களை வைகுண்டத்துக்கே அனுப்பி விடுகிறேன்.

பிரிகேடியர்:- O. K.! பாண்டியத் தேவர் என்றால் கேட்கவா வேண்டும்?... பாளையங் கோட்டையே நடுங்குகிறதே உமது பேரைக் கேட்டால்........ தேவரே!...... எதற்கும் விசேஷ சிரத்தையோடு களஞ்சியத்தைக் கண்ணும் கருத்துமாய்க் காவல் புரிய வேண்டும்!

**பாண்டி:-** ஈ, எறும்பு நுழையாமே பார்த்துக்க றேனுங்க. எவனாவது உள்ளே நுழைஞ்சான்...? அப்புறம் நான் சும்மா யிருக்கமாட்டேன்... அவ் வளவுதான்...Close....

**பிரிகேடியர்:-** O. K.......எங்கே வேலாண்டிக் குடும்பன்!

[வேலாண்டிக் குடும்பன் வருகை]

**வேலாண்டி:-** கும்பிடுறேனுங்க....துயரப் படா தீங்க துரைகளே! எவனச்சும் எதிர்த்து வந் தான்...? அவன் எலும்பை எண்ணி எடுத்துப் போட மாட்டேனுங்களா?

**பிரிகேடியர்:-** O. K... ஜாக்கிரதை!

[பிரிகேடியர் போதல்]

[ஊமைத்துரை களஞ்சியத்தைச் சூறையிட்டுச் செல்லல். பாண்டி யத்தேவன் கொலையுண்ணப்படல்]

**[மாற்றம்]**



## களம் ௬௪.

**இடம்:-** பாஞ்சைக் கோட்டையில் கட்டபொம்ம னின் கொலு மண்டபம்.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** கட்டபொம்மன், ஊமைத்துரை, தானபதி, பிரிகேடியர் முதலானோர்,

[பாளையங்கோட்டை சம்பவம் பற்றி கட்டபொம்மன் விசா ரித்தல்.]

**கட்ட:-** தம்பி சிவத்தையா! என்ன இருந்தா லும், பாளையங் கோட்டைக் களஞ்சியத்தைச்

கூறையிட்டிருக்கக் கூடாது; அதுவும் என் அனுமதியின்றி.

ஊமை:- நான் என்ன அண்ணு செய்யட்டும்? தானுபதியோ தவியாய்த் தவித்தார்....மேலும்.......

கட்ட:- [குறுக்கிட்டு] தானுபதியாரே! அரசியலைப் பற்றி ஆகாய மளாவ அாற்றுவீர்! பின் அறிவு ஏன் மழுங்கி விட்டது?

தானு:- மன்னிக்க வேண்டும் அரசே!

கட்ட:- நீதியின் முன் நிற்கிறீர் இப்போது. கட்டபொம்மன் உம்மை மன்னித்து விடலாம். ஆனுல் பாஞ்சைக் காவலன் நியாயம் வழங்கியாக வேண்டும்!

ஊமை.- அப்படியானுல் நாங்களிருவரும்...

கட்ட:— விசாரணைக் குட் பட்டே யாக வேண்டும்!

துளசி:- அண்ணு!...

கட்ட:- [குறுக்கிட்டு] 'மன்னு' வென்றழை!

துளசி:-மன்னர் பிரானே, கேளுங்கள்! க்ளார்க்கள பலியானதற்குக் காரணம் கோறினுன் கம்பெனியான்...விரிவான விளக்கம் தந்தோம்... தங்களை... இல்லை... இல்லை.. பாஞ்சை நாட்டதிபனை, 'நிரபராதி' என்று நிர்ணயித்தானு?... இல்லை...மன்னிப்பு வழங்கினுன்;... அப்படியானுல் என்ன பொருள்? குற்றவாளிக்குக் கருணை காட்டினுன். என்பதுதானே? இந்த அவமதிப்பைச் சகிக்க முடியவில்லை எங்களால்.... கொதித்தெழுந்தோம்! .......அண்ணுவுக்கு அவதூறு நேர்ந்து விட்டதே என்றல்ல....'அரசாங்கத்துக்கு இழுக்கு ஏற்பட்டு விட்டதே!' என்று.... அண்ணுவின் அன்புத் தம்பிமார் என்ற காரணத்தால் அல்ல... அரசப் பிரதிநிதிகள் என்ற முறையில்....... அவமானத்தைத் துடைக்கத் துடித்தோம்... துணிந்தோம்... தானு

பதியாரின் தேவை எங்கள் கோபத்துக்குத் தூபமிட்டது. அதன் விளைவு? களஞ்சியக் கொள்ளை!.... பாண்டியத் தேவன் மரணம்...நஞ்சுமிழும் பாம்பின் பல்லைப் பிடுங்குவதில் என்ன பிழை? வீணே குரைக்கும் குக்கலைக் கல்லெடுத் தடிப்பது தவறு? மற்றேது குற்றம் செய்தோம்? கொற்றவனே சாற்றும்!

[சேவகன் வருகை]

**சேவகன்:-** அரசே! யாரோ வெள்ளை அதிகாரி ஒருவர்...தங்களைக் காண விழைகிறார்..... அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிககிறது.

**கட்ட:-** வரச் சொல்!

[சேவகன் போதல்.]

[பிரிகேடியர் வருகை]

**பிரிகேடியர்:-** 'கம்பெனி களஞ்சியத்தில் களவு' 'பாண்டியத் தேவன் படு கொலை'....இந்த பயங்கர பாதகங்களைப் புரிந்திருக்கின்றனர். உமது பாளையத்துக் காரர்...

**கட்ட:-** மிகவும் வருந்துகிறேன் மிஸ்டர் பிரிகேடியர்.

**பிரிகேடியர்:-** வருந்திப் பயனில்லை.... அதற்கு வகை செய்தாக வேண்டும்.

**கட்ட:-** செற் கிரயம் தருகிறேன்.... நஷ்ட ஈடு வேண்டுமானாலும் கட்டி விடுகிறேன்.

**பிரிகேடியர்:-** தேவை யில்லை!....இந்தக் கலகத்துக்குக் காரண கர்த்தா உமது தானுபதிப் பிள்ளை.

**கட்ட:-** தானுபதியை நான் கண்டிக்கிறேன்;... தண்டிக்கிறேன்.

**பிரிகேடியர்:-**கூடாது! அவரைக் கம்பெனியார் வசம் ஒப்படைத்து விட வேண்டும். காப்டன் காலின்ஸ் கட்டளை அப்படி! இதோ அவர் கடிதம்'

[கடித மொன்றைக் கட்ட பொம்மனிடம் கொடுத்தல்.]

கட்ட:— நாவை அடக்கிப் பேசும்! கட்டளை யாம்!... கட்டளை!

[கட்டபொம்மன் கடிதத்தைப் பிரித்துப் படித்தல்.]

'தானுபதியை உடனே எம் வசம் ஒப்புவிக்க வேண்டியது. மேலும் பாளையங்கோட்டைக்கு உடனே புறப்பட்டு வந்து பாண்டியத் தேவன் படு கொலைக்குப் பதிலிறுக்கவும். இது கண்டிப்பான கட்டளை'

காப்டன் காலின்ஸ்.

கட்ட.— [கோபாவேசத்தோடு] ஹும்! கண்ணியம் என்பது கடுகளவும் தெரியாத கபோதி! காட்டு மிராண்டி! அரசியல் நாகரீகத்தை அணுவளவும் அனுஷ்டியாத அறிவிலி!...மிஸ்டர் பிரிகேடியர்! இதைக் கேளும்.... பயமுறுத்தலுக்குப் பணிபவன் பாஞ்சையான் அல்ல. எமது நாட்டில் நியாயம், நீதி, நேர்மை இவற்றிற்குத்தான் இடமுண்டு. ...அதிகாரம், அக்ரமம், அராசகம், ஆதிக்கம், ஆணவம் இவற்றிற்குத் துளியும் இடமில்லை... பிராதை சமர்ப்பியும்.... பரிசீலித்து ஆவன செய்கிறோம்...அதுதான் அரசியல் அறநெறி; ஆனல் எனது குடிமகனை அன்னியன் விசாரிக்க ஒருபோதும் ஒருப்படேன்.

பிரிகேடியர்:— உம்மிடம் நீதி, யாசகம் கேட்க வரவில்லை நான்...

கட்ட:— [குறுக்கிட்டு] தெரியும்; அதிகாரப் பிச்சை கேட்க வந்தீர் என்று.

பிரிகே:— அவமதிக்கிறீர்!

கட்ட;—இல்லை அறிவுறுத்துகிறேன்!

பிரிகே:— முடிவு?

கட்ட:—இணங்க மறுக்கிறேன் உமது கோரிக்கைக்கு.

பிரிகே:— விளைவுகள் பயங்கரமாயிருக்கும்!

கட்ட:— வீண் வார்த்தை! பனங்காட்டு நரி சல சலப்புக்குப் பயப் படாது?

பிரிகே:— ஆராயாது முடிவு கட்டுகிறீர்!

கட்ட:— இல்லை. ஆய்ந்தோய்ந்துதான் அறைகிறேன்!

பிரிகே:— இறுதி எச்சரிக்கை!

கட்ட:— இனியும் தேவையில்லை உமது பிதற்றல்!

பிரிகே:- கேடு வரும் பின்னே! மதி கெட்டு வரும் முன்னே!

கட்ட:— [ரெளத்காரமாய்] போம் வெளியே, என் கோபம் எல்லை மீறும் முன்!

[பிரிகேடியர் அவமானத்தால் குன்றியவாறு வெளியேறல். அவையோரின் கேலிச் சிரிப்பு]

கட்ட;-[தம்பிமாரையும் தானுபதியையும் நோக்கி] உங்கள் மூவரையும் நிரபராதிகள் என நிர்ணயித்து கௌரவமாக விடுதலை செய்கிறேன்!

[மூவரும் முகம் மலர்தல்]

ஊமை:— அண்ணா!

கட்ட:— தம்பி! [தழுவல்]

துளசி:— அண்ணா!

கட்ட:— தம்பி! [தழுவல்]

[இந்தக் காட்சியைக் கண்ட தானுபதி கண்களில்நீர் பெருக்கெடுக்க குரல் குன்ற, நா தழு தழுக்க ஆனந்த பரவசமேலீட்டால் செயலற்று நிற்றல்]

[மாற்றம்]



# களம் சு௨.

இடம்:— சென்னை செனட் ஜ்யார்ஜ் கோட்டை.
காலம்:— காலை.
உறுப்பினர்:— கவர்னர் க்ளைவ், கர்னல், மாக்ஸ்வெல் ஜான் பானர்மென் முதலானோர்.

[க்ளைவும் மாக்ஸ்வெல்லும் மந்திராலோசனை நடப்பித்தல்]

க்ளைவ்:- கர்னல் மாக்ஸ் வெல்!

மாக்ஸ்:- Yes Your Excellency!

க்ளைவ்:— ஸ்ரீரங்கம் முற்றுகை வெற்றிகரமாக முற்றுப் பெற்று விட்டது .. இல்லையா?

மாக்ஸ்:— Exactly.... ஹி... ஹி... ஹி....

க்ளைவ்:— இனி, பட்டாளங்களை பயமின்றித் திருப்பி விடலாம் பாஞ்சாலங்குறிச்சியை நோக்கி.

மாக்ஸ்:— கூடாது YourExcellency! வெறும் நாயை அடிக்கடிக் கூடாது. அதற்கு வெறிநாய் என்று பட்டம் கட்டவேண்டும் முதலில்...

க்ளைவ்:- I See!... இன்னும் சற்று விளக்கம் தேவை.

மாக்ஸ்:- 'பழைய பகைமை காரணமாக பாஞ்சைமீது போர் தொடுத்தான் பரங்கி', என்ற பழிச் சொல் கூடாது. ஒப்பந்தம் வேறு இருக்கிறது.

க்ளைவ்:- I See!....

மாக்ஸ்:- அவமானமாயிற்றே!......அநீதியாயிற்றே!...என்பதற்காக அல்ல நான் அப்படிச் சொல்வது.

க்ளைவ்:- I See!...

மாக்ஸ்:- உண்மையை மறைக்க உலகத்தினர் கண்களுக்கு ஒரு திரை!....அவ்வளவுதான்...

க்ளைவ்:- I See!... அப்படியானல் Immediate Cause ஒன்று வேண்டுமென்கிறீர்.

மாக்ஸ்:- Exactly... ஹி.... ஹி.... ஹி...,

[சிப்பாய் கடிதம் கொணர்தல்]

க்ளைவ்-: [கடிதத்தைப் படித்தவாறு ரௌத்காரமாய்] ஆ!... மறுபடியும் குறுநரி குறும்பைத் தொடங்கி விட்டது. இனி அதன் குறுக்கெலும்பை நொறுக்க வேண்டியதான்.

மாக்ஸ்:- What's wrong Your Excellency?

க்ளைவ்:- இதோ பாரும், காப்டன் காலின்ஸ் கடிதத்தை!

[மாக்ஸ்வெல் கடிதத்தைப் படித்தல்]

மாக்ஸ்:- சபாஷ்!...பாண்டியத் தேவனைப் படுகொலை செய்தது...பிரிகேடியரை அவமதித்தது.... எல்லாவற்றிற்கும் மேலாக சென்னை ஒப்பந்தத்தைச் சிதறடித்தது.......தகுதியான காரணம் கிடைத்து விட்டது My Lord, அந்தத் தலைகனம் பிடித்தவனைத் தவிடு பொடியாக்க.

க்ளைவ்:- I See!....[சிந்தித்தவாறு] ஆனல்....... தலைமை தாங்கி நடத்த, தகுதியான தளபதி ஒருவர் தேவை.

மாக்ஸ்:- Exactly... ஹி... ஹி... ஹி....

[இருவரும் ஆலோசித்தல்]

[துள்ளிக்குதித்து] ஆ! ...That's right!....தளபதியாயிருக்கத் தகுந்தவர் அந்த அறிஞர் ஒருவர்

---

Immediate Cause—உடனடிக் காரணம்.

தான்...Your Excellency! கையிலேயே வெண்ணை இருக்கிறதே!....

க்ளைவ்:- யாரைச் சொல்கிறீர்?

மாக்ஸ்:- வேறு யாரையுமில்லை. செட்டில் மெண்ட் காலத்தில் என்னிடம் காரியதரிசியாயிருந்தவர்...நெல்லை மக்களின் நடையுடை பாவனைகளை நன்கு அலசிக் குடித்தவர்... அரசியல் அறிஞர்.... ஜெகஜாலப் புரட்டர்....ஜான் பானர்மென்!

க்ளைவ்:- [உற்சாகம் பொங்க] Oh Yes! உடனே அழைப்பு அனுப்பும் அந்த அசகாய சூரருக்கு.

மாக்ஸ்:- Yes Your Excellency!

[மாக்ஸ்வெல் அழைப்பனுப்பல்]

க்ளைவ்:- அது மட்டுமல்ல....தென்பாண்டி நாட்டிலுள்ள எழுபத்திரண்டு பாளையங்களிலும் ராணுவ ஆட்சியை உடனே பிரகடனப் படுத்தும்.

மாக்ஸ்:- Yes My Lord!

[மாக்ஸ்வெல் வணங்கிப் போதல்]

[மாற்றம்]



---

John Bannerman—ஜான் பானர்மென்

## களம் ௬௩.

இடம்:- பாளையங்கோட்டை கம்பெனி முகாம்.

காலம்:- காலை.

உறுப்பினர்:- காப்டன் காலின்ஸ், பாளையக்காரர்கள் முதலானோர்-

[காலின்ஸ் பங்களாவில் வெள்ளையரும் பாளையக்காரரும் சதியாலோசனை நடப்பித்தல்]

காலின்ஸ்:- என் அன்பிற்கும் பாராட்டுதலுக்கும் முரிய பாளையத்துக் காவலர்களே! உங்களெல்லோருக்கும் ஏற்கெனவே தெரியும், நாம் இப்பேரவை கூட்டியதன் நோக்கம்....தென்பாண்டி நாட்டை 'அபாய மண்டல'மாக நிர்ணயித்து ரெவின்யூ ஆட்சியை நீக்கி ராணுவ ஆட்சியைப் பிரகடனப் படுத்தியுள்ளனர் எமது காருண்யம் மிக்க கிழக் கிந்திய கம்பெனியார்! காரணம்....? பாஞ்சைப் பாளையம் சென்னை ஒப்பந்தத்தை மீறி அராசகம் நிகழ்த்தி நாட்டின் அமைதிக்குப் பங்கம் விளைவித்து வருவதுதான். கட்டபொம்மன் கம்பெனியாரின் முதல் நம்பர் எதிரி! அது மட்டுமல்ல! உங்கள் அனைவருக்குமே....ஏன்?...மனித சமுதாயத்துக்கே விரோதமான ஒரு பயங்கர பொது எதிரி!

[ஆரவாரம்]

இனி, கட்டபொம்மனுக்கு நேரடியாகவோ, மறை முகமாகவோ ஆதரவு காட்டும் எந்தப் பாளையமும் கம்பெனியாரின் பகிரங்க விரோதியாகக் கருதப் பட்டு கடும் நடவடிக்கைக்குப் பாத்திரமாகும்....ஆனால் ராஜ விசுவாசம் வெகுவாகப் பாராட்டப் பெறும். எனவே, நமது பொது எதிரியைப்

புறங்காண உங்கள் அனைவருடைய அமோகமான ஆதரவு தேவை!

[ஆரவாரம்]

**பாளையக்:-** துரையே! எங்களது பூரண ஒத்துழைப்பு எப்போதும் போல் இனியும் தொடர்ந்து இருந்து வரும். இது எங்கள் ஏகோபித்த முடிவு.

**காலின்ஸ்:-** நல்லது. மிக்க மகிழ்ச்சி! அப்படியானால் எல்லோரும் ஒப்பந்தப் பத்திரத்தில் ஒப்பமிட்டுச் செல்லலாம்.

[பாளையக்காரர்கள் ஒப்பந்தப் பத்திரத்தில் கையொப்பமிட்டுச் செல்லல்]

[**மாற்றம்**]



## களம் சுசு.

**இடம்:-** செண்ட் ஜ்யார்ஜ் கோட்டை,

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** கவர்னர் க்ளைவ், கர்னல் மாக்ஸ்வெல், பானர்மென் முதலானோர்.

[க்ளைவும் மாக்ஸ்வெல்லும் பானர்மென் வருகையை எதிர் நோக்கியிருத்தல்]

[பானர்மென் வருகை]

**க்ளைவ்:-** [பானர்மென் தோளில் அன்புடன் தட்டிக் கொடுத்து] *மிஸ்டர் ஜான் பானர்மென்!*

**பானர்:-** Yes Your Excellency!

**க்ளைவ்:-** *இன்று முதல் நீர் ஜெனரல் ஜான் பானர்மென்!*

[விருதுகள் அணிவித்தல்]

தென்பாண்டி நாட்டின் ராணுவ ஆட்சிப் பொறுப்பை இந்த நெருக்கடியான நிலையில் உம் வசம் ஒப்படைக்கிறேன்... அதை ஏற்று திறம்பட நடத்த வேண்டியது உமது கடமை! சந்தர்ப்பங்களுக்கேற்க சகல அதிகாரங்களையும் பிரயோகிக்க உமக்கு அனுமதி அளிக்கிறேன். To put it in a nutshell, நீர் தென்பாண்டி மண்டலத்தின் சர்வாதிகாரி!

**மாக்ஸ்:-** Exactly... ஹி... ஹி... ஹி....

**க்ளைவ்:-** பாஞ்சையானைப் பணிய வைப்பதே உமது முதல் பணி!

**பானர்:-** Right you are my Lord!

[க்ளைவ் டைரியை ஒரு முறை நோட்டம் விடல்]

**க்ளைவ்:-** இதைக் கேளும்!... இன்னும் பதினைந்து தினங்களுக்குள்... அதாவது....1799ம் வருஷம், செப்டம்பர் மாதம், 5ம் தேதி பாஞ்சை கோட்டை தாக்கப் பட்டதாக எனக்கு சேதி எட்ட வேண்டும்!

**பானர்:-** Right you are my Lord!

**க்ளைவ்:—** Alright! Proceed right away! May God bless you!

[பானர்மென் வணங்கிப் போதல்]

**[மாற்றம்]**



---

ஜெனரல்—General.

To put it in a nut shell—சுருங்கச் சொல்லின்.

சர்வாதிகாரி—Dictator.

# களம் ௪௫

இடம்:— ஒட்டப் பிடாரம் கம்பெனி முகாம்.
காலம்:— நடு நிசி.
உறுப்பினர்:— பானர்மென் மற்றும் ஆங்கில படை வீரர்.

[பானர்மென் பாஞ்சைக் கோட்டையின் படத்தைக் கண்ணுற்ற வாறு ஆலோசித்தமர்ந் திருத்தல்]

[காப்டன் டக்ளஸ் வருகை]

**பானர்:—** காப்டன் டக்ளஸ்!

**டக்ளஸ்:—**Yes sir!

**பானர்:-** [படத்தைக் காட்டி] இதோ பாரும்!... இதுதான் கோட்டையின் தெற்கு வாயில்... நீர் மூன்றாவது ரெஜிமென்ட் சோல்ஜர்களையும் 13வது ரெஜிமன்ட் சிப்பாய்களையும் கொண்டு இந்தத் தெற்கு வாயிலைத் தாக்கும்.

**பானர்:—** காப்டன் காலின்ஸ்!

**காலின்ஸ்:-** Yes sir!

**பானர்:—** நீர் வடக்கு வாசலை வளைத்துத் தாக்கும்...... திடுக்கித் தாக்குதலில் திடுகிடுத்து விடும் கோட்டை.... ஹ... ஹ.. ஹ...

**பானர்:—** Gunner Finny!........ நாளை காலை அருணோதயத்துக்கு முன் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டை மீது குண்டு மாரி பொழிந்தாக வேண்டும்.

---

டக்ளஸ்—Douglas.
ரெஜிமென்ட்—Regiment.
சோல்ஜர்—Soldier.

பின்னி.— Yes sir!

பானர்:— சரி.... எல்லோரும் புறப்படுங்கள்!...

[படை வீரர்கள் பண்ணிசைத்த வாறு பலத்த ஆரவாரத்தோடு பாஞ்சை நோக்கிப் பயணப் படல்.]

[மாற்றம்]



## களம் ௬௯.

இடம்:- பாஞ்சை கோட்டை.

காலம்:- வைகறை.

உறுப்பினர்:- கட்டபொம்மன், ஊமைத்துரை முதலானோர்.

[கோட்டை மீது குண்டுவீழல். கட்டபொம்மனும் ஊமைத் துரையும் உப்பரிகை மீதேறி நோக்கல்]

கட்ட:- ஹும்!.... முரசடிக்கிறான் மூர்க்கன், முன்னறிவிப் பெதுவு மின்றி!

ஊமை:- போர் முறைக்குப் புதிய இலக்கணம் வகுத்திருக்கிறான் புல்லன்!

கட்ட:- தம்பி சிவத்தையா! எட்டு ஆண்டுகளாக எதை எதிர்நோக்கி யிருந்தோமோ, அது இன்று நிகழ்ந்தே விட்டது...படையெடுத்து விட்டான் பரங்கி...

ஊமை:- பலியாக வந்திருக்கிறான் பாஞ்சைப் பதியில்! நையப் புடைத்து விடுவோம் அண்ணா அந்த நாடோடி கும்பலை!

[ஒற்றன் வந்து வணங்கி நிற்றல்]

ஒற்றன் - அரசே! ஒட்டப் பிடாரத்தில் முகாமிட்டிருக்கிறான் பானர்மென். அங்கிருந்து காப்டன் டக்ளஸ் தலைமையில் படைகளை ஏவி யிருக்கிறான் பாஞ்சாலங் குறிச்சியைத் தாக்க.

கட்ட:- [ஆவேசமாய்] போர்! ஹ...ஹ...ஹ... ஆரம்ப மாகட்டும் ஆயத்தங்க ளெல்லாம! ஆயத்த மாகட்டும் ஆயுதங்களனைத்தும்! ரத கஜ துரக பதாதிகள் அத்தனையும் செல்லட்டும் களம் நோக்கி! சிவத்தையா... நீ இளவல் பாதர் வெள்ளைக்கு உடனே தகவல் அனுப்பு.

ஊமை:- ஆகட்டும் அண்ணு! சுந்தரலிங்கத்தை இப்பொழுதே வல்ல நாட்டுக்கு அனுப்பி வைக்கிறேன்.

[போதல்]

[மாற்றம்]



## களம் சஎ.

**இடம்:-** வல்ல நாட்டில் பாதர் வெள்ளை வீடு.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** வீரத்தேவர், பாதர் வெள்ளை, சுந்தரலிங்கம் முதலானோர்.

[வீட்டின் தெளித் தாழ் வாரத்தில் வீரத்தேவர் தாம்பூம் தரித்தவாறு அமர்ந்திருத்தல். சுந்தரலிங்கம் வருகை]

**வீரத்:—** வாப்பா சுந்தரலிங்கம்!... வா!

**சுந்த:—** இளவரசரைக் கையோடு அழைத்து வரும்படி...

**வீரத்:—** [குறுக்கிட்டு] அரசர் அனுப்பி வைத்தாரா உன்னை?

சுந்த.— ஆமாங்க.

வீரத்:— அவன்தான் பாஞ்சாலங் குறிச்சிப் பயணம் எப்போது சித்திக்கும் என்று ஏங்கிக் கிடக்கிறானே!

சுந்த:— இளவரசர் இப்போது எங்கே?

வெள்ளை.- அயர்ந்து கண் வளருகிறான், எண்ணை முழுக்கை முடித்து விட்டு....

[சுந்தரலிங்கம் துணுக்குறல்]

சுந்த:— [தனதுள்] ஆ!... எண்ணை முழுக்கு... துயில் கொளல... என்ன துர்க் குறிகள்?

[பாதர் வெள்ளையை அணுகல்]

சுந்த:-[தனதுள்] தோள் வலியில் வீராதி வீரன் ராவணன் தான்!.... ஆனல் தூக்கத்திலோ, அவன் தம்பி கும்ப கர்ணன்!... உறக்கத்தில் உசுப்பினல் என் உயிர் தப்பாது... பட்டாக்கத்தி வேறு பக்கத்தில் இருக்கிறது... நாமறித்தாலோ?... தவிர்க்க முடியாத தலை போகும் ஆபத்து! [ஆலோசித்தவாறு] உம்... என்ன செய்யலாம்?

[யோசனை பளிச்சிடல், வாழை மரம் ஒன்றைக் கொணர்தல்]

சுந்த:— [தனதுள்] இது தான் சரி... முதல் வெட்டு வாழை மரத்துக்கு... பிறகு எப்படியோ சமாளித்துக் கொள்ளலாம்.

[சற்று தொலைவில் நின்றவாறு அருகில் இருந்த கிடுகுத் தட்டியில் சிறு கல் லொன்றைவீச, துயில் நீங்கித் துடித்தெழுந்த பாதர் வெள்ளை வாழை மரத்தைத் துண்டாடுதல். பின் எதிரே மெய் விதிர்த்த வண்

ணம் நின்று கொண்டிருந்த சுந்தரலிங்கத்தைக் கண்ணுறல்]

**பாதர்:—** *யார்? சுந்தரலிங்கமா?*

**சுந்த:—** *ஆமாம் இளவரசே!*

**பாதர்:—** *என்ன சேதி?*

**சுந்த:—** *போர்க் கோலம் பூண்டு வந்திருக்கிறான் பரங்கி.*

**பாதர்:—** *என்ன?*

**சுந்த:—** *ஆம்... கோட்டையில் குண்டு கூட வீசி விட்டான் கொடியவன்.*

**பாதர்:—** [பற்களை நறநறவென்று கடித்து] *காகம் பறவாத கட்டபொம்முச் சீமையிலே கும்பினிக் கோட்டான்களா?.... ஆழம் தெரியாது காலை விட்டிருக்கிறான் அறிவிலி! இதோ புறப்பட்டு விட்டேன்!.... வெள்ளையம்மா!... வெள்ளையம்மா!....*

[அந்தப்புரம் நோக்கி விரைதல்]

**[மாற்றம்]**



# களம் சஅ.

**இடம்:-** வெள்ளையம்மாளின் அந்தப்புரம்.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** பாதர் வெள்ளை, வெள்ளையம்மாள்,

[வெள்ளையம்மாள் செம்பில் நீர் கொணர்தல். செம்பு நழுவி வீழ்தல். அதைக்கண்டு அவள் திடுக்கிடல்]

**வெள்ளை:-** [தனதுள்] *ஆ!.... இதென்ன அவக்குறி! கண்ட கனவுகள் போதாதென்று?*

[பாதர் வெள்ளையிடம் நீர்ச் செம்பைக் கொடுத்து விட்டு பெருமூச்செறிதல்]

**பாதர்:-** [துணுக்குற்று] ஆ!... நெட்டுயிர்ப்பு! ... நேர்ந்த தென்ன கண்ணே?

**வெள்ளை:-** [சமாளித்துக் கொண்டு] ஒன்று மில்லை கண்ணாளா!... ஏனோ என் மனம் சஞ்சலப் படுகிறது.

**பாதர்:-** களிப்புச் செய்தி காத்திருக்கிறது... வீணே கலக்க முறுவானேன்?

**வெள்ளை:-** களிப்புச் செய்தியா?

**பாதர்:-** ஆம்!....எதை இதுநாள் வரை எதிர் நோக்கி ஏங்கிக் கிடந்தேனோ, அந்த இன்ப நன்னாள் வந்து விட்டது...வெள்ளையனை வீழ்த்தி வெற்றி முரசம் முழக்குகிறேன்!......வஞ்சகர்களை என் வாளுக்கிரையாகத் தந்து வாகை சூடி வருகிறேன்....கயவர்களைக் கருவறுத்துக் கழலணிந்து வருகிறேன்....விடை கொடு தேவி!

**வெள்ளை:-** [திடுக்கிட்டு] ஆ!....போரா?...பிராணபதி!

[தேம்பி யழல்]

**பாதர்:-** மங்காய்!....மணாளன் மரண முறுவானோ என்று மருளுகிறாய்! மனங் குமுறுகிறாய், அப்படித் தானே?

**வெள்ளை:-** ஒருக்காலும் இல்லை சுவாமி! வீரர்களின் முடிவு வெற்றி அல்லது வீர மரணம் தானே!

**பாதர்:-** பின் ஏன் கலக்கம்?.... ஹூம்! மறக்குடி மங்கையா இப்படி மனம் கலங்குவது?

**வெள்ளை:-** பிராணநாதா! கோரக் கனவுகள் கண்டேன்....கொடிய அவக் குறிகள் நிகழ்வதறிந்தேன்...

பாதர்:- [இடைமறித்து] கனவுகள்....துர் நிமித்தங்கள்...அபசகுனங்கள்....ஒன்றும் உண்மைக்கு ஒரு போதும் ஒவ்வாது!

வெள்ளை:- ஒதுக்கி விடுவதற்கில்லை அப்படி... பசுமஞ்சள் கரியாகப் பரிணமிக்கக் கண்டேன்! சோலை வனம் பாலை வனமாக மாறக் கண்டேன்! முடிந்த கூந்தல் அவிழக் கண்டேன்! கோட்டை கொத்தளங்கள் குப்பை மேடாகக் கண்டேன்! கட்டழகுப் பெண்ணொருத்தி கண்ணீரும் கம்பலையுமாய்க் கதறியழக் கண்டேன்! மாமா கட்டபொம்முவும் ஊமைத்துரையும் ஊரை விட்டே ஓடக் கண்டேன்!....

பாதர்:- மனக்குழப்பம்!

வெள்ளை:- [தொடர்ந்து] சுவாமி!.... அது மட்டுமல்ல ஆந்தை அலறும் அவக் குரல் கேட்டேன்! சாக் குருவியின் கூக்குரல் கேட்டேன்!

பாதர்:- வீண் பிரமை!

வெள்ளை:- இல்லவே இல்லை! நாதா! தங்களுக்கு எதிர் வார்த்தை இதுவரை கூறியறியேன். ஆனல் இன்று மணாளன் சொல்லுக்கு மறுப்புக் கூறும் மாபாதகத்துக்கு ஆளாகிறேன்! 'போர்' என்ருல் 'போய் வாருங்கள்' என்று புன்னகையோடு..... பூரிப்போடு அனுப்புவேன் ஆனல் இன்று...

பாதர்:- போகாதீர் போகாதீர் என்று சொல்லி என் மனதைப் புண்ணுக்குகிருய்....

வெள்ளை:- கண்ணளா! கணவனைக் களத்துக்கனுப்புகிறேமே என்றல்ல நான் கலங்குவது...

பாதர்:- பிறகேன் தயக்கம்?

வெள்ளை:- நான் விரும்புவதெல்லாம் இதுதான்...பயணத்தை ஒரு நாளாவது ஒத்திப் போட...

**பாதர்:-** [குறுக்கிட்டு] முடியவே முடியாது!.... அன்பு சொரிந்தார் அண்ணல்!... ஆதரித்தார்!... அவருக்கு ஆபத்து அணுகுவதை அறிந்தும், அரை நொடி தாமதிக்கலாமா?......நம்மைச் சீராட்டி வளர்த்தார் செம்மல்...செஞ்சோற்றுக் கடனிறுக்க வேண்டாமா? நமது தன் மானத் தந்தை . நம்மைப் பேணி வளர்த்த பெரியார்.... நாம் வாழ வழி வகுத்துத் தந்த வள்ளல்....அவருக்கு இழுக்கு நேர இடம் தரலாமா?...உப்பிட்டு வளர்த்த உத்தமரின் குரல் அழைக்கிறது என்னைத்... தடுக்காதே!.... தடுக்காதே!

**வெள்ளை:-** என்னை மன்னித்து விடுங்கள் பிராணேசா! ஆழ்ந்த கவலையில் அறிவு குலைந்து பேசி விட்டேன்!

[அழுகை பீறிட பாதர்வெள்ளையின் காலில் வீழ்தல்]

**பாதர்:-** எழுந்திரு கண்ணே!....அழாதே...

[வெள்ளையம்மாளைத் தூக்கி நிறுத்தல்]

**வெள்ளை;-** [கண்களைத் துடைத்துக் கொண்டு] தாங்கள் பாஞ்சையிலேயே இருந் திருந்தால் இந்த இக்கட்டான நிலை ஏற்பட்டே இருக்காது.

**பாதர்:-** அரசர் நம்மை இங்கு அனுப்பி வைத்தது தவறு...தகாது என்கிறாய்...... அப்படித் தானே?...தந்தை தவறே செய்திருந்தாலும் ஆபத்தில தலை கொடுப்ப தல்லவா தனயனின் கடமை?

**வெள்ளை:-** உண்மைதான்!.... உடனே புறப் படுங்கள் சுவாமி!

[பாதர் வெள்ளை புறப்படச் சித்தமாதல்]

**பாதர்:-** [வெள்ளையம்மாளைத் தழுவி] அன்பே! இதுவே என் இறுதி முத்தமாக இருக்கலாம்... ஏற்றுக்கொள்...ச்....ச்...ச்...

[முத்தமிடல்]

[வீரத்தேவர், அவர் மனைவி ஆகியோர் வருகை]

**பாதர்:-** உத்தாரம் தாருங்கள் தந்தையே.

**வீரத்:-** மைந்தா! மறவர் மரபின் மகிமையை நிலைநிறுத்து.

**பாதர்:-** [தாயை நோக்கி] அம்மா!

**தாய்:-** மகனே! ஈன்று புறந் தருதல்தானே என் கடன். அன்று பெற்றேன்....பெருவகை யடைந்தேன்....இன்று பிரிகிறேன்....புலி தங்கிப் போகும் குகையைப் போன்றது தானே உன் அன்னையின் உதரம்...செல் மகனே செல்!

**வெள்ளை:-** ஐய! நானும் தங்களுடன் வர அனுமதி தாருங்கள்.

**பாதர்:-** எங்கே பெண்ணே?

**வெள்ளை:-** தங்கள் நிழல் எங்கே போகும்? கண்ணைக் காப்பதைத் தவிர இமைக்கு வேறென்ன வேலை?

**பாதர்:-** படுகளத்துக்கா வருகிறாய்?

**வெள்ளை:-** ஆமாம் இளவரசே! தலைவனுடன் தலைவியாக அல்ல...தளபதியுடன் போர் வீரனாக.

**பாதர்:-** வீர மாதரின் பரம்பரை வழி வந்தவளாயிற்றே நீ! ...விதி விலக்காகி விடுவாயா என்ன? வியக்கிறேன் உன் வீரத்தை...வா போகலாம்!

[இருவரும் அசுவங்களின் மீது ஆரோகணித்து பாஞ்சை நோக்கிப் பயணமாதல்]

**[மாற்றம்]**



## களம் ௬௬.

இடம்:— பாஞ்சை கோட்டை.
காலம்:— காலை.
உறுப்பினர்:— கட்டபொம்மன், ஊமைத்துரை, பாதர் வெள்ளை முதலானோர்.

[வீரர்கள் அணி வகுத்து நிற்றல்]

கட்ட:— போர்க் கோலம் புனைந்து, புலிகளைனச் சீறி நிற்கும் புரட்சிக் காளைகளே! தமிழகம் நமது தாய்! மாதாவின் மானத்தை மாசு படுத்த மனப் பால் குடிக்கிருன் மாற்ருன்! அவன் மமதையை மட்டந் தட்டி மண்ணோடு மண்ணுக்குவோம்!

விடுதலை விருட்சத்துக்கு இன்று வித்திடுவோம்! அது தழைத்துச் செழித்து, செடியாகிக் கொடியாக, மரமாகி வானுற ஓங்கி வளம்பெற வளரட்டும்! வருங்கால சமுதாயமாவது அந்தத் தரு நிழலில் தண்மை காணட்டும்! வீழ்ந்து படும் வீரரின் உடல்கள் கொண்டு சுதந்தர மாளிகைக்கு அடித்தளம் அமைப்போம்! எதிர் கால சந்ததியாவது அதில் இன்புற்று வாழட்டும்! இதுவே நமது இலக்கு!... இதுவே நமது இலட்சியம்!! அநீதிக்கும் நீதிக்குமிடையே நிகழும் அறப்போர் இது! அதர்மம் அழிவுற... இலக்கு எய்தப் பெற... இலட்சியம் ஈடேற... உரிமை எனும் வாள்!... ஊக்கமெனும் மார்க் கவசம்!.... ஒற்றுமை எனும் கேடயம்!... இப் படைக் கலன்களைக் கொண்டு பகைவனைப் புடைத் தொழிப்போம்!... புறங் காண்போம்!... புறப்படுவோம்!

[புறப்படச் சித்தமாதல்]

[கட்டபொம்மன் கண்ணேறிட்டு நோக்கல். அசுவ

மொன்றில் கன வேகமாய்
பாதர் வெள்ளை வருவதைக்
கண்ணுறல்]

கட்ட:—அதோ!... இளவல் பாதர் வெள்ளை யும் வந்து விட்டான். படைத் தலைமை தாங்கிச் செல்வான்.

பாதர்:— அப்பா!

கட்ட:— மைந்தா.

[இருவரும் தழுவல்]

பாதர்:—[வீரர்களை நோக்கி]விடுதலை வேட்கை கொண்டு, வெஞ்சமர் புரிய வேங்கை களென வெகுண்டெழும் வீரர்களே, தின வெடுக்கும் உங்கள் தோள்களின் திறனைக் காட்டத் தகுதி யான தருணம் வாய்த்து விட்டது.

அகந்தை கொண்டலையும் ஆங்கிலேயர்களின் உடல்களை அங்கம் அங்கமாகப் பிளந்து, அணு அணுவாகப் பிய்த் தெறியுங்கள். களத்திலே காய முற்றுக் கதறும் கம்பெனிக் கயவர்களின் அழு குரல் ககனம் வரை சென் றெட்டட்டும்! பரங்கி களின் பிணத்தின் நிணத்தைப் பருந்துகளுக்கு விருந்திடுங்கள். உங்கள் வில்லினின்றும் வீறிட்டுக் கிளம்பும் சரங்கள் பகைவரின் சிரங்களைக் கொய்து குவிக்கட்டும்! எதிரிகளின் உதரங்களினின்றும் உதிரும் உதிர வெள்ளத்திலே உங்கள் படைக் கலன்கள் நீந்திக் களிக்கட்டும்! ஆனல்.......

நமது முன்னோர் வகுத்து விதித்திருக்கும் போர் நியதி மீறி விடாதீர்கள், ஒரே ஒரு விதி விலக்கு நீங்கலாக. தமிழ் நாட்டின் தர்மம் தவறி விடா தீர்கள்.

'வெற்றி அல்லது வீர மரணம்' இதுவே நமது இதய கீதம்!

முழங்கட்டும் முரசம்! தொனிக்கட்டும் எக்காளம்!!

[முரசொலித்தல். எக்காளம் தொனித்தல். வீரர்கள் யுத்த சன்னத்தராய்க் கிளம்பல்.]

[மாற்றம்]



## களம் ருய.

**இடம்:-** போர்க் களம்.

**காலம்:-** மாலை.

**உறுப்பினர்:-** ஊமைத்துரை, பாதர் வெள்ளை, ஆங்கில தளபதிகள் முதலானோர்.

[ஊமைத்துரையும் காப்டன் டக்ளஸும் சந்தித்தல்.]

**டக்ளஸ்:-** வாய்ப் பேச்சு கூட சரிவர வராதே உனக்கு! வாள் வீச வேறு வந்து விட்டாயோ? [அலட்சியமாக] ஹூம்! விண்மீன் முன் மின்மினி! ...கலாப மயிலின் முன் கானங் கோழி!... என்னை யாரென்று அறியாய் போலும்!

**ஊமை:-** நன்ருக அறிவேன், நீ வரம்பு மீறிப் பேசும் வாய் வீரன் டக்ளஸ் என்று...... சொல் வேகத்தில் சூரனென்று...... எங்கே காட்டு உன் செயல் வீரத்தை!

**டக்ளஸ்:-** இதோ பார் என் கை வரிசையை!

[இருவருக்கு மிடையே வாட் போர் நிகழ்தல். முடிவில் டக்ளஸ் தோல்வி யுறல்.]

**ஊமை:-** [வாள் முனையை டக்ளஸ் மார்பில் பதித்தவாறு] கான மயிலென்று கங்கு கரையின்

றிக் கதைத்தாய்!....வானத்துத் தாரகை யென்று வானளாவப் புகழ்ந்து கொண்டாய்! இப்போது என்ன சொல்கிறாய்? [கேலியாகச் சிரித்தவாறு] எரி நட்சத்திரம் எரிந்துருகப் போகிறது...நடன மயில் நடை தளரப் போகிறது! ஹா..ஹா ஹா.

[வாளை டக்ளஸின் மார்பில் செருகல். டக்ளஸ் மடிதல்.]

[களத்தின் மற்றொரு முனையில் பாதர் வெள்ளை பாய்ந்து பாய்ந்து போரிடல். வெள்ளையம்மாளும் ஆணுடை தரித்துச் சண்டை யிடல்.]

[காப்டன் காலின்ஸும் பாதர் வெள்ளையும் எதிர்ப்படல்]

**காலின்ஸ்:-** சிங்கத்தை எதிர்க்க வந்த சிறு நரியே! விளக்கில் வீழத் துடிக்கும் விட்டிற் பூச்சியே! மரணத்தை முத்த மிடச் சித்தமாகிக் கொள்!

**பாதர்:-** குயிலின் கூட்டிலே குடி யேறத் துடிக்கும் கோட்டானே! ஒண்டிப் பிழைக்க வந்து ஊராளத் திட்டமிடும் ஒட்டகமே! தயாராகிக் கொள் உன் கோர முடிவுக்கு.

**காலின்ஸ்:-** இதோ!.... கடுகி வருகிறது கட்டாரி ....இல்லை.... காலின்ஸ் விடுக்கும் காலன்........ பதில் சொல், அல்லது பலியாகி விடு.

[கட்டாரியை எறிதல். பாதர் வெள்ளை சாமர்த்தியமாகச் சமாளித்துக் கொள்ளல்]

**பாதர்:-** இதோ!... விரைந்து வருகிறது வேல்! ....விலகிக் கொள், அல்லது வீழ்ந்து படு!

[வேலை வீசி யெறிதல் காலின்ஸ் மடிதல்]

[அன்றைய போர் நிறுத்தத்துக்கு அறிகுறியாக எக்காளம் தொனித்தல். வெண் கொடி வீசப் பெறல். இரு தரப்பினரும் தத்தம் பாசறைக்கு மீளல்.]

[காலின்ஸ் பலி யானதைக் கண்ட கண்டார்க்கு பாதர் வெள்ளையை ஆவேசமாய் அணுகல்.]

**கண்டார்க்:-** [தனதுள்] *காப்டன் காலின்ஸை யே வீழ்த்திவிட்டான் கடுகத்தனைக் கயவாளிப் பயல்... இவனை உயிரோடு விடக் கூடாது.*

[போர் முறை தவறி பாதர் வெள்ளையைக் குறி வைத்துச் சுடல். பாதர் வெள்ளை கழுத்தில் காய மேற்று வீழல். இதைக் கண்ணுற்ற புலிக்குத்தி நாயக்கன் சீறியெழல். கண்டார்க்கு புற மிட்டோடல்.]

**புலிக்குத்தி:-** [கண்டார்க்கைப் பின் தொடர்ந்தவாறே] *ஏய் கண்டார்க்கு! அட சண்டாளா! உயிரைக் காக்க ஓடி ஒளியும பேடியே! மாவீரனடா நீ, மறைவிலிருந்து தாக்குவதில்!.. உறங்குபவன் உயிருக்கு உலை வைப்பதில்!..உன் போன்றவர்கள் களத்துக்கே களங்கமடா. இந்த புலிக்குத்தி நாயக்கன் உன்னையும் குத்தி வீழ்த்தாமல் விட மாட்டான்.*

[வில்லை நாணற்றி சுடுகணை தொடுத்தல்]

*சிறுமதியோனே! செத்து மடி... ஹ.. ஹ..ஹ.*

[கண்டார்க்கு மடிதல். தோல்வி நேர்ந்தது கண்டு வெள்ளையர் ஓட்டப் பிடாரம் பயண மாதல்.]

[பாதர் வெள்ளை மடிந்த சேதி கேட்ட ஊமைத்துரை ஓடோடி வரல்.]

**ஊமை.**- [அலறி அழுத வாறு] ஐயோ பாலகா! அநியாயமாய் மாண்டாயே! வீரமே உருக்கொண்ட நீ, வீணரின் சூழ்ச்சியால் வீழ்ந்து பட்டாயே! எங்களை துன்பக் கடலில் துடிக்க விட்டுச் சென்று விட்டாயே!

[சற்று மனம் தேறியவனாய்]

பகடை மக்களே! பாருங்கள் படுகளத்தில் பலியாகி விட்ட நமது பட்டத்து இளவரசனை!

[சூழ நின்றவர்கள் கண்ணீர் சொரிதல்.]

பாதர் வெள்ளையின் உடலை யெடுத்து பன்னீரால் கழுவி பட்டாடை போர்த்துங்கள்! சிதையமைக்க சந்தன மரங்களும் சித்தப் படுத்துங்கள்.

[பகடைகள் பாதர் வெள்ளையின் உடலை எடுத்துப் போதல்.]

[மாற்றம்]



# களம் ௫௪.

இடம்:— பாஞ்சை மயானம்.
காலம்:— சூரியாஸ்தமனம்,
உறுப்பினர்:— கட்டபொம்மன், வெள்ளையம்மாள் முதலானோர்.

[பாதர் வெள்ளையின் சடலம் சிதையில் வைக்கப் பட்டிருத்தல். பாளையத்து மக்கள் வெதும்பும் உள்ளங்களோடும், வாடிய வதனங்களோடும், நீர் பெருகும் கண்களோடும், சூழ நிற்றல்]

கட்ட:- [வாய்விட்டுக் கதறி] பாஞ்சைப் பதியின் பால சிங்கமே! மறவர் குலத்தின் மங்காப் புகழ் விளக்கே! மாநிலம் புகழ் மாவீரா! என் எழில் மைந்தா! எங்கேயப்பா ஏகி விட்டாய்? துள்ளித் துடிக்கும் உன் தூய உடல் தூர்த்தரின் வஞ்சனையால் துவண்டு விட்டதே செல்வா! கனல் கக்கும் உன் கண விழிகள், இன்று அனல் நீங்கி, அருள் மங்கிப் போயினவே குமாரா! உன் வாழ்வின் வசந்த காலத்திலே, வாலிபப் பிராயத்திலே... என் பத்தரை மாற்றுப் பசுந் தங்கமே!.... பாலகா!... உன்னைப் பறி கொடுத்துப் பரதவிக்கிறேனே! பிரிவாற்றாமை என் நெஞ்சைப் பிளந்து பிளிந்தெடுக்கிறதே மகனே! புத்திர சோகம் என்னைச் சித்ரவதை செய்கிறதே புதல்வா! [அலறி அழல்] ஆ! ஆ!! ஆ!!!

[கோபாவேசத் தோடு] வீணிலே பலி கொடுக்கவில்லை நான், என் வீரமகனை. அவன் உடலிலிருந்து உதிர்ந்த ஒவ்வொரு துளி உதிரத்துக்கும் உலுத்தர்கள் உத்தாரம் சொல்லியாக வேண்டும்!

[வெள்ளையம்மாள் தலைவிரி கோலமாய் ஓடோடி வரல்]

வெள்ளை:- [பாதர்வெள்ளையின் சடலத்தின் மீது வீழ்ந்து புரண்டவாறு] அந்தோ! ஆண

முகா! என் ஆருயிரே! வீரத்தின் இலக்கணமே! விவேகத்தின் இரத்தினமே! என் மனக் கோயிலின் மங்கல விளக்கே! அன்பெனும் தூரியத்தால் என் இதயக் கிழியிலே எழிலோவியம் தீட்டிய என் மணாளா! என் நெஞ்சில் காரிருள் கவிந்து விட்டதே கண்ணாளா! துயர மேகங்கள் திரண்டு விட்டதே துரையே! என்வாழ்வை வறண்ட பாலை வனமாக்கி விட்டு நீர் மட்டும் வீர சுவர்க்கம் புகுந்தீரோ? அய்யகோ! மஞ்சள் மறைந்து, மாங்கல்யம் அறுந்து, குங்குமம் குலைந்து, கூந்தல் அவிழ்ந்து, உயிரற்ற உடலாக, மணமிழந்த மலராக, சிறகொடிந்த பறவையாக, பதியைப் பிரிந்து பரதவிக்க வேண்டுமா நான்? பிராண நாதா! தங்களைப் பிரிந்து இப் பேதை இனி எப்படி உயிர் வாழ்வேன்?.... இதோ வந்து விட்டேன சுவாமி!........இறப்பினிலும் இணைந்தே இன்ப முறுவோம்!

[வாளை உருவி உயர எறிந்து மார்பில் தாங்கி இறந்து படல்]

கட்ட:- [கண் கலங்கிக் கதறி] ஒன்றி வாழ்ந்த அன்றிற் பறவைகள்!...ஒன்றாகவே தகனம் செய்யுங்கள்.

[பாதர் வெள்ளைக் கென அமைத்த சிதையில் வெள்ளையம்மாளின் உடலும் கிடத்தப்பட்டு தீயிடப் படல். இந்தக் காட்சியைக் காணச் சகியாத கதிரவன் முகம் சிவக்க மேற்றிசைக் கடலில் மூழ்கல்]

[மாற்றம்]



---

கதிரவன் கடலில் மூழ்கல்—தற்குறிப் பேற்றணி.

## களம் ருஉ.

**இடம்:—** ஒட்டப் பிடாரம் வெள்ளையர் முகாம்.

**காலம்:—** இரவு.

**உறுப்பினர்;—** பானர் மென், மற்றும் ஆங்கில தளபதிகள்

**பானர்;—** [கோபாவேசமாக] Success-ful retreat!....வெற்றி கரமான வாபஸ்!...Damn it! ....வெட்கம்!

[குறுக்கும் நெடுக்கும் உலவல். சோல்ஜர்கள் மெய் விதிர்த்து நிற்றல்]

அகிலம் புகழும் ஆலிவர் க்ராம்வெல்.... நெப்போலியனை முறியடித்த நெல்ஸன்... வீரன் வெல்லிங்டன்.... இவர்களின் வழி வந்தவர்கள் தானே நீங்களும்.

**பிலிப்ஸ்:-** Yes sir!

**பானர்:—** Damn it!... வெட்கமா யில்லை அப்படிச் சொல்லிக் கொள்ள....

[மெக்கர்லே வருகை]

**மெக்கா:-** ஒரு நற் செய்தி!... களத்திலே பலியானன் காளை.... கலங்கிவிட்டான் காவலன்?...

**பானர்:—** [வியப்பு மேலிட] என்ன? பாதர் வெள்ளை ஒழிந்து விட்டானு?

**மெக்கா:-** ஆம்! சுருக்கு வழியில் சுருக் கிட்டு விட்டோம் அவன் உயிருக்கு

**பானர்:-** Righto!... ஹ...ஹ...ஹ... [ஆலோசித்தவாறு] பாதர் வெள்ளையின் மரணம் பாஞ்சையானுக்கு பலத்த அதிர்ச்சியாகத் தானிருக்கும். இனி கவலை யில்லை.... [புகையை ஊதி விட்டுக் கொண்டே] ஊதித் தள்ளி விடலாம்... ஆனல்.......?

நமது வீரர்கள் பலரும் வீழ்ந்து பட்டனரே!.... ஒன்றா? இரண்டா? காலின்ஸ்... ப்ளேக்...பின்னி... ஏன்?... படைத் தலைவன் டக்ளஸே பரலோகப் பிராப்தி யடைந்து விட்டாரே... உம்... மறைந்த மாவீரரின் ஆன்மாக்கள் சாந்தி யடைய ஒரு சில விநாடி மௌனம் அனுஷ்டிப்போம்!

[மௌனம் அனுஷ்டித்தல்]

**பானர்:-** மேஜர் மெக்காலே!

**மெக்கா:-** Yes sir!

**பானர்:-** ஞாபகச் சின்னம் நிறுவ வேண்டும் அவர்களுக்கு... ஞாபக மிருக்கட்டும்!

**மெக்கா:-** Yes sir! உடனே ஏற்பாடு செய்கிறேன்....

**பானர்:—** [சிந்தித்த வாறு] உம்..........முதல் தோல்வி........

**பிலிப்ஸ்:-** முற்றிலும் தோல்வியாகி விடாதபடி பார்த்துக் கொள்கிறோம.

**பானர்:-** Damn it!...... வாய் வீச்சுக்கு மட்டும் வரையறை இல்லை...மேஜர் மெக்காலே!

**மெக்கா:-** Yes sir!

**பானர்:-** பாளையங் கோட்டைக்குத் தகவலனுப்பும், படைகளும் பீரங்கிகளும் அனுப்பி வைக்கும் படி!

**மெக்கா:-** Yes sir!

**பானர்:—** உதவி வந்த பிறகு தான் அடுத்த தாக்குதல்!......இன்றைய போர் பற்றி தலைமைக் காரியாலயத்துக்கு விரிவாகக் கடிதம் எழுதி விடும்.

**மெக்கா:-** Yes sir!

[போதல்]

**[மாற்றம்]**



## களம் ருங.

இடம்:— பாஞ்சை கோட்டை,
காலம்:— காலை.
உறுப்பினர்:— கட்டபொம்மன், ஊமைத்துரை,
தானுபதி முதலானேர்.

கட்ட:— என் அன்பார்ந்த மக்களே! பாதர் வெள்ளை இல்லாத பாஞ்சாலங்குறிச்சி இரவி இல்லாத இருண்ட வானம்! தாமரை இல்லாத தண்ணீர்த் தடாகம்! மீகாமன் இல்லாத மரக்கலம்! அந்த வீர மறவனின் மறைவு உங்கள் உள்ளத்தைக் குமுறும் எரிமலையாக.... கொந்தளிக்கும் கடலாக ஆக்கி விட்டதை நாம் அறிவோம்! வெள்ளையத் தேவனை வீரத்தால் வீழ்த்திஞர்களா வீணர்கள்?.... இல்லை... படை நியதி தவறி என் பாலகனைப் பலி கொண்டார்கள்! அப் பாதகர்களைப் பழிக்குப் பழி வாங்கியே ஆக வேண்டும்!.... என் சத்புத்திரனின் சமாதி யூட்டும் புத்துணர்ச்சியோடு....புது வேகத்தோடு போரிடுவோம்! நயவஞ்சகர்களை நையப் புடைப்போம்!... நலம் காண்போம்!

[சுந்தரலிங்கம், கந்தன் பகடை வீரமல்லு சேர்வை ஆகியோர் வருகை]

கந்தன்:— அரசே! ஒரு விண்ணப்பம்.

கட்ட:— என்ன அது?

கந்தன்:— உத்தாரம் தாருங்கள்! உடனே ஒட்டப் பிடாரம் சென்று, அற நெறி தவறி அரசிளங்குமரனை அழித்த அற்பர்களை அதம் செய்து வருகிரேம்! போர் முறை மீறிய புல்லர்களுக்கு புத்தி புகட்டி வருகிரேம....

கட்ட;— சுத்த வீரர்களே! சென்று வாருங்கள்!

[மூவரும் போதல்]

[மாற்றம்]

# களம் ருச.

இடம்:- ஓட்டப் பிடாரம் வெள்ளையர் முகாம்.
காலம்:- நள்ளிரவு.
உறுப்பினர்:-சுந்தரலிங்கம், வீரமல்லு. கந்தன் பகடை ஆங்கில தளபதிகள் முதலானோர்.

[பாஞ்சை வீரர் மூவரும் வெள்ளையர் பாசறையை அணுகல்]

கந்தன்:- தம்பி சுந்தரலிங்கர்!

சுந்த:- என்ன அண்ணே கந்தன் பகடை!

கந்தன்:- பயலுக இன்னும் அசரக்காணோமே!

* * *

[கூடாரத்துக்குள்]

பானர்:- லெப்டினன்ட் பிலிப்!

பிலிப்:- Yes sir!

பானர்:-What's that ruddy noise there?

பிலிப்:- Well!... I have no idea!

பானர்:- Please find out! will You?

[பிலிப் வெளியே நோட்டம் விடல்]

பிலிப்:- அதோ!... அந்தச் செடி மறைவில் ஏதோ உருவம் போல் தோன்றுகிறது.

பானர்:-Damn it!... சுட்டுத் தள்ளும்! சுருண்டு விழட்டும்!

[பாசறைக்கு வெளியே]

*

கந்தன்:- வீர மல்லு! சுந்தர லிங்கம்!

இருவரும்:- ஏன் அண்ணே!

**கந்தன்:-** *அந்தா பாருங்க. எவனே வெளியே எட்டிப் பார்க்கிறன்......ஆபத்து....அரவம் காட்டாமே அப்படியே பதுங்கிக் கெடங்க.*

[பிலிப் அரவம் வந்த திக்கை நோக்கிச் சுடல். பாஞ்சை வீரர் பதுங்கிக் கொள்ளல்.]

*  *  *

[கூடாரத்துக்குள்]

**பிலிப்:-** *யாரையும் காணுமே;*

**பானர்:-** Damn it!... *விட்டுத் தள்ளும்! வீண் பிரமையா யிருக்கும்.*

[பாஞ்சை வீரர் மூவரும் பாசறைக்குள் புகுந்து வெள்ளையரை வேட்டையாடல். கந்தன் பகடை சுடப்படல்.]

**[மாற்றம்]**



# களம் ருரு.

**இடம்:-** பாஞ்சைக் கோட்டை

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** கட்டபொம்மன் தானுபதி சுந்தரலிங்கம் வீரமல்லு முதலானோர்.

[கட்டபொம்மன் ஆலோசனையில் ஆழ்ந்திருத்தல்.]

(தானுபதி வருகை)

**தானுபதி:-** *அரசே! வெள்ளையன் இப்போது சற்று சளைத் திருக்கிறன்......இந்த இடைக் காலத்தை நாம். நன்கு பயன் படுத்திக் கொள்ள வேண்டும்.*

கட்ட:- எப்படி?....மற்ற பாளையங்களின் நட்பை நாட வேண்டுமென்கிறீரா?

தானு:- இல்லை அரசே! நெல்லிக் கனிகளை ஒன்று குவித்தல் சாத்தியமா? பாளையக் காரர்களை நம்புவதில் துளியும் பயனில்லை. அவர்கள் அத்தனையுமே கோடரிக் காம்புகள்........பரங்கியோடு பகிரங்கமாகவே உறவாடுகிறார்கள் இப்போது......

கட்ட:— அப்படியானல்?

தானு:— பழுது பட்டிருக்கும் நமது கோட்டையை முதலில் புதுப்பிக்க வேண்டும்.

கட்ட:— சரி. வேலை தொடங்கட்டும். அதற்கான ஏற்பாடுகளை உடனே செய்யும்.

தானு:— சித்தம்!

[தானபதி போதல்]
[வீரமல்லு சேர்வையும் சுந்தரலிங்கமும் பட்டாள உடை தரித்து வரல்]

கட்ட:— அடடே! சுந்தரலிங்கம்! வீரமல்லு!... இதென்னப்பா வேஷம்?

சுந்த:— அரசே! பரங்கியை ஏய்த்த பகல் வேஷம்... பட்டாளத்து உடை.

கட்ட:— [நகைத்தவாறு] ஓகோ!...என்ன நடந்தது?

சுந்த:— நூறு பேருக்கு மேலிருக்கும் பரகதியடைந்த பரங்கிகளின் எண்ணிக்கை?

கட்ட:— [வியப்புடன்] அப்படியா?

சுந்த:— ஆம் அரசே! சூது திருட்டு... குடி வெறி... உறக்க மயக்கம்.... ஹ...ஹ...ஹ.... அவர்களுக்குள்ளேயே அடித்துக் கொண்டார்கள்.

கட்ட:—[ஆலோசித்தவாறு] அது சரி... எங்கே கந்தன் பகடை?

[மௌனம்]

கட்ட:— ஏன் மௌனம்?

கந்த:— வீர சுவர்க்கம் புகுந்து விட்டார் வேந்தே!

கட்ட:— [திடுக்கிட்டு] ஆ!... அன்று பாதர் வெள்ளையைப் பறிகொடுத்தோம்! இன்று கந்தன் பகடையையும் இழந்து விட்டோமே!... [கண்களில் நீர் மல்க] ஹே, சுதந்தர தேவி! உன் சுகங்காண இன்னும் எத்தனை சுந்தர வாலிபரைப் பலி கேட்பாயோ? [சற்று மனம் தேறி] அழைத்து வாருங்கள் பகடையின் அருமாந்த மகனை!

சுந்த:- சித்தம்! [போதல்]

[ஆறே வயது நிரம்பப் பெற்ற கந்தன் பகடையின் மகன் அழைத்து வரப்படல்]

கட்ட:- [சிறுவனின் கண்ணீரைத் துடைத்து] குழந்தாய்! அப்பா வந்து உன்னை அரவணைக்கவில்லையே என்று அழுகிறாயா? கலங்காதேடா கண்ணு! உனக்குத் தந்தைக்குத் தந்தையாய், தாய்க்குத் தாயாய் நான் இருக்கிறேன்!

[பாலகனை வாரியணைத்து முத்தமிடல்]

[கண்களில் கனல் பறக்க] பரங்கிக் காரப் படுபாவிகளே! இந்தப் பால் மணம் மாறாப் பச்சிளம் பாலகனின் கண்ணீர்த் துளிகளுக்கு நீங்கள் பதில் விறுத்தே யாக வேண்டுமடா!

[மாற்றம்]

---

அருமாந்த—'அரு மருந்தன்ன' என்னும் சொற் கோர்வை அருமாந்த' எனத் திரிந்தது என்பர். எனினும் 'அருமை வாய்ந்த' என்னும் இருபதங்களே அங்ஙனம் மருவியுள்ளன என்பதே எமது துணிபு.

## களம் ருசு

இடம்:- ஒட்டப் பிடாரத்தில் வெள்ளையர் பாசறை.
காலம்:- அதி காலை
உறுப்பினர்:-பானர்மென் மற்றும் ஆங்கில தளபதிகள்!

பானர்:- [கோபாவேசமாய்] அவமானம்! அவமானம்!! சிங்கத்தின் குகைக்குள் சிறு முயல்கள் புகுந்து சீரழிப்பதா?....Damn it!... மேஜர் மெக்காலே!

மெக்கா:- Yes sir!

பானர்:- இந்த முறை எப்படியும் கோட்டை தகர்த்தெறியப்பட வேண்டும்!... கோட்டான்கள் பிடிபட்டு விட வேண்டும்...

மெக்கா:- Well sir!...முயற்சிக்கிறோம்.

பானர்:- Damn it!....முயற்சித்தால் போதாது. முடித்தே தீர வேண்டும்!.... இனி உம்மை நம்பிப் பயனில்லை. நானே புறப்படுகிறேன்.

[பானர்மென் தலைமையில் வெள்ளையர் பாஞ்சை மீது மீண்டும் படையெடுத்தல்]

[மாற்றம்]



## களம் ருஎ.

இடம்:- பாஞ்சைக் கோட்டை.
காலம்:- காலை.
உறுப்பினர்:- கட்ட பொம்மன் தானாபதி முத்து வீரன் முதலானோர்

[ஒற்றன் வருகை]

ஒற்றன்:— அரசே! பாளையங் கோட்டையிலிருந்து படைகளும் பீரங்கிகளும் பரங்கிகளுக்கு

வந்து குவிந்து விட்டன. கம்பெனிப் பட்டாளங்கள் கடற் கரை மணலெனத் திரண்டு வருகின்றன.

கட்ட:- புறப்பட்டு விட்டேன் இதோ, போர்க் களத்துக்கு!

தானுபதி:- மன்னிக்க வேண்டும் அரசே! பகைவரை ஆரம்பத்திலேயே கோட்டையை அணுக விட்டு விடக் கூடாது....

கட்ட:- உண்மை!...அப்படியானல்....?

தானு:- அவர்களைச் செருமுகத்தில் சந்திக்கும் முன், வரும் வழியிலேயே மறித்துத் தாக்கி விட்டால்....? போருக்கு ஆயத்தம் செய்ய நமக்குப் போதுமான அவகாசமும் கிடைக்கும்.

[முத்துவீரணன் சேர்வை முன் வரல்]

முத்து:- அரசே! இம்முறை அந்த மூர்க்கரின் முதுகெலும்பை முறிக்கும் வாய்ப்பை எனக்குத் தாருங்கள். துணைக்கு ஒரு முப்பது வீரர் போதும் ....ஈனர்களின் ஈமக் கடனுக்குக் கூட எலும்பு எஞ்சாமல் அவைகளை எண்ணி நொறுக்கி விட்டு வருகிறேன்.

தானு:- ஆமாம். முத்துவீரா! அம்பறாத் துணிகளை நிரம்பிக் கொள்ளுங்கள்....உடனே புறப்படுங்கள்...உப்பனாற்றுச் சரிவிலே ஒளிந் திருந்து....

கட்ட:- [குறுக்கிட்டு] சரங்களை எய்து பரங்கிகளின் சிரங்களைக் கொய்து குவியுங்கள்.

முத்து:- சித்தம் அரசே! வெள்ளையனின் இரத்த வெள்ளம் உப்பனாற்றிலே பிரவகித்தோடச் செய்கிறோம்!

[முத்து வீரன் முப்பது வீரருடன் புறப்படல்]

**[மாற்றம்]**

[உப்பனாற்றங் கரையிலே கடும் போர் நிகழ்தல். முத்துவீரனும் அவனுடன் சென்ற வீரர்களும் வெள்ளையர்களை வீரா வேசமாய் வெட்டி வீழ்த்தல். முடிவில் பாஞ்சை வீரர் அனைவரும் குண்டுக்கு இரை யாதல். கம்பெனி சைனியங்கள் பாஞ்சைக் கோட்டையை அணுகல்.]



## களம் ரு அ.

**இடம்:—** வெள்ளையர் பாசறை.

**காலம்:—** பிற் பகல்.

**உறுப்பினர்:—** பானர்மென் மற்றும் ஆங்கில தளபதிகள்.

[போர் நிகழல். ஆங்கில பரி வாரங் களுக்கு நீர்த் தட்டு நேரல். மெக்காலே பானர் மென்னிடம் வரல்.]

**மெக்கா:-** *தண்ணீர் தட்டி விட்டது. தாகத்தால் தவிக்கின்றனர் நமது படை வீரர்.*

**பானர்:-** Damn it!.... *பீர்* (Beer) *புட்டிகளை* (Bottles) *உடனே விநியோகியும்!...வீரரின் தாகமும் தீரும்...வேகமும் ஏறும்!*

[மதுவுண்ட வெள்ளையர் வெறி கொண்டு தாக்குதல். கோட்டை பிளவுறல்].

[பிலிப்ஸ் வருகை]

**பிலிப்ஸ்:-** *வெற்றி!.... வெற்றி!!.... கோட்டை தகர்ந்து விட்டது.*

**பானர்:-** Righto!...Congratulations.

[இருவரும் கரம் குலுக்கல்]

பிலிப்ஸ்:- Well sir! இனி உட்புக வேண்டியது தான் பாக்கி.

பானர்:- Damn it!...... இப்போது கூடாது! இருட்டப் போகிறது.... இரகசிய ஏற்பாடு ஏதேனும் இருக்கும்.

பிலிப்ஸ்:- Well sir!... ஒட்டப் பிடாரம் திரும்பி விடலாமா?

பானர்:- Damn it!....... அதுவும் கூடாது...... பாதிக் கிணறுதான் தாண்டி யிருக்கிறோம் இப்போது! அரை க்ஷவரத்திலா எழுந்து போவது?

பிலிப்ஸ்:- அப்படியானல்?

பானர்:- இன்றிரவு இங்கேயே தங்கி யிருப்போம்!

பிலிப்ஸ்:- Very well Sir!

[மாற்றர்]



## களம் ருகூ.

இடம்:— பாஞ்சைக் கோட்டை.

காலம்:— மாலை.

உறுப்பினர்:— கட்ட பொம்மன். ஊமைத்துரை, தானுபதி முதலானோர்.

[வெள்ளையர் கோட்டை மீது உக்கிரமான தாக்குதல் நிகழ்த்தல்]

[கோட்டைக் காவலன் வருகை]

கோ. கா:- அரசே! ஆபத்து!...கோட்டையின் வட மூலையில் பிளவு கண்டு விட்டது.

கட்ட.- [வியப்புற்று] ஆ!...[வெறுப்பாக] உம்.... இரும்பு மதில் இறுதியில் இடிந்தே விட்டது.......

[ஆலோசித்தவாறு] இருக்கட்டும்... வெளி அரண் இடிந்து விட்டால் பாதக மில்லை. உள் மதில் பத்திரம்! அதனடியில் அமைக்கப் பெற்றிருக்கும் நிலவறைகளிலிருந்து ஈட்டிகளை எறிந்து கொண்டே இருங்கள்! பரங்கிகளை உள்ளே நுழைய விடாதீர்கள்!

**கோ. கா:-** சித்தம் அரசே!

[போதல்]

**கட்ட:-** [குடிமக்களை நோக்கி] என் அருமை மக்களே! மனம் தளராதீர்கள்! புனிதமான இந்த விடுதலைப் போராட்டத்திலே, வெற்றிபெறுவோம்! அல்லது வீழ்ந்து படுவோம்! மாற்றான் அடியில் மண்டி யிடுவதை விட மரணத்தின் மடியில் துயில் கொளல் எத்தனையோ மேல்! நமது செய பேரிகை முழங்க வேண்டும், அல்லது நமது சாவுச் சங்கம் ஒலிக்க வேண்டும்! இந்த உறுதியோடு நமது இறுதிப் போராட்டத்தில் இறங்குவோம். நீதி நிலைத்தே தீரும்!....அதர்மம் அழிந்தே ஆகும்!

**ஊமை:-** நீதி...

**மக்கள்:-** வாழ்க! வாழ்க!! வாழ்க!!!

**ஊமை:-** அதர்மம்....

**மக்கள்.-** வீழ்க! வீழ்க!! வீழ்க!!!

**[மாற்றம்]**



# களம் சூய.

இடம்:- கட்டபொம்மன் மந்திராலோசனை மண்டபம்.

காலம்:- இரவு

உறுப்பினர்: கட்டபொம்மன், ஊமைத்துரை தானுபதி முதலானோர்.

[கட்டபொம்மன் சிந்தித் திருத்தல்]

**தானுபதி:-** [கம்மிய குரலில்] அரண் தகர்ந்து விட்டது, ஆங்கிலேயன் கை அளவு மீறி ஓங்கி விட்டது. [ஆலோசித்த வாறு] அரசே! இந்தப் போருக்கு நான்தானே காரண கர்த்தா!...நானே கம்பெனியாரிடம் சென்று, இதமாகப் பேசி போர் நிறுத்தத்துக்கு ஏற்பாடு செய்தால்...?

**கட்ட:-** கூடாது!.... இசையவும் மாட்டார்கள் ஈனர்கள்...... பாளையங்கோட்டை களஞ்சியக் கொள்ளை, இராமனுதபுரம் இரண களத்தை விடவா கோரமானது?.......அதற்காகவா இந்தப் போர்?

**துளசி:-** இல்லை. ஆட்டைக் கொல்ல ஓநாய் காட்டிய காரணத்தைப் போலத்தான் இருக் கிறது கம்பெனியானின் கூற்று.

**கட்ட:-** ஆம்! பழைய பகைமைக்குப் பழிவாங்க பரங்கி சுமர்த்திய பழி அது.

[ஒற்றன் வருகை]

**ஒற்றன்:-** அரசே! நாளை பொழுது புலர்ந்ததும் கோட்டைக்குள் புகுந்து விடத் திட்ட மிட்டிருக் கிறார்கள் வெள்ளையர்கள்.

**கட்ட:-** [அமைதியாக] அப்படியா?... சரி........நீ போகலாம்.

[ஒற்றன் போதல்.]

தானு:- அரசே! வெள்ளம் அணை கடந்து விட்டது. அரச குடும்பத்தினருக்கு இனி எப்போதும் அபாயம். இனி தாங்கள் உடனே கோட்டையை விட்டு வெளி யேறி விட வேண்டும்.

ஊமை:- [அலட்சியமாக] ஹூம்....?கோழைத் தனம்!...கொசுவுக்கு பயந்து கோட்டையை விட்டு ஓடச் சொல்கிறீர்!.... அப்படித்தானே?

தானு:- இல்லை சாமீ! கண் தெரிந்தும் கற்பாறை மீது மோதிக் கொள்ள வேண்டா மென்கிறேன்! காட்டுத் தீயை அணைக்க முயல்வதில் கால விரயம் வேண்டா மென்கிறேன்!....... தன் வலியையும் மாற்றான் வலியையும் நிதானத் துலையில் சீர்தூக்கி நோக்கச் சொல்கிறேன்.

ஊமை:- [கோபமாய்] போதும்!...பொல்லாங்குக் கஞ்சி புறங்காட்டி யோடச் சொல்கிறீர்!

தானு:- தவறு! புலி பதுங்குவது பயத்தினால் அல்ல... பாய்வதற்கு.

கட்ட:- தானுபதியாரே! தம்பிக்கு விளக்கமாய் எடுத்துக் கூறும்.

தானு: இதைக் கேளுங்கள் சாமீ! அவசரத்தில் அறிவை அடகு போக்கிக் கொள்ளக் கூடாது பாஞ்சை அரச வம்சமே பூண்டற்றுப் போய் விட்டால் நாம் தொடங்கிய போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தத் தொண்டர்களுக்கு எங்கே போவது? சுவர் இருந்தால் தானே சித்திரம் வரையலாம்? புரட்சிப் புயல் சூழ்ந்து தவிக்கிறது நமது தாயகம். அதே மீகாமனில்லாத மரக் கலத்தைப் போல் தத்தளிக்க விட்டு விடலாமா?... நாம் வெளியேறுவது தோல்வி கண்டல்ல....... சிதறுண்டு கிடக்கும் ஆக்க சக்திகளை ஒன்று திரட்ட....

ஊமை:- ஆக்க சக்திகளா?

தானு:- ஆம்! கீழைச் சீமை மறவர் வட்டாரத்தில் இளவரசரின் மறைவினல் பலத்த கொந்தளிப்பு ஏற்பட்டிருக்கிறது. ராமனுதபுரம் முக்குலத்தோர் சமூகமும் ஆங்காங்கு கிளர்ச்சியும் புரட்சியும் நடத்தி வருகிறது. அவர்களை யெல்லாம் ஒன்று கூட்டி, வெள்ளையனை ஒருமுகமாகத் தாக்க வேண்டும்.

ஊமை:- அது சரி... என்ன இருந்தாலும், இந்த சமயத்தில்.... அதுவும் இருட்டு வேளையில் இருப்பிடம் பெயர்வது இழுக்கல்லவா?

தானு:- இல்லை... இத்தகைய இன்னல்களைத் தவிர்க்க அரசர்களின் இடமாற்றம் அத்தியாவசியம்... அரசியல் அறநெறி அறிவுறுத்துகிறது அப்படி.

கட்ட:— தம்பி சிவத்தையா! தானுபதியின் விருப்பத்தைத்தான் நாம் கெடுப்பானேன்?

ஊமை:— நல்லது அண்ணு,... ஆனல் கோட்டையை விட்டு வெளியேறும் முன் ஒரு வேண்டுகோள்....

கட்ட:— என்ன தம்பி அது?

ஊமை:— அனுமதி தாருங்கள்! படை நியதி தவறிப் போரிடும் பரங்கிகளின் பாசறைக்குள் நுழைகிறேன்! பலங்கொண்ட மட்டும் தாக்குகிறேன்! அந்தப் பாவிகளின் பச்சை இரத்தத்தால் என் பட்டயத்தின் பசி தீர்த்து வருகிறேன்!...... பிறகு புறப்படுவோம்.

கட்ட:— நல்லது... போய் வா தம்பீ;

ஊமை:— [வீரர்களிடம்] பொட்டி!... கருப்பா! முத்தா ...உம்...புறப்படுங்கள்!

வீரர்கள்:— தயார் சாமீ!

[ஊமைத்துரை வீரர்களுடன் வெள்ளையர் பாசறை நோக்கிப் புறப்படல்.]

[மாற்றம்]



## களம் சுக.

இடம்:— வெள்ளையர் பாசறை.

காலம்;— நள்ளிரவு.

உறுப்பினர்:—ஊமைத்துரை, பானர்மென் முதலானோர்.

[பாளையத்து வீரர்கள் வருவதைக் கண்ணுற்ற பிலிப்ஸ் பானர்மென்னிடம் வரல்]

பிலிப்ஸ்.- ஆபத்து! ஆபத்து!!

பானர்:- [உறக்க மயக்கத்தில்] யார்?... பாஞ்சையானு?... Shoot!.... Shoot!!... Shoot!!!...

[கட்டிலி லிருந்து வீழ்தல்]

பிலிப்ஸ்:— [பானர்மென்னை உசுப்பி] Sir!... Sir!!... ஆட்டு மந்தைக்குள் புலிபுகுந்ததைப் போல் பாய்ந் தடிக்கிறான் ஊமைத் துரை.

பானர்:- [திடுக்கிட்டுக் கண் விழித்து] Damn it! ...கொண்டு வாரும் என் குதிரையை!

[பொட்டிப் பகடை வெள்ளையர் குதிரை லாயத்துக்குட் புகுந்து அசுவ மொன்றைக் கொணர்தல்]

பொட்டி:- [ஊமைத் துரையிடம்] சாமீ!....... இதோ!... அழகான அச்சு மட்டக் குதிரை!... ஏறிக் கொள்ளுங்கள்!

[ஊமைத்துரையும் பானர்மென்னும் புரவிகள் மீதமர்ந்து போர் புரிதல். வெள்ளையர் பலர் வீழ்தல். ஊமைத்துரை தலையில் காய மேற்றல். கருப்பன் காலாடி மடிதல். பாஞ்சை வீரர் கோட்டை மீளல்]

[**மாற்றம்**]



## களம் கூஉ.

**இடம்:-** பாஞ்சைக் கோட்டை.

**காலம்:-** நடுநிசி.

**உறுப்பினர்;-** கட்டபொம்மன், ஊமைத்துரை, தானுபதி முதலானோர்.

[கம்பளத்து துரைகளும் தானுபதியும் வீரர்களுடன் வெளியேறச் சித்தமாதல்]

**கட்ட:-** *தம்பி சிவத்தையா! உன் மனைவி சக்கம்மாவை உடனே தாய் வீட்டுக் கனுப்பிவிடு.*

**ஊமை:—** *சக்கம்மா!*

**சக்க:-** *சுவாமி!*

**ஊமை;-** *கிழலிட் டிருக்கும் யுத்த மேகங்கள் நீங்கும் வரை நீ விலகி யிருக்க வேண்டும் அம்மா!*

**சக்க:—**[திடுக்கிட்டு] *ஆ!.... தங்களுக்கு வரும் ஆபத்து எனக் கில்லையா சுவாமி?*

**ஊமை:—** *கண்ணே!.... நீ கர்ப்பவதி.......உன் உயிருக்கு ஊறு நேர்ந்தால்....? நமது குல விளக்குமல்லவா கூட அணைந்து விடும்!*

**தாரு:—** [குறுக்கிட்டு] *ஆமாம் தேவி! பாஞ்சை அரச வம்சம் வேரற்றுப் போய் விடலாமா?*

[சக்கம்மா கண் கலங்கல்]

**ஊமை:-** *கலங்காதே! நல்ல காலம் வந்தால் நாம் மீண்டும் சந்திப்போம்.*

**கட்ட:-** [குடி மக்களிடம்] *என் அருமை மக்களே! உங்கள் எதிர் காலத் தலைவன் சக்கம்மா வின் உதரத்தில் வளர்கிருன். இனி அவன் உங் கள் பொறுப்பு...*

[சக்கம்மா கண்களில் நீர் மல்க, பிரியா விடை பெற்றுப் போதல்]

*வீர மக்களே! விடை கொடுங்கள்!*

[மக்கள் கூப்பிய கரங்களோ டும், நீர் பொழியும் விழிக ளோடும் உடைந்த உள்ளங் களோடும் தலைவர்களுக்கு விடை யிறுத்தல்]

*எங்கள் சிந்தை களிப்பித்த சிங்காரக் கோட் டையே,.... சென்று வருகிறோம்.*

[கவலை தோய்ந்த வதனத் தினராய் வெளி யேறல்.]

**[மாற்றம்]**



## களம் ௬௩.

இடம்:- நாகலாதபுரம்.

காலம்:- வைகறை.

உறுப்பினர்:- கட்டபொம்மன், ஊமைத்துரை, தானாபதி முதலானோர்.

[எல்லோரும் நாகலாதபுரம் வந்தடைதல்]

தாஞபதி:-[களைப்பு மேலிட] உஸ்....அப்பாடா! நாகலாதபுரமும் வந்து விட்டது.

கட்ட:—இனி அடுத்து ஆக வேண்டியது? காளையார் கோவிலுக்குப் போய் சிவ கெங்கை யதிபர்களான மருது சகோதரர்களைக் கண்டு பேசலாமா?

தாஞபதி:- செய்யலாம்... ஆனல்... [சிந்தித்தவாறு] முதலில் புதுக்கோட்டைக்குப் போனல்....?

கட்ட:— புதுக்கோட்டைக்கா?

தாஞ:— ஆமாம் அரசே!... படை பலம் படைத்தவர் தொண்டைமான்...

ஊமை:- ஹூம்! கிழச் சேதுபதிக்குப் பெண் கொடுத்து மண கொண்ட மகானுபாவன் தானே! இலகுவில் மசிய மாட்டான் கள்ளன்.

கட்ட:-- ஆமாம் தாஞபதியாரே! பலன் கிடைப்பதா யிருந்தால் தான் படை கொடுப்பான்.. அது அவன் பழக்கம்... இந்த நிர்ப்பந்தமான நிலையில் அவன் நம்மை ஆதரிப்பான் என்று எனக்குத் தோன்ற வில்லை.

தாஞ:—எதற்கும் முயற்சிப்பதில் தவறொன்று மில்லை அரசே!

---

கள்ளன்:— கள்ளர் மரபைச் சேர்ந்தவன்.

கட்ட:-[ஆலோசித்தவாறு] சரி! அப்படியானல் நாங்கள் முதலாவது புதுக்கோட்டைக்கே போகிறோம்....

தாஞ:— அப்புறம் நான்?

கட்ட:— நீர் இங்கேயே இரும்! பாவம்!.... மிகவும் களைத்துப் போய் விட்டீர்.... மேலும்....

தாஞ.- [குறுக்கிட்டு] ஆபத்துக் காலத்தில் தங்களை விட்டு நான் அகல்வது அழகாகுமா அரசே?

கட்ட:- அப்படி யில்லை தாஞபதியாரே!....நீர் தலை மறைவாக இங்கேயே இருந்து கொண்டு அவ்வப்போது கிடைக்கும் தகவல்களை உடனுக்குடன் எமக்கு அறிவிக்கலாமே!

தாஞ:- ஆக்ஞை அரசே;

[தாஞபதி நின்று விடல். மற்றவர்கள் பிரயாணத்தைத் தொடர்தல்.]

[மறைவிலிருந்த வாறு எட்டயா புரத்து அரண்மனை ஏவலர் கவனித்தல்.]

**ஏவலன் 1:-** அண்ணே;.... அதோ பாரு [தாஞபதியைச் சுட்டிக் காட்டி] ஆசாமி யாருன்னு பார்த்தியா?

**ஏவலன் 2:-** அடடே, பாஞ்சாலங் குறிச்சித் தாஞபதி! நண்டு, நரி வளையிலேயே மாட்டிக் கிடுச்சி. வா தம்பி நம்ப மகா ராஜா கிட்டே போய்ச் சொல்லலாம். நிறைய பரிசு கிடைக்கும்.

**முதல்வன்:-** என்ன அண்ணே? பாவமில்லியா? அந்த அப்பாவி மனுசன் நம்மளை என்ன பண்ணிபுட்டார்?

**இரண்டாமவன்:-** யார்ரு இவன்? பெரிய கருணை மூர்த்தி!....ஹும்!........எட்டயாபுரத்து அரண்மனை

யிலே சேவகம் பண்ணியும் இந்த ஈன புத்தி உன்னை விட்டு இன்னும் போகலையே!.... உம்........ உம்........புறப்படு.

[இருவரும் போதல்]

[மாற்றம்]

[புதுக் கோட்டைப் பயணத்தில் சற்றுப் பின் தங்கி விட்ட ஊமைத்துரை, வழி தவறி தமையனைப் பிரிந்து தம்பியுடன் கன்னிவாடி மலைச் சீமை நோக்கிச் செல்லல்]



## களம் ௩௪.

**இடம்:-** பாஞ்சையில் வெள்ளையர் பாசறை.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** பானர்மென், மற்றும் ஆங்கில தளபதிகள்.

[கம்பெனியார் கோட்டையைத் தொடர்ந்து தாக்குதல்]

**பானர்;-** மேஜர் மெக்காலே!

**மெக்கா:-** Yes sir!

**பானர்:-** எட்டு நாளாய் சுட்டுத் தள்ளுகிறோம். எவ்வித அரவத்தையும் காணோமே!

**மெக்கா:-** [சிந்தித்த வாறு] Well.... ஒரு வேளை இரவு காத்த கிளி போல........ [கண்ணோட்டிட்டுப் பார்த்து] அதோ! யாரோ வருகிறார்கள். எட்டயாபுரத்து ஏவலர் போல் தெரிகிறது.

[எட்டயா புரத்து ஏவலர் வருகை. பானர் மென்னிடம் கடிதம் கொடுத்தல்.]

[பானர்மென் கடிதத்தைப் படித்தல்.]

கட்டபொம்மன் புதுக் கோட்டைக்குப் போயிருக்கிறான். ஊமைத்துரை கன்னிவாடிக்குப் போய் விட்டான். தானாபதியை, நாகலாபுரத்தில் சிறைப் படுத்திக் காவலில் வைத்திருக்கிறோம்.

எட்டப்பன்.

பானர்:- ஹ...ஹ....ஹ....Damn it!.......நரிகள் வளையை விட்டு வெளியேறி விட்டன... இனி வளைத்துப் பிடித்து விடலாம்....... [தனதுள்] எட்டப்பர் கெட்டிக்காரர்...என்னே அவர் ராஜ விசுவாசம்! .......சரியான சன்மானம் வழங்க வேண்டும், அந்த சத்புத்திரனுக்கு......மேஜர் மெக்காலே.

மெக்கா:— Yes sir!

பானர்:— உடனே புறப்படும்......... ஊமைத்துரையைப் பிடிக்க வேண்டியது உமது பொறுப்பு! .. கட்டபொம்மனை நான் கவனித்துக் கொள்கிறேன்.

மெக்கா:— Yes Sir!

பானர்:— நான் முதலில் நாகலாபுரம் போகிறேன், அந்த எத்தன் தானாபதியை எமலோகம் அனுப்பி வைக்க.

மெக்கா:— Yes Sir.

[போதல்]

[மாற்றம்]



# களம் சூறு.

இடம்:— புதுக் கோட்டை அரண்மனை.
காலம்:— காலை.
உறுப்பினர்;— தொண்டைமான், அமைச்சர், கட்ட பொம்மன் முதலானோர்.

[தொண்டைமான் கொலு வீற்றிருத்தல்]

**தொண்டைமான்:-** *ராமன் ஆண்டாலென்ன? ராவணன் ஆண்டாலென்ன?... விடுதலையாம்!... சுதந்தரமாம்!... புடலங்காயாம்!.... ஹூம்!... ஆனாலும், கட்டபொம்மன் ரொம்பவும் நெஞ்சழுத்தக் காரன் தான்.*

**அமைச்சர்:-** *ஆமாம் அரசே! எழுபத்திரண்டு பாளையங்களுள் பாஞ்சைதான் பரங்கியை எதிர்த்துப் போரிடத் துணிந் திருக்கிறது.*

[சேவகன் வருகை]

**சேவகன்;-** *மகாராஜா! பாஞ்சை யதிபர் வந் திருக்கிறார்.*

**தொண்டை:-** [வியப்பு மேலிட] *ஆ!.... யார்?... கட்டபொம்முவா!*

**சேவகன்:-** *ஆமாம் அரசே!*

[தொண்டைமான் கட்ட பொம்மனை எதிர் கொண் டழைத்து வரவேற்றல்.]

**தொண்டை:-** *வர வேண்டும்!... வர வேண்டும்!.... தன்னியனானேன்!... ஏய் யாரங்கே?*

[ஏவலர் வருகை]

*விருந்து பிரமாதமா யிருக்க வேண்டும்.*

**ஏவலர்:—** *சித்தம் அரசே!*

[விருந்து நடைபெறல்]

[விருந்துக்குப் பின்]

**தொண்டை:-** பாஞ்சை மண்டலாதிபதி இந்தத் தொண்டைமான் குடிசைக்கு எழுந்தருளிய நோக்கம்...?

**கட்ட:—** வெள்ளையரோடு நாங்கள் நிகழ்த்தும் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தத் தொண்டர்கள் தேவை!.... தங்கள் நட்பை நாடி வந்திருக்கிறேன்.

**தொண்டை:-**[ஐயப் பாட்டுடன்] அப்படியானால் பாஞ்சைக் கோட்டை?

**கட்ட:-** ஆம்!...பரங்கி வச மாகி விட்டது.

**தொண்டை:-** [ஆலோசித்த வாறு] அப்படியா சமாச்சாரம்?.........மன்னிக்க வேண்டும் மன்னா! யானையின் பகையை என்னால் சமாளிக்க இயலாது. வழியேபோகும் சனியனை வருந்தி அழைக்கலாமா?

**கட்ட:-** அப்படி யென்றால்?

**தொண்டை:-** அபயம் கோறிவந்த தங்களுக்கு அடைக்கலம் தந்து ஆதரிக்க இயலாமைக்குப் பெரிதும் வருந்துகிறேன். [ஆலோசித்தவாறு] தாங்கள் தற்காலீகமாகத் தங்கி யிருக்க ஏற்ற இடம் காளாப்பூர்தான்!

**கட்ட.-** காளாப்பூரா?

**தொண்டை:-** ஆம்!....கலியப்பூர் என்றும் சொல்வார்கள். திருங் களம்பூரை அடுத் திருக்கிறது...... அடர்ந்த ஆரண்யம்...... தலை மறைவா யிருக்கத் தகுதியான இடம்....

**கட்ட:—** [சிந்தித்தவாறு] அப்படியா? அதுவும் நல்ல ஆலோசனைதான். காளையார் கோவில் சென்று அங்கிருந்து சிறு வயலுக்குப்போய் மருது சகோதரர்களைக் கலந்தாலோசிக்கவும் எளிதாயிருக்கும்... சரி. நான் வருகிறேன். என்னால் தங்களுக்கும் ஏன் வீண் சிரமம்?

**[மாற்றம்]** [போதல்]

## களம் ௬௬.

இடம்:- நாகலாதபுரம்.
காலம்:- மாலை.
உறுப்பினர்:- பானர்மென், தானுபதி முதலானோர்.

பானர்:— கொண்டு வாருங்கள் அந்த குட்டிச் சாத்தானை!

[சிப்பாய்கள் தானுபதியை இழுத்து வந்து பானர்மென் முன்னிலையில் நிறுத்தல்]

தானுபதி!....கொலை! கொள்ளை! ஆகிய கொடூர குற்றங்களில் கட்டபொம்மனுக்கு உடந்தையா யிருந் திருக்கிறீர்!.... நீர் கூறும் சமாதானம்?

தானு:— [அமைதியாக] அரச பக்தி, தேசாபி மானம்... இவை உங்கள் அகராதிப் படி குற்ற மானல், குற்றத்தை ஒப்புக் கொள்கிறேன்!

பானர்:—[கோபாவேசமாய்] Damn it!... பாது காப்புச் சட்டம் பத்தாவது விதிப் படி இந்த மதி கெட்ட மர்க்கடத்துக்கு மரண தண்டனை விதிக்கி றேன்... கழு வேற்றுங்கள் இந்தக் கழுதையை!.... ஊர்க் கோடியி லிருக்கும் வேப்ப மரத்தில் இந்த துரோகியைத் தூக்கி லிடுங்கள்... அவன் தலையை வெட்டி, பாழடைந்த பாஞ்சாலங் குறிச்சிக் கோட் டையின்மேல் வேல் நாட்டி மாட்டுங்கள்!.. இந்தப் புல்லனின் புலாலைப் புள்ளினங்கள் புசிக்கட்டும்!... பாளையத்து மக்கள் பார்க்கட்டும் இந்தப் பாதக னின் பயங்கர முடிவை!....பதறட்டும்... அலறட்டும்! ....கண்ணீர் வடிக்கட்டும்!... கதறித் துடிக்கட்டும்! ... ஹ... ஹ ... ஹ.... ஹ ஹ....

[சிப்பாய்கள் தானுபதியை இழுத்துச் செல்லல்]

[மாற்றம்]



## களம் ௬௭.

**இடம்:—** புதுக்கோட்டை அரண்மனை.

**காலம்:—** காலை.

**உறுப்பினர்;—** தொண்டைமான், அமைச்சர்.

**தொண்டை:—** [கம்பெனியாரின் கடிதத்தைப் படித்தவாறு] அமைச்சரே! பயந்தது பலித்து விட்டது.....பாரும் பானர்மென் எழுதி யிருப்பதை.

[அமைச்சர் கடிதத்தைப் படித்தல்]

நமக்கேன் வீண் விரோதம்? கட்டபொம்மன் காளாப்பூரில் இருப்பதை உடனே கம்பெனிக்குத் தெரியப் படுத்தி விடுவோம்.

**அமை:-** [திடுக்கிட்டு] ஆ! பச்சை துரோக மல்லவா அரசே? தஞ்ச மடைந்த வருக்கு வஞ்சனை பண்ணலாமா? புகலிடம் தேடி வந்தவருக்குப் பொல்லாங்கு செய்யலாமா? உபகாரம்தான் நம்மால் செய்ய முடிய வில்லை அந்த உத்தமருக்கு. உபத்திரவம் கொடுக்கலாமா?

**தொண்டை:-** அதற்காக? ஆபத்துக்கு ஆலத்தி எடுப்பதா? அழிவுக்கு அறை கூவல் விடுப்பதா? தொற்று நோயைப் பற்றி இழுப்பதா? கூடாது. நிலைமை எல்லை மீறி விட்டது. அமைச்சரே! உமது ஆலோசனையை அங்கீகரிக்க மறுக்கிறேன்!...... ஏய்!.... யாரங்கே?

[சேவகன் வரல்]

முத்து வயிரவ அம்பலக் காரரை உடனே அழைத்து வா.

**சேவகன்:—** சித்தம்!

[சேவகன் முத்து வயிரவனை அழைத்து வரல்]

தொண்டை:- அம்பலகாரரே! [கடிதம் கொடுத்து] இந்த லிகிதத்தை உடனே பானர் மென் துரையிடம் சேர்ப்பியும்..... கட்டபொம்மனைப் பிடிக்க வெள்ளையருக்கு வலது கரமாயிரும். வெகுமானம் வேண்டியது கிடைக்கும்.

முத்து:- சித்தம் அரசே!

[போதல்]

[மாற்றம்]



## களம் ௬௮.

இடம்:— காளாப்பூர் காடு.

காலம்:— இரவு.

உறுப்பினர்:— கட்டபொம்மன், படைவீரர் முதலானோர்.

[கட்டபொம்மன் சென்று போன சம்பவங்களின் நினைவில் இலயித்து தனிமையில் உள்ளம் வெதும்பி உருகி நிற்றல்]

கட்ட:- [தனதுள்] தாயே! சக்கமா! பார்த்தாயா உன் பக்தனின் பரிதாப நிலையை?... மாடு மனை யிழந்தேன்! மக்கள் சுற்றமிழந்தேன்! நாடு நகரிழந்தேன்! நாதி யற்றவனாக...நடைப் பிணமாக...நடுக் காட்டிலே நலிந்து கிடக்கிறேனே! பாலகன் பாதர்வெள்ளையைப் பலி கொடுத்தேன்! உத்தமர் தானாபதியையும் பறி கொடுத்தேன்! உடன் பிறந்த ஊமைத்துரையையும் பிரிந்தேன்! அனுதினமும் உன்னை உள்ள பூர்வமாய் வழிபட்டு வந்தேனே! இதுதானா உன் கடாட்சம்? பக்தர்களுக்கு வேதனை தருவதுதான் உன் சோதனையா?

அன்றேல் சாதனையா? தேவி!...... நீ எங்கிருக்கிறாய்?... கடல் கலங்கினாலும் மனங் கலங்காத கட்டபொம்மனின் விழிகளினின்றும் இன்று இரத்தக் கண்ணீர் அருவியெனப் பிரவகித்தோடுவதைப் பார்! பார்! பார்! பார்த்துப் பரவசப்படு!

[பகடையொருவன் வரல்]

பகடை:- அரசே! ஏதோ அரவம் கேட்கிறது... [கூர்ந்து கேட்டு] குதிரைகளின் குழம்பொலி போல் தெரிகிறது [இருளை ஊடுருவி உற்று நோக்கி] பரங்கிப் பட்டாளங்கள் பாய்ந்து வருகின்றன. அரசே!

கட்ட:- தெரியும்! துரோகி தொண்டைமானின் கைங்கரியம் அது....

[பட்டாளங்கள் அணுகல்]

படை வீரரே! யாரும் எதிர்த்துப் போரிட வேண்டாம்! துரோகிகள் சூழ்ந்த இந்நாட்டில் சுத்த வீரர்கள் வாழ்வதே தவறு!.... வாருங்கள் போவோம், கொலைக்களம் நோக்கி.

[இரண்டாயிரம் படைவீரர் கட்டபொம்மனையும் அவனுடனிருந்தவர்களையும் சூழ்ந்து பிணைத்தல்]

கட்ட:- [முத்து வயிரவனைப் பார்த்துவிட்டு] முத்து வயிரவா! அடமுட்டாளே! கட்டபொம்மனைக் கட்டி விட்டோம் என்று களிப்படைகிறாயா?.... தெரிந்துகொள்....எதிர்கால சந்ததிகளின் ஏளனத்துக்கு உன்னை இலக்காக்கிக் கொள்கிறாய்!

[மாற்றம்]



## களம் ௬௯.

இடம்:— கயத்தாறு கிராமத்தில் பானர்மென் முகாம்.
காலம்:— பிற்பகல்
உறுப்பினர்;— பானர்மென், கட்டபொம்மன் முதலானோர்.

[கட்டபொம்மன் பானர்மென் முன்னிலையில் நிறுத்தப் பெறல், ஏனைய பாளையக் காரர் அனைவரும் சூழ அமர்ந்திருத்தல்]

பானர்:— [கேலியாக] ஹ... ஹ... ஹ... கயத்தாறு முகாமுக்கே வந்து விட்டாரே கம்பளத்துத் துரைமகன்!...... புலியுடன் போரிடத் துணிந்த சிற்றெலியே!... வா...

கட்ட:- வீரனை விலங்கிட்டு வரப் பணித்த வெறி கொண்ட வெள்ளை நாயே! இதுதானா உன் அரசியல் நேர்மை! நீதி!....

பானர்:- Damn it!.... நிறுத்து! நீதி மன்றத்தின் முன் நிற்கிறாய் இப்போது.

கட்ட:- ஹூம்! ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து அண்டி வாழ வந்த அன்னியன்— ஆண்டிகள் தலைவன், மானமே பெரிதென மதித்து வாழும் மறத் தமிழ் மன்னனுக்கு நீதி வழங்குவதா?.... நன்றாயிருக்கிறதப்பா உன் நயவஞ்சக நாடகம்!

பானர்:-Damn it....! பிதற்றாதே! குற்றப் பத்திரிகை படிக்கிறேன்! கூறு உன் பதிலை.

கட்ட:- பதில் சொல்லத்தான் போகிறேன் நீ வேண்டாமென்று தடுத்தாலும். உன் கட்டளைக்குப் பணிந்தல்ல!... என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவும் அல்ல.... உண்மையை உலகத்துக்குப் பறை சாற்ற.

பானர்:- முதலாவதாக... 'கம்பெனிக்குக் கப்பம் கட்ட மறுத்தது'....

கட்ட:— [கோபாவேசமாய்] கப்பம்? கப்பமென்ற பேரால் கணக்கின்றிக் கவர்ந்து செல்கிருயே! கழனியில் கஷ்டமேனு பட்டாய்? கலப்பை பிடித்தாயா? கரடு திருத்தினுயா? களை எடுத்தாயா? கதிர் அறுத்தாயா? வானம் பொழிகிறது!.... பூமி விளைகிறது!.... வரி யேன் செலுத்த வேண்டும் வந்து புகுந்த வஞ்சகனுக்கு? உடல் துவள.... உள்ளம் அடிக்க.... அல்லும் பகலும் அனவரதமும் அரும்பாடு படும் உழைப்பாளி மக்களின் உடைமையையும், உதிரத்தையும் உறிஞ்சிக் கொழுக்கும் உலுத்தனே! உனக்கேன் வரி செலுத்த வேண்டும்?

பானர்:- ஹ....ஹ....ஹ.... Damn it!.... உளறுகிருன் உன்மத்தன்.... அடுத்தபடியாக 'சென்னை ஒப்பந்தத்தை மீறி பாளையங்கோட்டை கம்பெனிக் களஞ்சியத்தைச் சூறையிட்டது, பாண்டியத் தேவனைப் படு கொலை செய்தது, அது பற்றிக் கேட்க வந்த பிரிகேடியரை அவமதித்தது'

கட்ட:- ஒப்பந்தத்தை நான் ஒருபோதும் ஒப்புக் கொண்டதில்லை. வீண் வார்த்தை யாடினுன் பிரிகேடியர்.... தானுதியைக் கும்பினிக் கும்பலிடம் ஒப்படைக்கக் கோரினுன். சுற்றத்தானை மற்றவனுக்குக் காட்டிக் கொடுக்கும் கண்ணியம் [எட்டப்பனைச் சுட்டிக்காட்டி] எட்டப்ப மகாராஜனுக்கும் [புதுக்கோட்டை யதிபனைச் சுட்டிக் காட்டி] தொண்டைமானுக்கும் ஏக போக உரிமையாயிற்றே! என் மனம் இசையவில்லை அதற்கு.

பானர்:- கடைசியாக....நாட்டின் அமைதிக்குப் பங்கம் விளைவித்தது.... அராசகம் நிகழ்த்தியது.... எமது அரசுரிமையை அங்கீகரிக்க மறுத்தது.

கட்ட:- ஹும்! அரசுரிமை? உன் அப்பன் வைத்துப்போனானோ?.... போகட்டும்.... அரசேற்று நடத்துகிறேன் என்று ஆணவம் பேசுகிறாயே! [சூழ நின்ற பாட்டாளி மக்களைக் காட்டி] பார் உன் ஏகாதிபத்திய வெறியாட்டத்தின் விபரீத விளைவுகளை! உன் ஆதிக்கத்தின் அடக்கு முறைக்கு ஆளான அலங்கோலச் சின்னங்களை! நாதியற்ற நடைப் பிணங்களை... நலிவுற்றலையும் எலும்புருக்களை-அவர்கள் குழிந்த விழிகள் பொழியும் கண்ணீர்ப் பெருக்கிலே... உளுத்துப்போன உடலில் ஊற்றெடுக்கும்........ வியர்வை யாற்றிலே, கொந்து வெந்த சிந்தை சிந்தும் உதிர வெள்ளத்திலே கோரக் கிரீடை புரியும் குல்லாய்க் காரக் கொடிய அரக்கனே! பார் உன் பயங்கரப் பசிக்குப் பலியான பாட்டாளி மக்களின் பரிதாப நிலையை!.... கொதிக்கும் அவர்கள் கும்பியைப் பார்!.... கட்டியிருக்கும் கந்தலைப் பார்!........ கொந்தளிக்கும் உள்ளத்தைப்பார்! குமுறும் குடிசையைப் பார்!.... பார்!....... நன்றாகப் பார்! உன் அரசாட்சியின் அற்புத சாதனைகளை!... ஆதிக்க வெறி கொண்டு அட்டூழியம் பல புரிந்து எமது நாட்டின் அமைதியைக்குலைத்தது நீயா? நானா? வீணனே! ஏன் வீண் பழி சுமர்த்துகிறாய்?

பானர்:- ஹ........ஹ........ஹ........Damn it!.... குத்துண்ட குக்கல் குரைக்கிறது.... அர்த்தமின்றி அளவு மீறி அரற்றுகிறான் அறிவிலி!.... பாளையத்து துரை மக்களே! கட்டபொம்மன் கழறிய கருத்துக்கொவ்வாத குதர்க்க்வாதங்களைக் கவனித்தீர்கள் வழங்குங்கள்... உங்கள் தீர்ப்பை!

பாளையக்காரர்:- கட்டபொம்மன் குற்றவாளி!

பானர்:- ஆம்! குற்றவாளி!....ஹ....ஹ....ஹ....

கட்ட:- [திடுக்கிட்டு] குற்றவாளி? நானா குற்றவாளி? எது குற்றம்? விடுதலை வேட்கை

கொண்டது குற்றமா? ஏகாதிபத்தியத்துக் கெதிராய்ப் போர் முரசு கொட்டியது குற்றமா? அடிமைத் தளையை அறுத்தெறிய அறப் போர் புரிந்தது குற்றமா? தாய் நாட்டை விடுவிக்கத் தளராது சேவை செய்தது குற்றமா? சுதந்தரப் பண்ணிசைத்தது குற்றமா? எது குற்றம்?....முதுகெலும்பில்லாத மூடர்களே! நாவில் நரம்பில்லாத நய வஞ்சகர்களே! பாண்டிய மன்னர் பரம்பரைக்கு மாசாக வந்த மகானுபாவர்களே! பாளையத்துக் கொலு பொம்மைகளே! பகருங்கள். எது குற்றம்?

பானர்:— Damn it!........ நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே!....கட்டபொம்மா!... நடந்ததை மறந்து விடுகிறேன்!.... மன்னித்து விடுகிறேன்!........ இப்போதாவது இணங்கி விடு!........ இசைந்து விடு!.... ஏற்றுக் கொள் எமது அரசாட்சியை.

கட்ட:— பகற் கனவு காணாதே! வெட்டுண்டு வீழ்ந்தாலும் வீழ்வான்! கட்டுண்டு வாழ மாட்டான் கட்டபொம்மன்!

பானர்:—Damn it!.... இதைக் கேள்!.... பணிந்தால் பதவி!........மறுத்தால் மரணம்!

கட்ட:- மரணம்?....அது எனக்கொரு திரணம்! கொடுமைக் கஞ்சி கொள்கையைக் கோட்டை விடும் கோழை யல்ல நான்!

பானர்:— Damn it!........பாதுகாப்புச் சட்டம் மூன்றாவது விதிப்படி இந்த மூர்க்கனுக்கு மரண தண்டனை விதிக்கிறேன்! தூக்கி விடுங்கள் இந்த துராத்மாவை....கட்டபொம்மா! உன்னைக் கட்டியணைத்து முத்தமிடக் காத்திருக்கிறது கட்டைப் புளிய மரம்! போ!

[சிப்பாய்கள் கட்டபொம்மனை இழுத்துச் செல்லல்.]

[மாற்றம்]



# களம் எய.

இடம்:- தூக்கு மேடை.
காலம்:- மாலை.
உறுப்பினர்:- பானர்மென், கட்டபொம்மன், பாளையக் காரர்கள் முதலானோர்.

[கட்ட பொம்மன் தூக்கு மேடையில் நிறுத்தப் பெறல் பானர்மென் காலண் டரை ஒரு முறை நோட்டம் விட்டு வரல் அன்றைய தேதி 16—10—1799]

**பானர்:-** ஹ........ஹ........ஹ........ கொக்கரித் தாயே கொற்றவா! ஏகாதி பத்தியச் சுழலில் எதிர் நீச்சல் போடுவேன் என்று இறுமாந்திருந்தாயே.... Damn it!........ இப்போது என்ன வாயிற்று?........ தூக்குக் கயிற்றில் ஊஞ்சலாடப் போகிறாய்!....உன் யாக்கையைக் காக்கைகளுக்கு விருந்திடப் போகி றாய்!........ மரணத்தின் மடியில் மருளும் மமதை பிடித்த மன்னனே!.... அழிவின் அந்தகாரத்தில் அருளும் அகந்தை கொண்ட அரசனே!....கடைசி முறையாகக் கேட்கிறேன்!....இப்பொழுதாவது மாற்றிக் கொள் உன் முடிவை!....ஏற்றுக்கொள் எமது ஆதிக்கத்தை!

**கட்ட:—** அட மடையா! மயிர் நீப்பின் வாழுமா கவரிமான்? மானத்தை இழந்து வாழ்வதை விட மரணத்தை மகிழ்ச்சியோடு வரவேற்பான் மறத் தமிழன்! ....பானர்மென்!...உன்னை நான் பாராட் டுகிறேன்.

**பானர்:—** [வியப்பு மேலிட] என்ன?

**கட்ட:—** ஆம்! ஓரளவு! அவ்வளவுதான்....உன் னிடம் ஒரு சில உருப்படியான கொள்கைகளாவது இருக்கின்றன.... ஆனால்... இதோ [பாளையத் ததிபர் களைக் காட்டி] உனது தகாத செயலுக்குத் தலை யசைத்துத் தாளம் போட்டுத் திரிகிறார்களே இந் தத் தறுதலைகள்!.. கூடவே இருந்து குரல் வளையை

நெறிக்கும் குள்ள நரிகள்!.... நெஞ்சில் நேர்மையில்லா நீசர்கள்! நெல்லிக் கனிகள்!... வெள்ளாடுகள்....! கோடரிக் காம்புகள்!...... இவர்கள் கொள்கை என்பது எதுவுமே இல்லாத குருடர்கள், ஒரு சில உத்தமர்கள் நீங்கலாக.

பானர்:— ஹ...ஹ...ஹ...Damn it!....

கட்ட:— [பாளையத் ததிபர்களை நோக்கி] பட்டம் பதவி நாடிப் பரங்கிகளின் பாதம் வருடும பாதகர்களே! இன்று கட்டபொம்மனுக்கு முடிவு கட்டி விட்டோம் என்று கொம்மாளம் போடுகிறீர்கள்! கூத்தடிக்கிறீர்கள்! ஆனல்?...மறந்து விடாதீர்கள்! கட்டபொம்மனின் சமாதி மீது கணக்கற்ற காளைகள் தோன்றுவார்கள்! கட்டபொம்மன் கால மணலில் விட்டுச் செல்லும் அடிச் சுவட்டிலே அநேகமாயிரம் விடுதலை வீரர்கள் வீறு நடை போடுவார்கள்!.... என்ருவது ஒரு நாள் வெள்ளை வெறியனின் ஏகாதிபத்தியத்துக்குச் சாவு மணி அலறும்!....அடிமைத் தளை அறுபடும்!.... சுதந்தரப் பண்ணின் சோபித ஒலி கேட்கும்!....அன்று....? வருங்கால சந்ததியார் உங்களை 'துரோகிகள்' என்று தூற்றுவார்கள்! தூஷிப்பார்கள்!....[காறி உமிழ்ந்து] தூ.... துப்புவார்கள்.

பானர்:—ஹ....ஹ....ஹ....Damn it!.... உனது கடைசி வேண்டுகோள்?

கட்ட:— தவறு!........ விருப்பம்........ வீரத்தை வஞ்சனையால் விலங்கிடும் வீணர்கள் வீழ வேண்டும்! சக்தியைச் சதி கொண்டு சாய்க்கும் சண்டாளர் சரிய வேண்டும்! சூரத் தனத்தைச் சூழ்ச்சியினல் சூறையிடும் சூதர்களின் திட்டங்கள் சுக்கு நூருக வேண்டும்!.... அன்னியன் ஆதிக்கம் அழிய வேண்டும்! நாட்டு மக்கள் சுதந்தரச் சோலையிலே சொகுசாக வாழ வேண்டும்.... சுகங் காண வேண்டும்!

[ஊமைத்துரையின் ஞாபகம் வரல்]

தம்பி சிவத்தையா!........உடன் பிறந்த உத்தமனே! உன் தமையன் மேல் துரும்பு படச் சம்மதிக்க மாட்டாயே! நிழல் போல் நீங்காதிருப்பாயே! எங்கேயப்பா போய் விட்டாய்? உன்னைக் கடைசியாய் ஒரு முறை கூடக் காண இயலாத பாவியாகி விட்டேனே! பிறந்து வளர்ந்த பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையின் பாதுகாப்பிலேயே நாம் அனைவரும் ஒருமிக்க உயிர் விட்டிருந்தால் எத்தனையோ நலமாயிருந் திருக்குமே! தம்பி சிவத்தையா! தம்பி துளசிங்கா!!

[சிப்பாய்கள் கட்ட பொம்மன் கண்களைக் கட்ட முயலுதல்]

கட்ட:— என் முகத்தை மூட வேண்டாம். நான் பேடியல்ல! தூக்குக் கயிறு எனக்கொரு துரும்பு! தூசு! ஆனால்....கனல் கக்கிய கட்டபொம்மனின் கண்விழிகள் கோர நர்த்தனம் புரியும் கண்ணராவிக் காட்சியை இந்த துரோகிகள் காணட்டும்! கண்டு இரசிக்கட்டும்! காலப் போக்கிலாவது இந்தக் கயவர்களுக்குப் புத்தி வரட்டும்!

[தூக்குக் கயிற்றைக் கழுத்தில் மாட்டிக் கொள்ளல்]

தூக்கு மேடை!....பகுத்தறிவுப் பாதை வழியே பயணப் படுவோர்க்குக் கிடைக்கும் பரிசில்! இலட்சிய வாதிகளை இலங்கச் செய்யும் இறுதி இடம்!... கர்ம வீரர் காணும் கடைசிக் கட்டம்!....புத்துலகச் சிற்பிகள் புகழெய்தும் புனித ஸ்தலம்!....விடுதலை வீரர்களுக்கு ஏகாதிபத்தியம் வழங்கும் வெகுமானம்....ஏற்றுக் கொள்கிறேன்.

[சுருக்கிட்டு மடிதல்]

[இந்த கோரக் காட்சியைக் காணக் கூசிய மாலைக் கதிரவன் மலை வாயில் மறைதல். முகிலணங்குகள் கண்ணீர் சொரிதல்]

**[மாற்றம்]**

# களம் எக.

இடம்:— பானர்மென் முகாம்.
காலம்:— இரவு.
உறுப்பினர்:— பானர்மென், பாளையத்தரசர்கள்.

[பாளையத்ததிபர்கள் குழுமி யிருத்தல்]

பானர்:— பார்த்தீர்களா கம்பெனியாரிடம் வாலாட்டிய கட்டபொம்மனின் கோர முடிவை?.... எல்லோரையும் எச்சரிக்கிறேன் இறுதியாக........ கம்பெனியாருக்கு துரோகம் நினைக்கும் எவருக்கும் இதே கதிதான். பாஞ்சாலங் குறிச்சிக்கு ஆதரவு தந்த ஏழாயிரம் பண்ணை. காடல் குடி, குளத்தூர், கோலார் பட்டி, நாகலாபுரம் ஆகிய பாளையங்கள் பறி முதல் செய்யப் பட்டு அயன் தாக்கல் செய்யப் பெற்றுவிட்டன. புதுக்கோட்டைத் தொண்டைமான் கம்பெனிக்குச் செய்துள்ள தொண்டு மகத்தானது. அவருடைய சேவையை மெச்சி, மேன்மை தங்கிய கவர்னர் க்ளைவ் துரை அவருக்குப் பாராட்டுரை வழங்கி யிருப்பதுடன் இதோ இந்தக் குதிரையையும், பொன்னங்கியை யும், ஈராயிரம் வராகன்களையும் பரிசளித் திருக்கிறார்.

[தொண்டைமான் பரிசில் களைப் பெற்றுக் கொள்ளல்.]

கடைசியாக ஒன்று.... தென் பாண்டி நாட்டில் உள்ள நாற்பத்திரண்டு கோட்டைகளும் உடனடியாக இடித்து விடப் பட வேண்டும். எழுபத்தி ரண்டு பாளையங்களிலும் உள்ள சகல படைக கலன்களும் கம்பெனியார் வசம் ஒப்படைக்கப் பட வேண்டும்... இனி ஆயுத உற்பத்தியும் அறவே

கூடாது. இந்த விதிகளை மீறுகிறவர்கள் கடும் நடவடிக்கைக்குள்ளாவார்கள். இது ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் பாதுகாப்புச் சட்டம் பதின்மூன்றாவது விதியின் கீழ் விடுக்கப்படும் பிரகடனம்.

பாளையக்:- அப்படியே செய்கிறோம்!

[பாளையத் ததிபர்கள் ஏமாற்றத்தோடு தத்தம் நாடேகல்]

பானர்:— லெப்டினன்ட் பிலிப்ஸ்!

பிலிப்ஸ்:- Yes Sir!

பானர்:— கன்னிவாடி போன பட்டாளம், இன்னும் திரும்பவில்லையே?

பிலிப்ஸ்:- இல்லை.

பானர்:— Damn it!

பிலிப்ஸ்:- [வெளியே நோக்கி] அதோ! குதிரை வீரனொருவன் வருகிறான்.

[குதிரை வீரன் வந்து வணங்கி நிற்றல்]

கு. வீ:- துரையே பிடிபட்டுவிட்டான் ஊமைத்துரை.

பானர்:- ஹ....ஹ...ஹ....ஓணன் ஓட்டம் வேலியோடு சரி....Damn it!....அது சரி....எங்கே பிடித்தீர்கள் அந்த எத்தனை?

கு. வீ:—விருபாட்சி மலையருகில்.

பானர்:— இலகுவில் அகப்பட்டிருக்க மாட்டானே?

கு. வீ:-அதை யேன் கேட்கிறீர்கள்!.... எங்களை சளைத்து விட்டது. சமாளிக்க முடியவில்லை.....

பானர்:— Damn it!...பிறகு?

கு. வீ.— பார்த்தோம்....வேறு வழியில்லை.... வெண் கொடி வீசினேம்...ஏமாந்து விட்டான்...... மாட்டிக் கொண்டான்.

[மேஜர் மெக்காலே ஊமைத்துரையைக் கொணர்ந்து நிறுத்தல்]

பானர்:— Righto!....மேஜர் மெக்காலே!

மெக்கா:— Yes sir!

பானர்:— கம்பளத்தூ வம்சம்...

மெக்கா:-கருவறுந்து விட்டது.

பானர்:—ஹ...ஹ....ஹ....Damn it! ....[சிப்பாய்களிடம்] இழுத்துச் செல்லுங்கள் இந்த இடு தடியனை! பாளையங் கோட்டைச் சிறையில் தள்ளுங்கள் தடி ராமனை...! விசாரணை பின்னர்!.

[ஊமைத் துரையைச் சிப்பாய்கள் இழுத்துச் செல்லல். அவனேடு துளசிங்கம் பொட்டிப் பகடை மற்றும் பல பாஞ்சை வீரர்களும் சிறைப் படுத்தப் படல்]

[மாற்றம்]



## களம் எஉ

இடம்:- செண்ட் ஜ்யார்ஜ் கோட்டை.
காலம்:- காலை.
உறுப்பினர்: க்ளேவ், மாக்ஸ்வெல், பானர்மென்.

க்ளேவ்:-ஜெனரல் பானர்மென்!

பானர்:-Yes Your Excellency!

க்ளேவ்:—உமது அபார சேவைக்கு எமது ஆழ்ந்த நன்றி. திராவிட நாட்டின் சரித்திரத்தில் நீர் நிரந்தர இடம் பெற்று விட்டீர்.

மாக்ஸ்:—Exactly....ஹி....ஹி...ஹி....

க்ளேவ்:—[பானர்மென் கையைக் குலுக்கியவாறு] தாய் நாடு திரும்பும் உமக்கு, எமது பரிபூரண ஆசி.

மாக்ஸ்:—Exactly....ஹி...ஹி...ஹி...

[பானர்மென் விடை பெற்றுப் பயணமாதல்.]

க்ளேவ்:—கர்னல் மாக்ஸ்வெல்!

மாக்ஸ்:—Yes Your Excellency!

க்ளேவ்:-பானர் மென்னுக்குப் பதிலாக மேஜர் மெக்காலேயைத் தளபதியாக நியமித்து விடுவோம்.

மாக்ஸ்:—Yes My Lord!

[மாற்றம்]



## களம் எரு.

இடம்:- பாளையங்கோட்டைச் சிறைச்சாலை.

காலம்:- காலை.

உறுப்பினர்:- ஊமைத்துரை, துளசிங்கம், பொட்டிப் பகடை.

[ஊமைத் துரை தமையனை நினைந் துருகல்]

ஊமை:- [தனதுள்] அண்ணு!....அண்ணு!!...... தம்பி யுள்ளான் படைக் கஞ்சான் என்பார்கள்! ஆனுல் ஆபத்துக் காலத்தில் தங்களுக்கு உதவ இயலாத பாவி யாகி விட்டேனே! தங்களைப் பிரிந்

தும் இன்னும் உயிரோடிருக்கிறேனே! [ஆவேசமாய்] இருக்கிறேன் அண்ணு இருக்கிறேன்!...... தங்கள் தூய உடலைத் தூக்கிலேற்றிய துர்த்தர்களைத் துவம்சம் செய்யும் வரை இருக்கிறேன்! அண்ணல் தானுபதியாருக்கு அநீதி இழைத்த அயோக்கியர்களை அதம் செய்யும் வரை இருக்கிறேன்! பாலகன் பாதர் வெள்ளையைப் பலி கொண்ட பாதகர்களைப் பழிக்குப் பழி வாங்கும் வரை இருக்கிறேன்! பிறகு நானும் வந்து விடுகிறேன் அண்ணு!

துளசி:- [கண் கலங்கியவாறு] அண்ணு! வருந்தாதீர்கள்! அடுத்து ஆக வேண்டியதை கவனிப்போம்!

ஊமை:-[கண்களைத் துடைத்துக் கொண்டு] தம்பி! பொட்டிப் பகடை, பாஞ்சை போனவன இன்னும் திரும்ப வில்லையே!

துளசி:— [வெளியே நோக்கி] அதோ வந்து விட்டானண்ணு!

[பொட்டிப் பகடை வருகை]

பொட்டி:- சாமீ! வெற்றி! பாஞ்சை வீரர்கள் நம்மைச் சிறை மீட்கப் புறப்பட்டு விட்டார்கள்!

ஊமை:—[வியப்புடன்] அப்படியா?

பொட்டி:-ஆமாம் சாமீ!.... பால் காவடி எடுத்து பண்டாரக் கோலம் தாங்கி வருகிறார்கள் உளவறிந்து போக... இதோ புலிக்குத்தி நாயக்கர் தந்த ஓலை.

[ஊமைத்துரை ஓலையைப் பிரித்துப் படித்தல்]

ஊமை:—உம்.... இன்னும் எட்டே நாட்கள்!

துளசி:—சிறை யுடை படலுத்துக்குத் தானே அண்ணு?

ஊமை:— ஆமாம் தம்பி!

[மாற்றம்]

## களம் எச.

**இடம்:—** மெக்காலே மாளிகை.
**காலம்:—** மாலை.
**உறுப்பினர்:—** மெக்காலே, பாளையக்காரர்கள், ஊமைத் துரை முதலானோர்.

**மெக்கா:—**பாஞ்சாலங் குறிச்சி வீழ்ச்சியைக் கொண்டாட பாளையக் காரர்கள் ஏற்பாடு செய் துள்ள இவ்விருந்தில் கலந்து கொள்வதில் பெரிதும் மகிழ்ச்சி யடைகிறேன். கட்டபொம்மன் தொலைந் தான். எனினும் அடியோடு அகன்று விட வில்லை ஆபத்து........

[சிப்பாய் வருகை]

**சிப்பாய்:—** [பரபரப்போடு] ஆபத்து! ஆபத்து!!

**மெக்கா:—**என்ன உளறுகிறாய்?

**சிப்பாய்:-**பாஞ்சை வீரர் படை யெடுத்து வந்து விட்டார்கள்.

**மெக்கா:-** உனக்கு எப்போதடா பைத்தியம் பிடித்தது?

**சிப்பாய்:—** உண்மைதான் துரையே! முன்பு பண்டாரக் கோலத்தில் வந்தவர்களே தான் இப் போது விறகு விற்பவர்கள் வேடத்தில் வந்திருக் கிறார்கள். சிறையையும் உடைத்து விட்டார்கள்.

**மெக்கா:—**[பீதியுடன்] Oh hell!....... ஊமைத் துரை?

**சிப்பாய்:—**தப்பி விட்டான் துரையே!

**மெக்கா:-** Oh hell!... சிறைக் காவலர்கள்?

**சிப்பாய்:-** சிவலோகம் போய் விட்டார்கள்!

**மெக்கா:-**[திடுக்கிட்டு] Oh hell!.......தலை வலி போய் திருகு வலி!

[ஊமைத்துரை வீரர்களுடன் வரல்]

**ஊமை:-** எவருமே உன்னை இனி எதிர்க்க இயலாது என்று இறுமாந்திருந்தாயே! இப்பொழுது என்ன சொல்கிறாய்?

[வெள்ளை மாதுகள் விதிர் விதிர்த்து வீலிட்டலறல்]

**வெள்ளை மாது:-** Oh! My God! [ஊமைத் துரையிடம்] For Heaven's sake, please leave us alone!

**ஊமை:-** மெக்காலே!.... இந்தப்பிசாசுகள் பெண் உருவில் பிறந்துவிட்ட தோஷத்துக்காக உனக்கு உயிர்ப் பிச்சை அளிக்கிறேன்! தமிழ்நாட்டு தர்மம் தடுக்கிறது உங்கள் தலைகளைப் பந்தாடவொட்டாமல்! போர் முனையில் சந்திப்போம். நான் வருகிறேன்.

[ஊமைத்துரை பாஞ்சை பயணமாதல்]

**மெக்கா:—** Oh hell!... காப்டன் ஷெப்பர்டு!

**ஷெப்:—** Yes Sir!

**மெக்கா:—** பட்டாளங்களை உடனே திரட்டும்! பாஞ்சைமீது மீண்டும் படையெடுப்போம்.

**ஷெப்;—** Righto Sir!

[போதல்]

[**மாற்றம்**]



# களம் எரு.

*இடம்:-* பாஞ்சையில் புதிய கோட்டை.

*காலம்:-* காலை.

*உறுப்பினர்:-* ஊமைத்துரை, துளசிங்கம், புலிகுத்தி நாயக்கர், பொட்டிப் பகடை முதலானோர்.

[ஊமைத்துரை புதிய கோட்டையைப் பார்வையிடல்]

**ஊமை:-** ஹ... ஹ... ஹ... அற்புதமாக அமைத்து விட்டோம் அரணை, அதுவும் ஆறே நாட்களில்!

அசர்ந்து போவான் ஆங்கிலேயன்!....ஆனால்.......
[பழைய நினைவுகள் மனதில் பளிச்சிட] அண்ணா கருத்தையா இல்லாத கோட்டை, நங்கூரம் அறுந்த நாவாய்! அறிஞர் தானாபதி இல்லாத பாஞ்சை, சுடர் அணைந்த தீபம்!

[கண்ணீர் உகுத்தல்]

**புலிகுத்தி:-** அரசே! தானாபதியாரின் தலையைக் கோட்டையில் தூக்கி வைத்த கொடுமையை நினைக்குந் தோறும்....என் உடல் பதைக்கிறது!.... உள்ளம் குமுறுகிறது!

**ஊமை::** புலிக்குத்தி நாயக்கரே! பதற வேண்டாம்! பழிக்குப் பழி!... இரத்தத்துக்கு இரத்தம்!

**துளசி:-** அப்பாதகர்களின் பச்சை ரத்தத்தைப் பட்சிகள் பட்சிக்கும்! அவ் வீணர்களின் உடல்களை விலங்குகள் விருந் துண்ணும்!

[பாகட் (Baggot) என்னும் வெள்ளையனைப் படை வீரர் சிறைப் பிடித்து வரல்]

**ஊமை:-** யார் இவன்?

**வீரன்:-** பரங்கிப் பட்டாளத்தில் ஒரு அதிகாரி. பெயர் பாகட்.

[பாகட் மனைவி ஓடோடி வரல்]

**பாகட் மனைவி:-** அரசே! For heaven's sake, அவரை மன்னித்து விடுங்கள். எனக்குப் பதிப் பிச்சை தாருங்கள்.

[ஓலமிட்டழல்]

**ஊமை:-** [சற்று ஆலோசித்து] அவனைக் கட்டவிழ்த்து விடுங்கள்.

**புலிகுத்தி:-** அரசே! பாம்புக்கா பால் வார்ப்பது?

**ஊமை:-** நாயக்கரே!

"இன்னா செய்தாரை ஒறுத்தல்—அவர் நாண
நன்னயம் செய்து விடல்"

[பாகட்டும் மனைவியும் வணங்கிப் போதல்]

[ஒற்றன் வருகை]

ஒற்றன்:- அரசே! பரங்கிப் பட்டாளம் புற்றீசல் போல் புறப்பட்டு வருகிறது.

ஊமை:- எதிர் பார்த்ததுதான்....கம்பங் காட்டில் குருவி விழுந் திருக்கிறது... வாருங்கள்... வேட்டைக்குப் புறப் படுவோம்.

பொட்டி:- அரசே! அனுமதி கொடுங்கள்....முதலில் அவர்களை வழி மறித்துக் குலைய நல்லூரில் கொலை வாங்கி வருகிறேன்.

ஊமை:- நல்லது. போய் வா பொட்டி!

[பொட்டிப் பகடை சில வீரர்களுடன் போதல்]

[மாற்றம்]



## களம் எசு.

இடம்:- பாஞ்சை போர் முனை.
காலம்:- மாலை.
உறுப்பினர்:- மேஜர் மெக்காலே, ஷெப்பர்டு, பொட்டிப் பகடை' முத்தன் பகடை முதலானோர்-

[கோட்டையை வெள்ளையர் பீரங்கி கொண்டு பலமாகத் தாக்குதல்]

[வெள்ளையர் பாசறையில்]

மெக்கா:- [சலிப்பாக] Oh hell!...அணு வளவு கூட அரண் அசைந்து கொடுக்க வில்லையே!

ஷெப்:-எப்படித்தான் அமைத்தானோ? எதைக் கொண்டு கட்டினானோ?

---

ஷெப்பர்டு—Shepherd.

மெக்கா:- [வெறுப்பாக] மண்ணாங்கட்டி!....காப்டன் ஷெப்பர்டு!...

ஷெப்:- Yes Sir!

மெக்கா:- ஆற்காட்டுப் பட்டாளம் வந்து விட்டதல்லவா?

ஷெப்:- ஆம்! வடக்கு மூலையைத் தாக்கிக் கொண்டிருக்கிறது.

[சிப்பாய் வருகை]

சிப்பாய்:- துரையே கோட்டை, வடக்கு மூலையில் பிளவு கண்டு விட்டது.

மெக்கா:- [மகிழ்ச்சி மேலிட] Oh hell!... அப்படியானல் துணிந்து முன்னேறுங்கள்,

சிப்பாய்:- முடிந்தவரை முயற்சித்தோம். கோட்டைக்குள் நுழைய இயலவில்லை.

மெக்கா: [மகிழ்ச்சி மறைய] Why the hell?

சிப்பாய்:- ஈட்டிகள் எகிறி வந்த வண்ண மிருக்கின்றன. ஆனல் எங்கிருந்து வருகின்றன: எய்தவர் யார் என்று கண்டெ பிடிக்க முடிய வில்லை.

மெக்கா:- [திகைத்தவாறு] Oh hell!

[உதட்டைக் கடித்தல்]

* * *

[கோட்டையில்]

பொட்டி:- மச்சான் முத்தன் பகடை! எப்படி நமது ஏற்பாடு?

முத்தன்:- பிரமாதம்!... நாம் இருக்கு மிடத்தை ஒரு பயல் கண்டு கொள்ள முடியுமா?

[வெள்ளை தளபதி ஒருவன் அணுகல்]

மச்சான் பொட்டிப் பகடை!..., அதோ குதிரை மேலே பாய்ந்து வருகிறான் பார், ஒரு

குண்டன். போடு ஒரு போடு அவன் பொட்டிலே பார்த்து.

பொட்டி:- [கேலியாக] அவருக்கு வைகுண்ட பிராப்தி ரஸ்து!

[பொட்டிப் பகடை ஈட்டியை எறிதல். வெள்ளை தளபதி மடிதல்]

* * *

[வெள்ளையர் பாசறையில்]

மெக்கா:- [அமைதியின்றி] Oh hell!.... எவ்வளவு முயற்சித்தும் முடிய வில்லையே.... காப்டன் ஷெப்பர்டு!

ஷெப்:— yes Sir!

மெக்கா:- Order a retreat atonce!

ஷெப்:— Righto Sir!

மெக்கா:- சமரசத்துக்கு முயற்சிப்போம், ஆர்டர்லி ராமசாமி நாயக்கனைக் கொண்டு.

ஷெப்:— Righto sir!

[வெள்ளையர் புறமிட் டோடல்]

* * *

[கோட்டையில்]

பொட்டி:- மச்சான்! வெள்ளைக் காரன் தலை தெறிக்கக் காத்தாய்ப் பறக்கிறதைப் பார்த்தாயா?....ஹ... ஹ... ஹ....

முத்தன்:- ஆமாம் மச்சான்! பின்னங் கால் பிடரியில பட அல்லவா ஓடுகிறார்கள்!ஹ..ஹ....ஹ...

பொட்டி:- இல்லே. காலை வெட்டித் தோளில் போட்டுக் கொண்டு ஓடுகிறார்கள். ஹ...ஹ....ஹ...

[இருவரும் விலா நோகச் சிரித்தல்]

---

retreat - வாபஸ். Orderly - ஆர்டர்லி.

பொட்டி:— அதோ பார்த்தாயா மச்சான்?

[முத்தன் பகடை பார்த்தல்.]

முத்தன்:— பீரங்கி வண்டி!

பொட்டி:- ஆமாம், அந்தப் பசங்களை எமலோகம் அனுப்பி விட்டு, பீரங்கியைக் கைப்பற்றிக் கொண்டால்......?

முத்தன்:— ஆகா! அருமையான யோசனை.... பிறகு, அதைக் கொண்டே வெள்ளையனைச் சுடு சுடுன்னு சுட்டுத் தள்ளலாம்.

[பீரங்கி வண்டியைக் கைப் பற்றி வரல்.]

[மாற்றம்]



# களம் எள.

**இடம்:—** செண்ட் ஜ்யார்ஜ் கோட்டை.
**காலம்:—** காலை.
**உறுப்பினர்:—** கவர்னர், க்ளைவ், கர்னல் மாக்ஸ்வெல், கர்னல் அக்னியூ, வக்கைய நாயக்கன் முதலானோர்.

[மந்திராலோசனை நடை பெறல்]

**கவர்னர்:—**[அங்கு மிங்கும் உலவியவாறு] மழை விட்டும், தூவானம் விட வில்லையே!

**மாக்ஸ்:—** Exactly....ஹி....ஹி....ஹி....

**கவர்:—** கட்டபொம்மன் தொலைந்தான் என்றிருந்தால் அவன் தம்பி அவனை விட மோசமாய் இருக்கிறானே!

**மாக்ஸ்:—** Exactly........ ஹி....ஹி....ஹி....புலி எட்டடி பாய்ந்தால் புலிக்குட்டி பதினாறடி பாய்கிறது.

[சிப்பாய் கடிதம் கொடுத்துப் போதல்]

[கவர்னர் கடிதத்தைப் படித்தல்]

'அரணைத் துளைக்க ஆன வரை முயன்றோம். முடிய வில்லை. பலத்த உயிர்ச் சேதம். வெற்றி கரமாக வாபஸ் வாங்கி விட்டோம். சமரச முயற்சி யும் பலிக்க வில்லை.

மெக்காலே.

கவர்:- [கோபாவேசமாய்] ஹூம்!... Retreat! ....Treaty!.... மண்ணாங் கட்டி! ஒரு சுண்டைக் காய்ப் பாளையத்தைப் பணிய வைக்கக் கையாலாக வில்லை... கர்னல் மாக்ஸ்வெல்!

மாக்ஸ்:— Yes your Excellency!

கவர்:— இனி மெக்காலேயை நம்பி முக்கா லும் பயனில்லை!...

மாக்ஸ்:— Exactly...ஹி...ஹி...ஹி...

கவர்:— கர்னல் 'அக்னியூ' வை அழைத்து வர உடனே ஆள் அனுப்பும்!

மாக்ஸ்:— Yes my Lord!

[போதல்]

* * *

[கோட்டை வாயிலில்]

[வண்டி ஒன்று வாசலருகில் வந்து நிற்றல்]

சோல்ஜர்:— [வண்டிக் காரனைப் பார்த்து] ஏய்!.... யார் நீ?

வண்டி:— எம் பேரு வண்டிக்கார வக்கைய நாயக்கனுங்க.

---

Treaty—உடன்படிக்கை. Retreat—வாபஸ்.

**சோல்:—** வண்டியில் என்ன பாரம்?

**வக்கை:—** அத்தனையும் இள நீருங்க.

**சோல்.—** [ஆனந்தம் பொங்க] ஓ! தாகத்தைத் தணிக்க அருமையான பானம்.

**வக்கை:—** கேட்கணுமுங்களா? பட்டணத்து துரைமாரெல்லாம்....பாவம்.... இந்த வேனு வெய்யிலிலே நாக்கு வறண்டு போயிருப்பாங்களேன்னு அனுப்பி வைச்சாங்க.

**சோல்:—** யார்?

**வக்கை:—** [தடுமாறிய வாறு] வந்து.... வந்து.... பாளையங் கோட்டை கும்பினி துரை மாருங்க.

**சோல்:—** சரி. இரு. இதோ வந்து விட்டேன்.

[சோல்ஜர் கோட்டைக்குள் போதல். வக்கைய நாயக்கன் நழுவுதல்.]

[கோட்டைக்குள்]

**மாக்ஸ்.-** Your Excellency!... பாளையங் கோட்டையிலிருந்து இளநீர் பார்ஸல் வந்திருக்கிறதாம்.

**கவர்:-** [மகிழ்ச்சி மேலிட] I see!... Tender Cocoanuts?... இனிமையான பானம்! Wonderful Drink!.... இல்லையா?

**மாக்ஸ்:-** Exactly... ஹி...ஹி...ஹி... விடாய் தீர்க்கும் விந்தையான மருந்து.

[இருவரும் வெளியே சென்று கோணிகளைப் பிரித்து நோக்கல். இள நீர்க் காய்களுக்குப் பதிலாக ஆங்கிலேயர்களின் தலைகள் இருப்பதைக் கண்டு துணுக்குறல்]

**கவர்:-** [இரௌத்ரா காரமாய்] ஆ!... பழி தீர்த்துக் கொண்டிருக்கிறான் பஞ்சமா பாதகன்! உடனே கொலைக் களத்தில் நிறுத்த வேண்டும் அந்தக் கொடியவனை!....கர்னல் மாக்ஸ்வெல்!...

**மாக்ஸ்:-** [நடுங்கியவாறு] Exactly!

[கர்னல் அக்னியூ வருகை]

**கவர்:-** கர்னல் அக்னியூ!

**அக்னியூ:-** Yes Your Excellency!

**கவர்:—** [கோபாவேசமாய்] உடனே புறப்படும்! நாட்டின் நாலா திசைகளிலிருந்தும் படை திரட்டும்! அந்த நாசகாலர்களைத் தாக்க........கப்பலில் எறி குண்டுகள் ஏராளமாய் வந்திறங்கியிருக்கின்றன!.... கையோடு எடுத்துச் செல்லும் அவற்றை! கம்பளத்துக் கயவர்கள் மீது கடுமையாகப் பிரயோகியும்!... நிர்த்தாட்சண்யமாய்த் தாக்கும் அந்த நீசர்களை! சிதைத்துச் சிதறடித்துச் சின்னா பின்னமாக்கும் அந்தச் சின்னஞ் சிறு புழுக்களை! 'ஊமைத்துரை கழு வேற்றப் பட்டான்' என்ற செய்தி அதி விரைவில் என் காதில் எட்ட வேண்டும்! போம்!... போம்!!.... போம்!!!

[கர்னல் அக்னியூ பாஞ்சை பயணமாதல்]

**[மாற்றம்]**



## களம் எஅ.

இடம்:- பாஞ்சை கோட்டை.

காலம்:- மாலை.

உறுப்பினர்:- ஊமைத்துரை, சக்கம்மா, துளசிங்கம், பொட்டிப் பகடை.

[வெள்ளையர் கோட்டைக்குள் புகை குண்டு மாரி பொழிந்து அதம் செய்தல். கோட்டைக்குள் அக்கினி கொழுந்து விட்டெரிதல், எங்கணும் புகை மண்டுதல். பெண்களும் சிசுக்களும் அலறித் துடித்தல். வெள்ளையர்கள் கோட்டைக்குள் நுழைதல். வீரர்கள் முழு பலங் கொண்டு போரிடல். வீர மாதர் பலரும் சண்டையிடல்.]

[பொட்டிப் பகடை ஊமைத்துரையிடம் வரல்.]

**பொட்டி:—** *அரசே! ஆபத்து அத்து மீறி விட்டது.*

**ஊமை:—** *அறிவோம்... இரக்கம் என்பது இம்மியும் இல்லாத இரும்பு இருதயம் படைத்த ஈனர்கள்!....ஒரு பாவமு மறியாத பெண்களையும் சிசுக்களையு மல்லவா வதை செய்கிறார்கள்!*

**துளசிங்கம்:—** *இந்தப் பாதகர்கள் எந்த பழி பாவத்துக்கும் அஞ்ச மாட்டார்கள் அண்ணா!*

**ஊமை:—** *ஆம் ...தெரியும்!* [பெண்களை நோக்கி] *மானமே பெரிதென மதிக்கும் மறத்தமிழ் மாதர்களே! மாற்றான் கையிற் சிக்கி விடாதீர்கள்!....... மானத்தை மாசு படுத்திக் கொள்ளாதீர்கள்!....... மாய்த்துக் கொள்ளுங்கள் உங்கள் உயிர்களை!*

[பெண்கள் தீக்குளித் திறத்தல்]

[ஊமைத்துரை மனைவி சக்கம்மா ஓடி ஒளிதல்]

**ஊமை:**—[சக்கம்மாவைத் பார்த்து விட்டு] *யார்? ...நீயா?....சக்கம்மா!*

**சக்க:**—*சுவாமி!*

**ஊமை:**— *எங்கே ஓடுகிறாய்?*

[ஊமைத்துரை அவளைப் பின் தொடர்ந்தோடல்]

**சக்க:**—*அன்னை சக்கதேவியின் ஆலயத்துக்கு.*

**ஊமை:**— *உயிர் மேல் அத்தனை ஆசையா உனக்கு?*

**சக்க:**— *ஆம்!*

**ஊமை:**— [திடுக்கிட்டு] *என்ன?*

**சக்க:**— *ஆனால், ஆசை என் உயிர் மேல் அல்ல...என் கருவில் உருவாகும் கண்மணியின் உயிரின் மேல்.*

**ஊமை:**— *உன்னை விடப் போவதில்லை நான்.*

[ஆவேசமாய்ப் பின் பற்றல்]

**சக்க:**— [தேம்பிய வாறே] *ஐயோ! வேண்டாம் சுவாமி! நம் குலக் கொழுந்தை அழித்து விடாதீர்கள்! கம்பளத்து வம்சத்தின் எதிர்காலச் சுடரை அவித்து விடாதீர்கள்! பாஞ்சைப் பதியின் பட்டத்துத் தோன்றலை பலி கொண்டு விடாதீர்கள்!*

**ஊமை:**- [உணர்ச்சி வசமாக] *ஈரமற்ற ஈனர்கள் உலகில் அவன் உரு வெடுக்கவே வேண்டாம்!... அன்பற்ற அதமர் சூழ் அவனியில் அவன் அவதரிக்கவே வேண்டாம்!.... தூய்மை யில்லா துரோகிகள் நடுவில் அவன் தோன்றவே வேண்டாம்!.... சதிகாரச் சண்டாளர் பூமியில் அவன் சனிக்கவே வேண்டாம்!....... பிறர் துயர் உணராப் பித்தர்கள் மத்தியில் அவன் பிறக்கவே வேண்டாம்!.... வேண்டவே வேண்டாம்!*

**சக்க:**— *சுவாமி!*

**ஊமை:—** கண்ணே! தயாராகிக்கொள்! உன் முடிவுக்கு....உன் இஷ்ட தெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொள்!

[ஆவேசமாய் மனைவியை அணுகல்]

**சக்க:—** ஐயோ! அவசரப் பட்டு விடாதீர்கள் சுவாமி!

[சக்கதேவி ஆலயத்துள் சரண் புகுதல்]

அன்னை பராசக்திமீதாணை! என்னைத் தொடாதீர்கள்!...

**ஊமை:-** [திடுக்கிட்டு] ஆ!.... சக்கம்மா!.... என் கண்ணே! நெறி கெட்ட நீசர்களின் கையிற் சிக்கி விடுவாயே!... களங்கமற்ற உன் கற்பைக் கறைப் படுத்தி விடுவார்களம்மா கயவர்கள்!

**சக்க:-** ஒருக்காலும் முடியாது அவர்களால்! முயன்றால் என் உயிரற்ற உடலைத்தான் தீண்ட முடியும்.

**ஊமை:-** எதிர்பாராமல் மேற்கொண்டு விட்டால்....?

**சக்க:-** அதுவும் சாத்திய மில்லை!...முன்னெச்சரிக்கையாகவே இருக்கிறேன்......., மூன்று முறைகள் இருக்கின்றன என்னைப் பிணமாக்கிக் கொள்ள இதோ பாருங்கள்....கயிறு!....கட்டாரி!!....கடு விஷம்!!!....

**ஊமை:-** [கண் கலங்கி] சக்கம்மா

**சக்க:-** கலங்காதீர்கள்! எப்படியும் என் கற்பைக் காப்பாற்றிக் கொள்வேன் தேவியின் திருவருளால். என் உதிரத்தின் உருவை உலகுக்களித்து விட்டு, தங்களிடம் உடனே வந்து விடுகிறேன் சுவாமி!

[ஊமைத்துரை மனம் தேறிப வனுய்ப் போதல்]

**[மாற்றம்]**

## களம் ௭௯.

இடம்:- செருமுகம்.
காலம்:- இரவு.
உறுப்பினர்:- கர்னல் அக்னியூ. லெப்டினன்ட் பிலிப் பொட்டிப் பகடை, அவன் தாய் முதலானோர்

[வெள்ளையர் பாசறையில்]

அனியூ:- லெப்டினன்ட் பிலிப்ஸ்!

பிலிப்:- Yes sir!

அக்னியூ:- ....எலி வளையை விட்டுக் கிளம்பி விட்டது....ஹ....ஹ....ஹ....

பிலிப்:- Well....மூட்டம் போட்டதில் மூச்சுத் திணறிப் போயிருக்கும்!

அக்னியூ:- ஆம்... இங்கு எங்காவது தான் விழுந்து கிடக்கும்....Listen!.... சந்து பொந்து விடாமல் சல்லடை போட்டுத் தேடுங்கள் அந்த தீவட்டித் தடியனை.

பிலிப்:- Very well sir!

[சிப்பாய்களுடன் போதல்]

* * *

[செருமுகத்தின் மற்றொரு முனையில்]

[பொட்டிப்பகடையின் தாய், தன் மகனைத் தேடி விளக்கொன்றுடன் வரல். பிணங்களைப் புரட்டிப்புரட்டிப் பார்த்தல். கடைசியில், இரண்டு காலும் அற்ற முடமாக இரத்த வெள்ளத்தில் புரண்டு கிடந்த தன் மகனைக் கண்ணுறல்]

மூதாட்டி:- [துணுக்குற்றுத் கதறல்] ஆ!... ஐயோ என் பொட்டி மகனே! உன்னை இந்தக் கோலத்தி லேயா நான் பார்க்கணும்?

பொட்டி:-அம்மா! வருந்தாதீர்கள்!.... [பிரக்ஞை யற்று விழுந்து கிடந்த ஊமைத்துரையைக் காட்டி] அதோ பாருங்கள்!

[மூதாட்டி ஊமைத்துரையைக் கண்ணுறல்]

மூதா:- யாரு?....நம்ம ஊமைத்துரைச் சாமியா?

பொட்டி:- ஆம்! அவரேதான்!....பிரக்ஞை யற்றுக் கிடக்கிறார்.

மூதா:- [அலறியவாறு] ஐயோ!....சீமையாண்ட ராசாதி ராசா!....இப்படிச் சீரழிஞ்சு போனாரோ... ஓ... ஓ.... ஓ....

பொட்டி:- உஸ்....அம்மா அரவம் காட்டாதீர் கள்....ஆபத்து. [விளக்கை ஊதி அணைத்து விட்டு] நமது சாமியை உடனே காப்பாற்றுங்கள்....என் னைப் பற்றிக் கவலைப் படாதீர்கள்....இனி நான் பிழைக்க மாட்டேன்.

மூதா:- [மீண்டும் அலறியவாறு] ஐயையோ மகனே!....உன்னைப் பத்து மாசம் சுமந்து....பாடு பட்டு பெத்து....இந்தப் பாவி....பங்கப்பட லாச்சு தையோ! ஓ....ஓ....ஓ....

[ஒப்பாரி வைத்தல்]

பொட்டி:- [தாயின் வாயைப் பொத்தி] அம்மா நிறுத்துங்கள் உங்கள் ஒப்பாரியை.......பரங்கிக் காரன் காதிலே விழுந்தால் ஊமைத்துரைச் சாமி யைக் கொன்று போடுவான். உம்... அவரை உடனே அப்புறப் படுத்துங்கள்....அணைந்த தீபத் தில் மீண்டும் ஒளியேற்றி வைக்க வேண்டியது உங்கள் பொறுப்பு. [மரணம் நிழலிட] நான்........ நான்....வருகிறேன்.

[பொட்டிப் பகடை மடிதல். மகனுக்கு மௌனமாய் முத்த மிட்டு விட்டு ஊமைத்துரை யுடன் அவ் வீரத்தாய் போர்க் களத்தை விட்டு வெளி யேறல்.]

* * *

[வெள்ளையர் பாசறையில்.]

[காப்டன் ஜேம்ஸ் வருகை]

அக்னியூ:— அகப்பட்டானா அந்த அயோக் கியன்?

பிலிப்:— Well....களம் பூராவும் வலை போட்டு அரித்து விட்டோம்! காண வில்லை அந்தக்கயவனை.

அக்னியூ:— [சிப்பாய்களை நோக்கி] Listen!.... ஒரு வீடு பாக்கி விடாமல் அத்தனையையும் சோதனைபோடுங்கள்...ஒருன் வேலியைத்தாண்டி எங்கே ஓடி விடும்? உயிருடனே அல்லது பிண மாகவோ கொண்டு வாருங்கள் அந்தக் கொடிய வனை! உம்!....போங்கள்.

[மாற்றம்]



# களம் அய.

**இடம்;-** மூதாட்டியின் வீடு.

**காலம்:-** காலை.

**உறுப்பினர்:-** மூதாட்டி, ஊமைத்துரை, சிப்பாய்கள்.

[மூதாட்டி ஊமைத்துரையின் காயங்களுக்கு மருந்திடல்,]

ஊமை:— [கரங் கூப்பி அஞ்சலி செய்தவாறு] தாயே!....தாங்கள் மாபெரும் தியாகி! மகனை விட

மன்னனைப் பெரிதென மதித்தீர்கள்!..........தங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?

மூதா:— சாமீ!.... நீங்க தீர்க்காயுசாய் இருக்கணும்.... அந்த தீவட்டிக் கொள்ளைக் காரங்களை.... திருட்டு வெள்ளைக் காரங்களை.... இரும்பவும் தீர்த்துக் கட்டணும்.

[கதவு தட்டப் படல்]

குரல்:—[அதட்டும் தோரணையில்] ஏய்!........யார் வீட்டிலே?

மூதா:- [ஊமைத்துரையிடம் தாழ்ந்த குரலில்] சாமீ!.... யாரோ சிப்பாய்கள் போலிருக்கிறது.

ஊமை:— [படுக்கை விட்டெழுந்து] விடுங்கள் தாயே....அந்த துரோகிகளின் உடல்களைத் துண்டாடுகிறேன்.

மூதா:—வேண்டாம் சாமீ!....சிட்டுக் குருவியை அடிக்க ராம பாணம் எதுக்குங்க?.... நானே ஒரு கை பார்த்துடறேன்........... நீங்க தயவு பண்ணி பேசாமே படுத்துக்குங்க.

குரல்:- ஏய்!....கதவைத் திற!....உம்....சீக்கிரம்!

[ஊமைத்துரை மீண்டும் படுத்துக் கொள்ளல். மூதாட்டி அவனைப் போர்த்தி விட்டு, ஒப்பாரி வைத்த வாறே வெளியே வரல்]

மூதா;— [ஓலமிட்டவாறு] நான் பெத்த எம் மவனே!....என்னைப் பரதவிக்க விட்டு விட்டு.... பரலோகம் போனயோ....ஓ....ஓ....ஓ....

சிப்பாய் 1:- ஏய் கிழவி!....என்ன? முகாரி பாடுறாய்?

மூதா:- நான் என்னத்தைச் சொல்றதுங்க? எனக்கு ஒத்தைக்கு ஒரு மவன் தானுங்க....[ஒப்பாரியைத் தொடர்ந்து] அவனைத் துள்ளத் துடிக்கப் பறி கொடுத்து... இப்படித் துயரப் படலாச்சுதையோ....ஓ....ஓ....ஓ...

சிப்பாய் 1:- ஐயோ! போதுமே உன் சங்கீத ஆலாபனை!

சிப்பாய் 2:- ராகத்தைக் கொஞ்சம் நிறுத்திட்டுதான் சொல்லேன்!

மூதா:— [கண்களைக் துடைத்துக் கொண்டு] ஒண்ணே ஒண்ணு.... கண்ணே கண்ணுன்னு கருவேப்பிலை நாத்து போல வளர்த்தேனுங்க... மாரியாத்தாளுக்குக் கண் அவிஞ்சுதான் போச்சுதுங்க.... இல்லேன்னு என் வயத்தெரிச்சலே இப்படிக் கொட்டிக்குவாளா?....

சிப்பாய் 1:- [குறுக்கிட்டு] சுத்தி வளைக்காமே சுருக்கமாய்த்தான் சொல்லி அழேன்!

சிப்பாய் 2:- ஊம் ஹூம்!.... அழவேண்டாம்.... சொன்னால் போதும்....நீ வேறே திரும்பவும் சுருதி கூட்டிடப் போறே!....

மூதா:- இருந்திருந்து அம்மன், எம் புள்ளே கிட்டே தானுங்களா வந்து விளையாடணும்?

சிப்பாய் 1:- அம்மனா?....[ஐயப்பாட்டுடன்] அப்படின்னா....

மூதா;- ஆமாங்க........பெரியம்மை விளையாடிதானுங்க எம் புள்ளையைக் கொண்டுபோயிட்டாள்.

சிப்பாய் 1:- [திடுக்கிட்டு] ஆ!....வைசூரியா?.... அதுக்குத்தான் வாசலிலே வேப்பிலே சொருகி வைச்சிருக்கா?

மூதா:- ஆமாங்க....[படுக்கையைக் காட்டி] என் செல்ல மவன் கிடக்கிற கிடையைக் கொஞ்சம் கிட்டே வந்துதான் பாருங்களேன்.

**சிப்பாய் 2:-** அம்மாடி!.... ஆபத்து!... அண்ணே! வா போகலாம்.

[இருவரும் போகத் திரும்பல்]

**மூதா:-** என்னங்க?...கொஞ்சம் நில்லுங்க... உங்களுக்குக் கோடிப் புண்ணியம்......கொஞ்சம் ஒத்தாசை பண்ணுனீங்கன்னு சுடுகாட்டுக்கு....

**சிப்பாய் 1:-**[இடை மறித்து] ஆமா.... அப்புறம் நாங்களும் சுடுகாட்டுக்கே போயிட வேண்டியது தான். [மற்றவனைப் பார்த்து] டேய் தம்பி!...... என்னடா இது? கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது மாதிரி.

**சிப்பாய் 2:—** ஆமாண்ணே!........ ஊமைத்துரையைத் தேடி வந்தால் எமனெல்ல எதிராலே வாரான்.

**மூதா:—** ஏங்க?... இண்ணைக்கு அமாவாசைங்களா?

**சிப்பாய் 1:—** ஏன் கிழவி அப்படிக் கேட்கிறே?

**மூதா:—**[கேலியாக] ஊமைத்துரைச் சாமியைத் தேடி சரியான இடமாய்ப் பார்த்து தான் வந்திருக்கிங்க....ஒரு வேளை...?

**சிப்பாய் 1:-** பார்த்தியா தம்பி? நம்மைப் பயித்தியமா யில்ல அடிக்கிறா இந்த பாட்டி?

**சிப்பாய் 2:—** ஏய் கிழம்!....உன்னையும் உன் மகனோடேயே அனுப்பி வைச்சுடுவேன் ஜாக்ரதை!

**மூதா:—** அப்படி மட்டும் செஞ்சிங்கன்னு, ரொம்ப உபகாரமா யிருக்குமுங்க.

**சிப்பாய்:—** துணிச்சலைப் பாரேன் கிழத்துக்கு!

**மூதா:—** [அலட்சியமாக] சாகத் துணிஞ்சவளுக்கு சமுத்திரம் முழங் காலளவு. எனக்கு உயிர் ஒண்ணும் வெல்லமில்லீங்க....[சிப்பாய்களைச் சுட்டிக் காட்டியவாறு] ஏங்க?......அன்ன மிட்ட வீட்டிலே

கன்னா மிடுகிற அயோக்கியப் பசங்க நிறைஞ்ச உலகத்திலே இருக்கிறதை விட சந்தோஷமாய்ச் சாகலா மில்லீங்களா?

சிப்பாய் 1:- ஹூம்! காடு வா வா என்கிறது... வீடு போ போ என்கிறது.......ஏன் பேசமாட்டாய் அப்படி?

மூதா:— பின்னே என்னங்க?..........நீங்களே சொல்லுங்க..........நம்ம ஊமைத்துரைச் சாமியை வெள்ளைக் காரங்க கிட்டே புடிச்சிக் கொடுக்கணும்னு [சிப்பாய்களைச் சுட்டிக் காட்டியவாறு] சில கூலிக்கு மாரடிக்கிற குண்டப் பசங்க அலையருன்களாம்.... அது சரி.... நீங்க யாரு?....சாமியை எதுக்காகத் தேடுறீங்க?

சிப்பாய் 2:- [கோபாவேசமாய்] கிழட்டுப் பிணமே!....கிண்டலா பண்ணுகிறாய்?........உன்னை என்ன செய்கிறேன் பார்?

[மூதாட்டி மீது கட்டாரியை எறிதல். அவள் காயமேற்றல்]

மூதா:- [தன் உடலில் தைத்த கட்டாரியை உருவிக் கொண்டு] நான் சாகும் முன்னாடி ஒரு துரோகியையாவது தொலைச்சுடறேன்.... இந்தா பிடி!

[சிப்பாய் மீது கட்டாரியைவீசல் சிப்பாய் காயமுற்று வீழல். மூதாட்டி தள்ளாடியவாறு தரையில் சாய்தல். இதுகண்ட ஊமைத் துரை சீறியெழல். சிப்பாய்கள் விதிர் விதிர்த்தல்]

ஊமை:- [சிப்பாய்களை நோக்கிக் கோபாவேசமாய்] அட சண்டாளர்களே! அரசாபிமானமே உருக்கொண்ட என் அருமை அன்னையின் உயிரை அழித்து விட்டீர்களேயடா!....நீங்கள் உலகத்தில் இருப்பதே தவறு.

[இரு சிப்பாய்களையும் வீழ்த்தல்]
[முதாட்டியை மடியில் சாய்த்துக் கொள்ளல்]

ஊமை:- தாயே!

முதா:- சாமீ!

ஊமை:- வீர மாதா! பாஞ்சாலங் குறிச்சியின் சோக வரலாற்றிலே தங்கள் மைந்தனுடன், தாங்களும் என்றும் மழியா இடம் பெற்று விட்டீர்களம்மா!

[முதாட்டி மடிதல்]

அம்மா!.... அம்மா!.... அம்மா!...

[அலறி அழல்]
[முதாட்டிக்கு ஈமக் கடன்களைச் செய்து முடித்து விட்டு ஊமைத்துரை சிறுவயல் நோக்கிப் பயணமாதல்]

[மாற்றம்]



## களம் அக.

இடம்:— வெள்ளையர் முகாம்.
காலம்:— காலை,
உறுப்பினர்:- கர்னல் அக்னியூ, லெப்டினன்ட் பிலிப், சக்கம்மா முதலானோர்.

அக்னியூ:— லெப்டினன்ட் பிலிப்.

பிலிப்:— Yes sir!

அக்னியூ:- அடிபட்டு வீழ்ந்த பறவை மீண்டும் சிறகடித்துப் பறந்து விட்டது.

---

சிறுவயல்—சிவகங்கைச் சீமையை யாண்ட மருது பாண்டியர்களின் தலை நகர். காளையார் கோவிலை அடுத்து எட்டாவது மைலில் இருக்கிறது.

பிலிப்:—எங்கே போய் விடும்? கடல்மேல் தவிக்கும் பறவை எப்படியும் கப்பலின் கூம்புக்கு வந்து தானே ஆக வேண்டும்?

அக்னியூ:— அது சரி.... [ஆலோசித்தவாறு] எங்கேதான் போயிருப்பான் எத்தன்?

பிலிப்:—[தலையைச் சொறிந்தவாறு] அதுதானே தெரியவில்லை.

[ஊமைத்துரையின் மனைவி சக்கம்மா அழைத்து வரப் படல்.]

அக்னியூ;— எங்கே உன் கணவன்?

சக்கம்:— என்னிடம் கேட்டால்...?

பிலிப்ஸ்:— தாய் அறியாத சூலா?

சக்கம்:— தன் கண்ணைத் தானே குத்திக் கொள்வதா?

பிலிப்:-[சிந்தித்தவாறு] உம்...புகை போட்டு ஊதினல் காய், தானே கனிந்து விடுகிறது.

சக்கம்:— இலவு என்ருவது பழுக்குமா?

பிலிப்:—அடி மேல் அடி வைத்தால் அம்மியானுலும் நகர்ந்தே யாக வேண்டும்.

சக்கம்:- கற்றாண் உடைந் தொழியுமே தவிர தளர்ந்து வளையாது

பிலிப்:- நாசியை அழுத்தினல் வாய் திறக்காமலா போய் விடும்?

சக்கம்;- அதற்குள் மூச்சே நின்று விட்டால்?

அக்னியூ.- [குறுக்கிட்டு] விட்டுத் தள்ளும் லெப்டினனட் பிலிப்! விழலுக்கு ஏன் வீணாய் நீர் இறைக்கிறீர்? அத்தனையும் வியர்த்தம்.

**சக்கம்:-** உவமானம் தவறு.'பறவைக்கு அதன் கண் முன்னே கண்ணி வைப்பது விருதா' என்று சொல்லும். மலைப் பாம்பு மகுடி நாதத்தில் மயங்கி விடாது என்று வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளும்.

**அக்னியூ:-** [கோபாவேசமாய்] போதும் நிறுத்து!... லெப்டினன்ட் பிலிப்! இவளை விலங்கிட்டு வேலூர் சிறைக்கு அனுப்பி வையும்.

**சக்கம்:-** சிறைப் பட சம்மதிக்கிறேன் என் செல்வத்துக்காக.... என் வயிற்றில் வளரும் சிசுவுக்காக... ஆனால்.... ஆடவர் யாரும் என்னைத் தீண்டி விலங்கிட முயன்றால்....? என் பிணத்தைத் தான் காண முடியும் உங்களால். உங்கள் அகராதிப் படியே பார்த்தால் கூட நான் ஒரு அரசியல் கைதி....கௌரவமாக நடத்தப்பட வேண்டியவள்...........மேலும் வெள்ளைக்கார பாகட்டின் மனைவியை என் கணவர் எப்படி நடப்பித்தார்?...... பெண்ணினத்துக்கு என் தலைவர் தந்த மரியாதையினால் அல்லவா மெக்காலேயின் தலையும் தப்பியது?

**அக்னியூ:-** [குறுக்கிட்டு] லெப்டினன்ட் பிலிப்.

**பிலிப்:-** Yes sir.

**அக்னியூ:-** [இரகசியமாக] இவளை கௌரவமாகவே நடப்பியுங்கள்!....தவறேதும் நேர்ந்தால் வெகுண்டு வெறிகொண் டெழுந்து விடுவான் ஊமையன்...!ஜாக்கிரதை!

**பிலிப்** - Very well sir.

[சக்கம்மா சிறைக் கனுப்பப் படல்]

[குதிரை வீரன் வருகை]

**கு. வீ:—** துரையே! ஊமைத்துரை சிறு வயலுக்குப் போய் விட்டான்.

**அக்னியூ:-** [வியப்புடன்] அப்படியா?

கு. வீ:— ஆம். மருதுபாண்டியர்களின் உதவியுடன், பெரும் படையொன்றும் திரட்டிவிட்டான் நம்மை எதிர்க்க.

அக்னியூ:-[அலட்சியமாய்] ஹூம்! குறுமுயல்கள் கூடிக்கொண்டால் என்ன? குடியா முழுகி விடும்? யானையின் பாதம் பட்டால் அவை சிதைந்து சிதறுண்டுபோய் விடமாட்டாவா?.... காப்டன் ஜேம்ஸ்!

பிலிப்:— Yes sir!

அக்னியூ:- அந்தக் கொசுக் கூட்டத்தை நசுக்கிப் பொசுக்கப் போகலாம் வாரும்.

பிலிப்:- Very well sir!

[போதல்]

[மாற்றம்]



# களம் அ௨.

இடம்:- சிறு வயல்.

காலம்:- காலை,

உறுப்பினர்:- மருது சகோதரர்கள், ஊமைத்துரை துளசிங்கம் முதலானோர்.

ஊமை:— மருது பாண்டியர்களே!.... தாங்கள் காட்டும் அளவிலா அன்புக்கு என் இதயங்கனிந்த நன்றி

வெள்ளை மருது:- கம்பளத்துத் துரையே!...... நற்பணியாற்ற முன் வருவோரை ஆதரிக்க வேண்டியது எம்போன்றோர் கடமை யல்லவா?... கடமையைச் செய்கிறோம்... அவ்வளவு தான்.

சின்னமருது:- மேலும், அடுத்த வீடு தீப் பற்றியெரியும்போது, நாங்கள் 'யாருக்கு நேர்ந்த விபத்தோ' வென்று பாராமுகமாயிருந்து விடலாமா?

---

மருது சகோதரர்கள் - வெள்ளை மருது சின்ன மருது.

துளசி:— எல்லோருமே இப்படிப் பெருந் தன்மையோடு நடந்திருந்தால் இந்த அவல நிலை நேர்ந்தே இருக்காது.

[ஒற்றன் வருகை.]

ஒற்றன்:—சாமீ!....பரங்கிப் பட்டாளம் புறப் பட்டு வருகிறது.

ஊமை.— வரட்டும்! [மருது பாண்டியரைப் பார்த்து] ....பாண்டியரே!........ புறப்படுவோமா?.... முதலில் திருப்பூவனத்திலேயே மறித்துத் தாக்கு வோம்!

மருது:— ஆம்! அதுதான் சரி! காளையார் கோவிலை அணுக விட்டு விடக் கூடாது அவர்களை.

ஒற்றன்:-சாமீ!....ஒரு சுப செய்தி!....கம்பளத்து வம்சம் அரும்புவிட்டிருக்கிறது. தாங்கள் ஒரு ஆண் மகவுக்குத் தந்தை யாகி விட்டீகள்.

ஊமை:—[மகிழ்ச்சியோடு] ஆ!... சக்கம்மா!.... [குழந்தையை மானசீகமாய்க் கற்பனை செய்து கொண்டு] என் அருமைச் செல்வமே! உன்னைக் கையிலேந்தி மகிழ இந்தப் பாவிக்குக் கொடுத்து வைக்க வில்லையே!

[பரிவாரங்கள் யுத்த சன்னத் தராய்க் களமேகல்]

[மாற்றம்]



---

ஊமைத்துரையின் மனேவி சிறையில் ஈன்றெடுத்த புதல்வனின் வழி வந்தவர்களே தற்காலம் செக்காரக்குடியில் வாழ்ந்து வரும் உயர்திரு. சுப்பிரமணியதுரை வகையரு ஆவர்.

# களம் அரு.

இடம்:— காளையார் கோவிலை அடுத்த காட்டில் வெள்ளையர் பாசறை.

காலம்:— காலை.

உறுப்பினர்:— கர்னல் அக்னியூ, காப்டன் ஜேம்ஸ்.

[ஊமைத்துரை, மருது பாண்டியர் ஆகியோர் பரிவாரங்களுடன் வெள்ளையர் பாசறையைச் யைச் சூழ்ந்து பலத்த தாக்குதல் நிகழ்த்தல்.]

அக்னியூ:— காப்டன் ஜேம்ஸ்!

ஜேம்ஸ்.— Yes sir!

அக்னியூ:— [மோவாயைத் தடவியவாறே] சிறு வயலில் சிறந்த வெற்றி கண்டோம்........இப்போது காளையார் கோவிலில் நிலை தலை கீழாக மாறி விட்டதே!

ஜேம்ஸ்:- Yes sir!... இன்ருேடு அறுபது நாட்களாகி விட்டன நாம் இங்கு முகாமிட்டு....... அணுவளவும் பயனேற்பட வில்லை......ஊருக்குள் அடி எடுத்து வைக்க விட மாட்டான் போலிருக்கிறதே!

அக்னியூ:-என்ன செய்வது?........சாலை போட முயற்சித்தோம்....அதைக் கூடக் கைவிட நேர்ந்து விட்டது.

ஜேம்ஸ்:—[ஆலோசித்தவாறு]உம்... இதே நிலை இன்னும் நீடித்தால் என்ன ஆவது?

[பிலிப் வருகை]

பிலிப்:— [உள்ளே பிரவேசித்தவாறு] இதோடு எண்பத்தேழாகி விட்டது.

அக்னியூ:- அதற்குள் அவ்வளவு குண்டு தீர்ந்து போய் விட்டதா என்ன?

பிலிப்:- [திகைப்புடன்] குண்டா?... இல்லை. நான் குறிப்பிடுவது சீத பேதியில் மடிந்த வீரர்களை...

அக்னியூ:- [திடுக்கிட்டு] Oh!... அத்தனை பேரா போய் விட்டார்கள்?

பிலிப்:—ஆம்!... வயிற்றுப் போக்கிலே போனவர்கள் பட்டியல் வேறு தனியாக இருக்கிறது.

அக்னியூ:- Oh my God! அது எத்தனை?

பிலிப்:- Well...முந்தினதைப் போல் இரண்டு மடங்கு இருக்கும்.

அக்னியூ:- Oh my good God!.... அப்புறம் சண்டையில் இறந்தவர்கள்?

பிலிப்:— Well!.... அதைப் போல் இன்னொரு மடங்கு.

அக்னியூ:- Oh my God Almighty!.... அப்படியானால் இனியும் தாமதிக்க லாகாது... உடனே பின் வாங்கி விடுவோம்!

பிலிப்:— Well.... அதற்கும் வழி யில்லையே!

அக்னியூ:- ஏன்?

பிலிப்:— Well.... நாலா புறமும் நம்மை வளைத்துக் கொண்டு விட்டார்கள்!

அக்னியூ:- Oh my good God Almighty!

பிலிப்:- Well... உடம்பு வேண்டாம்! கையை விட்டால் போதும் என்ற நிலை ஏற்பட்டு விட்டது இப்போது.

அக்னியூ:— [சிந்தித்தவாறு] அப்படியானால் ஒன்று செய்வோம்.

பிலிப்:—What is it sir?

அக்னியூ:- எவனாவது ஒரு Fifth Columnist ஐப் பிடித்து, அவன் மூலமாய் ராமனாதபுரத்துக்கு உதவி கோறி கடிதம் அனுப்பினால்...?

பிலிப்:—Well....அப்படியும் செய்து பார்த்து விட்டார் வெல்ஷ் துரை....

[வெல்ஷ் வருகை]

அதோ அவரே வந்து விட்டாரே!

அக்னியூ:—[வெல்ஷை நோக்கி] என்ன நடந்தது?

வெல்ஷ்:—பத்து வராகன் கூலி பேசி ஒருவனை அனுப்பி வைத்தேன்.

அக்னியூ:—Good Heavens!....Ten Sovereigns?

வெல்ஷ்:-Yes!...முன் பணமாக ஐந்து வராகன் தான் கொடுத்தேன்.

அக்னியூ:—உம்... அப்புறம்?

வெல்ஷ்:—மீதியை அவன் திரும்பி வந்ததும் தருவதாகச் சொல்லி யிருந்தேன்.

அக்னியூ:—[முக மலர்ச்சியோடு] நல்ல ஏற்பாடு தான்!...என்ன வாயிற்று?

பிலிப்:— [குறுக்கிட்டு] Well... ஐந்து வராகன் மிச்சமாயிற்று.

அக்னியூ:- [கோபமாய்] What the devil do you mean?

பிலிப்:- போனவன் திரும்பவே இல்லை.

அக்னியூ:- எத்தன்!....ஏமாற்றி யிருப்பான்.

பிலிப்:- இல்லை! எமலோகம் போய் விட்டான்.

ஜேம்ஸ்:— [குறுக்கிட்டு] நம்மை விடக் கொஞ்சம் முந்திக் கொண்டிருக்கிறான்... அவ்வளவுதான்.

அக்னியூ:—What the devil do you mean?

---

வெல்ஷ்—Welsh. பட்டாளத்தில் சம்பள பட்டுவாடா செய்யும் அலுவலராகப் பணியாற்றியவர். போர் பற்றிய சம்பவங்களை நேரில் கவனித்து அவ்வப்போது எழுதி வந்தவர்.

**ஜேம்ஸ்:**-Sir!...வெள்ளம் தலைக்கு மேல்போய் விட்டது. இனி நாமும் பரலோகத்துக்குப் பய ணப்படச் சித்தமாக வேண்டியதுதானே!...

[குதிரை வீரன் வருகை]

**அக்னியூ:**- [ஆவலுடன்] என்ன சேதி?

**கு. வீ:**— துரையே! உதவிக்குப் பட்டாளம் வந்து கொண்டிருக்கிறது.

**அக்னியூ:**- [மகிழ்ச்சியோடு] Oh! Thank God!.... தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்... இனி பய மில்லை... துணிந்து அடிக்கலாம்!... ஆனால்...? பகை வனுக்குஆள் பலம் மிகவும் அதிகமாகிவிட்டதே!....

[ஆலோசித்தல்]

**ஜேம்ஸ்:**-Sir!..........எனக் கொரு யோசனை தோன்றுகிறது.

**அக்னியூ:**— என்ன?

**ஜேம்ஸ்:**- இப்போது சிவகெங்கை ஜமீனை யாளும் மருது brothers அரச வம்சத்தினர் அல்ல.

**அக்னியூ:**- தெரியும்...சேர்வைக் காரரா யிருந் தவர்கள். கடைசி மறவ மன்னன் வாரிசு இன்றி இறந்ததனல் ஜமீன் அவர்கள் வசமாகிவிட்டது... அது சரி.... அதற்கும் ஆள் பலத்தைக் குறைப் பதற்கும் என்ன சமபந்தம்?

**ஜேம்ஸ்:**- சம்பந்தம் இருக்கிறது.... இதைக் கேளுங்கள்....

[அக்னியூவிடம் காதுக்குள் ஏதோ ஓதுதல்]

**அக்னியூ:**- [துள்ளிக் குதித்து] Oh my God Almighty!... Tremendous Diplomacy!.... அப்

---

சேர்வைக்காரர் — சேனைத்தலைவர்.

படியே செய்து விடுவோம், இந்தக் காட்டை விட்டுவெளியேறியதும் முதல் அலுவல் அதுதான்.

ஜேம்ஸ்:— பட்டாபிஷேகத்தைச் சோழவரத்தில் நடத்தி விடுவோமா?

அக்னியூ:— Righto!

[உதவிப் பட்டாளம் வந்து விடவே வெள்ளையர் தங்கள் எதிரிகளை மேற்கொள்ளல்]

[மாற்றம்]



## களம் அசு.

*இடம்:*— காளையார் மங்கலம்,

*காலம்:*— இரவு.

*உறுப்பினர்;*—ஊமைத்துரை, மருது சகோதரர் முதலானோர்.

ஊமை:— பார்த்தீர்களா, பரங்கியின் பிரித்தாளும் தந்திரம் எவ்வளவு அற்புதமாக வேலை செய்து விட்டதென்று?

வெள்ளைமருது:- ஆம்!.... ஆனல் 'மற்றொருவனுக்குப் பட்டங் கட்டி விட்டானே' என்றல்ல நான் வருந்துவது.

ஊமை:— அறிவோம்........நெருக்கடியான நிலையைச் சமாளிப்பதற்காகத்தானே தாங்கள் அரசேற்றீர்கள்,

சின்னமருது:—வெள்ளையன் சந்தர்ப்பத்தைப் பக்குவமாகப் பயன்படுத்திக்கொண்டான்....மக்க

காளையார் மங்கலம் — காளையார் கோவிலை அடுத்த ஒரு சிற்றூர்,

ளெல்லாம் மாற்ருன் பக்கம் சரிந்து விட்டனர் இப்போது.

**வெள்ளைமருது:**— அது போதாதென்று நமது தலைகளுக்கு விலை வேறு நிர்ணயித் திருக்கிருன்...

**சின்னமருது:**—இப்போது இரு நூறு வீரர்கள் தான் இருக்கிருர்கள் நம் வசம்!

**ஊமை:**— இருக்கட்டும்!........வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்!....அவர்களைக்கொண்டே வெள்ளையன் தலைகளை முடிந்த வரை வெட்டிச் சாய்ப் போம்!.... இந்த மங்கலம் கிராமத்திலேயே நமக்கு மரண ஓலை வந்தாலும் மனமார மகிழ்ச்சியோடு வரவேற்போம்........வாருங்கள் போவோம்!

[போதல்]

[வெள்ளையர் முன்னறிவிப்பெதுவுமின்றி ஊமைத்துரையின் பரிவாரங்களை இரவிலே சூழ்ந்து தாக்குதல். பெரும் போர் நிகழ்தல். வெள்ளை மருது குண்டு பட்டு வீழ்தல். இது கண்ட ஊமைத்துரையும் துளசிங்கமும் வீராவேசமாய்ப் போரிட்டுப் பின் மயங்கிச் சாய்தல். தலைவர்களை வெள்ளையர் சிறைப்படுத்தல்]

**கர்னல் அக்னியூ:**— காப்டன் ஜேம்ஸ்!

**ஜேம்ஸ்:**—Yes sir!

**அக்னியூ:**— ஊமைத்துரையையும் அவன் சகோதரனையும் பாஞ்சாலங்குறிச்சி பழைய பீரங்கி மேட்டில் தூக்கி விடுங்கள்.

**ஜேம்ஸ்:**— All right sir!

**அக்னியூ:**— வெள்ளை மருதுவையும்... சின்ன மருதுவையும் அவன் மகன் சிவஞானத்தையும் திருப்பத்தூர்க் கோட்டையில் கழுவேற்றுங்கள்!

**ஜேம்ஸ்:**— All right sir!....... சிவஞானம் தம்பி துரைசாமியை?

**அக்னியூ:**— அந்தப் பொடியனையும், ஊமைத் துரைக்கு உடந்தையாயிருந்த எழுபது கழுதைகளையும் நாடு கடத்த உத்தரவிடுகிறேன். உடனே பினங்குக்குப் பயணமாகட்டும் அந்தப் பித்தர்கள்.

**ஜேம்ஸ்:**—All right sir!

**அக்னியூ:**- [வெற்றிப் பெருமிதத்துடன்] ஏகாதிபத்தியத்துக்கு எதிராய் திராவிட நாட்டில் தலை தூக்கிய தீய சக்திகள் அத்தனையும் இத்தோடு சமாப்தி!.... இன்றே சமாதி!....ஹ....ஹ....ஹ... ஹ....

[கோரமாய்ச் சிரித்தல்.]

[நாடகம் முடிவுறல்.]

**[மாற்றம்]**



## களம் அரு.

இடம்:- திருவிட நல்லூர் தன்மானக் கழகக் கட்டிடம்

காலம்:- இரவு.

உறுப்பினர்: கழக நடிகர்கள், தலைவர் முதலானோர்.

[விழாத் தலைவர் முடிவுரை நிகழ்த்தல்.]

இங்ஙனம் சோக மயமாய் முடிவுற்றது ஒப்பற்ற தேசாபிமானிகளின் வீர சரிதை! ஏகாதிபத்தியம் என்னும் உலைக் கூடத்திலே, அடக்குமுறை என்னும் சம்மட்டி கொண்டு அடித்து நொறுக்கப்பட்டன, நமது விலை மதிக்கொணு தன்மான மாணிக்கங்கள். கட்டபொம்மன் காலமணலில் என்றோ புதையுண்டு போயினும், இன்றும் அவன் நம்மிடையே வாழ்கிறான்! அவன் அன்று மூட்டி வைத்த தன்மான உணர்ச்சிக் கனல் இன்று கொழுந்து விட்டெரியத் தொடங்கி விட்டது.

மற்றவன் ஆதிக்கத்தை முற்றிலுமாய் முறியடிப்பதோடு மாத்திரமின்றி, சுரண்டல், சுயநலம் ஆகிய வற்றிற்கும் இறுதிச் சடங்குகளை நிறைவேற்றி, வறுமை,...பசி,... வேலை யில்லாத் திண்டாட்டம்...... இன்னும் இவை யன்ன பிற இன்னல்களினின்றும் விடுபட்டு,உயர்வு தாழ்வற்ற சமதர்ம சமுதாயத்தை என்று காண்கிறோமோ, அன்றே நாம் பூரண சுதந்திரம் பெற்றவர்க ளாவோம். மறைந்த தேசீய வீரர்கள் விட்டுச் சென்ற புனிதப் பணியினைப் பூர்த்தி செய்தவர்களு மாவோம்.

...இப்போது சொல்லுங்கள், நாங்கள் மேற்கொண்டுள்ள பணி எத்தனை நியாய மானது........

எத்துணை அவசியமானது... எவ்வளவு போற்றத் தக்கது...என்று.

[பலத்த ஆரவாரத்துக்கிடையே தலைவர் அமர்தல்]

கூட்டத்தில் ஒரு குரல்:— தேசபக்தன் கட்டபொம்மன் நாமம்........!

மற்றவர்கள்:— வாழ்க! வாழ்க!! வாழ்க!!!

குரல்:—திருவிட நல்லூர் தன்மானக் கழகம்....!

மற்றவர்கள்:— வளர்க! வளர்க!! வளர்க!!!

குரல்:— சமதர்ம சமுதாயம்!....

மற்றவர்கள்:—மலர்க!.... மலர்க!!.... மலர்க!!!

[மக்கள் கட்டபொம்மனுக்கு ஞாபகச் சின்னம் நிறுவ நிரம்ப நிதி யளித்துத் தத்தம் வீடேகல்.]

[முற்றும்]

[நலம்.]

ஸ்ரீ வாணி விலாசம் பிரஸ், திருப்பாதிரிப்புலியூர்.

